இதோ, என் தாயும் என் சகோதரரும்
50 இவர்களே! பரலோகத்திலிருக்கிற என்
பிதாவின் சித்தத்தின்படி செய்கிறவன்
எவனோ, அவனே எனக்குச் சகோதர
னும் சகோதரியும் தாயுமாய் இருக்கி
றான் என்றார்.
13 இயேசு அன்றையதினமே வீட்டி
லிருந்து புறப்பட்டுப் போய், கடலோ
2 ரத்திலே உட்கார்ந்தார். திரளான
ஜனங்கள் அவரிடத்தில் கூடிவந்தபடி
யால், அவர் படவில் ஏறி உட்கார்ந்
தார்; ஜனங்களெல்லாரும் கரையிலே
நின்றார்கள்.
3 அவர் அநேக விசேஷங்களை உவ
மைகளாக அவர்களுக்குச் சொன்னார்:
கேளுங்கள், விதைக்கிறவன் ஒருவன்
4 விதைக்கப் புறப்பட்டான். அவன்
விதைக்கையில், சில விதை வழியருகே
விழுந்தது; பறவைகள் வந்து அதைப்
5 பட்சித்துப் போட்டது. சில விதை
அதிக மண்ணில்லாத கற்பாறை இடங்
களில் விழுந்தது; மண் ஆழமாயிராத
தினாலே அது சீக்கிரமாய் முளைத்தது
6 வெயில் ஏறினபோதோ, தீய்ந்துபோய்,
வேரில்லாமையால்உலர்ந்துபோயிற்று.
7 சில விதை முள்ளுள்ள இடங்களில்
விழுந்தது; முள் வளர்ந்து அதை நெருக்
8 கிப் போட்டது. சில விதையோ நல்ல
நிலத்தில் விழுந்து, சிலது நூறாகவும்,
சிலது அறுபதாகவும், சிலது முப்பதாக
9 வும் பலன் தந்தது. கேட்கிறதற்குக்
காதுள்ளவன் கேட்கக்கடவன் என்றார்.
10 அப்பொழுது, சீஷர்கள் அவரிடத்
தில் வந்து: ஏன் அவர்களோடே உவ
மைகளாகப் பேசுகிறீர் என்று கேட்
11 டார்கள். அவர்களுக்கு அவர் பிரதி
யுத்தரமாக: பரலோகராஜ்யத்தின் ரக
சியங்களை அறியும்படி உங்களுக்கு அரு
ளப்பட்டது, அவர்களுக்கோ அருளப்
12 படவில்லை. உள்ளவன் எவனோ அவ
னுக்குக் கொடுக்கப்படும், பரிபூரண
மும் அடைவான்; இல்லாதவன்
எவனோ அவனிடத்தில் உள்ளதும்
13 எடுத்துக்கொள்ளப்படும். அவர்கள்
கண்டும் காணாதவர்களாயும், கேட்டும்
கேளாதவர்களாயும், உணர்ந்துகொள்
ளாதவர்களாயும் இருக்கிறபடியினால்,
நான் உவமைகளாக அவர்களோடே
பேசுகிறேன். ஏசாயாவின் தீர்க்கதரி 14
சனம் அவர்களிடத்தில் நிறைவேறுகி
றது; அதாவது: காதாரக்கேட்டும் உண
ராதிருப்பீர்கள்; கண்ணாரக் கண்டும்
அறியாதிருப்பீர்கள். இந்த ஜனங்கள் 15
கண்களினால் காணாமலும், காதுகளி
னால் கேளாமலும், இருதயத்தினால்
உணர்ந்து மனந்திரும்பாமலும், நான்
அவர்களை ஆரோக்கியமாக்காமலும்
இருக்கும்படியாக, அவர்கள் இருத
யம் கொழுத்திருக்கிறது; காதால் மந்
தமாய்க் கேட்டு, தங்கள் கண்களை
மூடிக்கொண்டார்கள் என்பதே.
உங்கள் கண்கள் காண்கிறதினாலும், 16
உங்கள் காதுகள் கேட்கிறதினாலும்,
அவைகள் பாக்கியமுள்ளவைகள்.
அநேக தீர்க்கதரிசிகளும் நீதிமான்க 17
ளும் நீங்கள் காண்கிறவைகளைக் காண
வும், நீங்கள் கேட்கிறவைகளைக் கேட்க
வும் விரும்பியும், காணாமலும் கேளா
மலும் போனார்களென்று, மெய்யாகவே
உங்களுக்குச் சொல்லுகிறேன்.
ஆகையால் விதைக்கிறவனைப்பற்றிய 18
உவமையைக் கேளுங்கள். ஒருவன், 19
ராஜ்யத்தின் வசனத்தைக் கேட்டும்
உணராதிருக்கும்போது, பொல்லாங்
கன் வந்து, அவன் இருதயத்தில் விதை
க்கப்பட்டதைப் பறித்துக்கொள்ளுகி
றான்; அவனே வழியருகே விதைக்கப்
பட்டவன். கற்பாறை இடங்களில் 20
விதைக்கப்பட்டவன், வசனத்தைக்
கேட்டு, உடனே அதைச் சந்தோஷத்
தோடே ஏற்றுக்கொள்ளுகிறவன்; ஆகி 21
லும் தனக்குள்ளே வேரில்லாதவனாய்,
கொஞ்சக்காலமாத்திரம் நிலைத்திருப்
பான்; வசனத்தினிமித்தம் உபத்திரவ
மும் துன்பமும் உண்டானவுடனே
இடறலடைவான். முள்ளுள்ள இடங் 22
களில் விதைக்கப்பட்டவன், வசனத்
தைக் கேட்கிறவனாயிருந்தும், உலகக்
கவலையும் ஐசுவரியத்தின் மயக்கமும்
வசனத்தை நெருக்கிப்போடுகிறதினால்,
அவனும் பலனற்றுப்போவான். நல்ல 23
நிலத்தில் விதைக்கப்பட்டவனோ, வச

னத்தைக் கேட்கிறவனும் உணருகிறவ
னுமாயிருந்து, நூறாகவும் அறுபதாக
வும் முப்பதாகவும் பலன் தருவான்
என்றார்.
24 வேறொரு உவமையை அவர்களுக்
குச் சொன்னார்: பரலோகராஜ்யம் தன்
நிலத்தில் நல்ல விதையை விதைத்த
25 மனுஷனுக்கு ஒப்பாயிருக்கிறது. மனு
ஷர் நித்திரை பண்ணுகையில் அவனு
டைய சத்துரு வந்து, கோதுமைக்குள்
களைகளை விதைத்துவிட்டுப் போனான்.
26 பயிரானது வளர்ந்து கதிர்விட்டபோது,
27 களைகளும் காணப்பட்டது. வீட்டெஜ
மானுடைய வேலைக்காரர் அவனிடத்
தில் வந்து: ஆண்டவனே, நீர் உமது
நிலத்தில் நல்ல விதையை விதைத்தீர்
அல்லவா? பின்னை அதில் களைகள் எப்
28 படி உண்டானது என்றார்கள். அதற்கு
அவன்: சத்துரு அதைச் செய்தான்
என்றான். அப்பொழுது வேலைக்காரர்:
நாங்கள் போய் அவைகளைப் பிடுங்கிப்
போட உமக்குச் சித்தமா? என்று கேட்
29 டார்கள். அதற்கு அவன்: வேண்டாம்,
களைகளைப் பிடுங்கும்போது நீங்கள்
கோதுமையையுங்கூட வேரோடே
பிடுங்காதபடிக்கு, இரண்டையும் அறு
30 ப்புமட்டும் வளரவிடுங்கள். அறுப்புக்
காலத்தில் நான் அறுக்கிறவர்களை நோ
க்கி: முதலாவது, களைகளைப் பிடுங்கி,
அவைகளைச் சுட்டெரிக்கிறதற்குக் கட்
டுகளாகக் கட்டுங்கள்; கோதுமையை
யோ என் களஞ்சியத்தில் சேர்த்துவை
யுங்கள் என்பேன் என்று சொன்னான்
என்றார்.
31 வேறொரு உவமையை அவர்களுக்
குச் சொன்னார்: பரலோகராஜ்யம் கடு
குவிதைக்கு ஒப்பாயிருக்கிறது; அதை
ஒரு மனுஷன் எடுத்துத் தன் நிலத்தில்
32 விதைத்தான். அது சகல விதைகளிலும்
சிறிதாயிருந்தும், வளரும்போது, சகல
பூண்டுகளிலும் பெரிதாகி, ஆகாயத்துப்
பறவைகள் அதின் கிளைகளில் வந்து
அடையத்தக்க மரமாகும் என்றார்.
33 வேறொரு உவமையை அவர்களுக்
குச்சொன்னார்: பரலோகராஜ்யம் புளித்
தமாவுக்கு ஒப்பாயிருக்கிறது; அதை
ஒரு ஸ்திரீ எடுத்து, முழுவதும் புளிக்
கும்வரைக்கும், மூன்றுபடி மாவிலே
அடக்கிவைத்தாள் என்றார்.
இவைகளையெல்லாம் இயேசு ஜனங் 34
களோடே உவமைகளாகப் பேசினார்;
உவமைகளினாலேயன்றி, அவர்களோ
டே பேசவில்லை. என் வாயை உவமை 35
களினால் திறப்பேன்; உலகத்தோற்ற
முதல் மறைபொருளானவைகளை வெ
ளிப்படுத்துவேன் என்று தீர்க்கதரிசி
யால் உரைக்கப்பட்டது நிறைவேறும்
படி இப்படி நடந்தது.
அப்பொழுது இயேசு ஜனங்களை 36
அனுப்பிவிட்டு வீட்டிக்குப் போனார்.
அவருடைய சீஷர்கள் அவரிடத்தில்
வந்து: நிலத்தின் களைகளைப் பற்றிய
உவமையை எங்களுக்கு வெளிப்படுத்த
வேண்டுமென்று கேட்டார்கள்.
அவர் பிரதியுத்தரமாக: நல்ல விதை 37
யை விதைக்கிறவன் மனுஷகுமாரன்;
நிலம் உலகம்; நல்ல விதை ராஜ்யத் 38
தின் புத்திரர்; களைகள் பொல்லாங்கனு
டைய புத்திரர்; அவைகளை விதைக் 39
கிற சத்துரு பிசாசு; அறுப்பு உலகத்
தின் முடிவு; அறுக்கிறவர்கள் தேவதூ
தர்கள். ஆதலால், களைகளைச் சேர்த்து 40
அக்கினியால் சுட்டெரிக்கிறதுபோல,
இவ்வுலகத்தின் முடிவிலே நடக்கும்.
மனுஷகுமாரன் தம்முடைய தூதர் 41
களை அனுப்புவார்; அவர்கள் அவரு
டைய ராஜ்யத்தில் இருக்கிற சகல இட
றல்களையும் அக்கிரமஞ்செய்கிறவர்களை
யும் சேர்த்து, அவர்களை அக்கினிச் 42
சூளையிலே போடுவார்கள்; அங்கே அழு
கையும் பற்கடிப்பும் உண்டாயிருக்
கும். அப்பொழுது, நீதிமான்கள் தங் 43
கள் பிதாவின் ராஜ்யத்திலே சூரியனைப்
போலப் பிரகாசிப்பார்கள். கேட்கிற
தற்குக் காதுள்ளவன் கேட்கக்கடவன்.
அன்றியும், பரலோகராஜ்யம் நிலத் 44
தில் புதைத்திருக்கிற பொக்கிஷத்துக்கு
ஒப்பாயிருக்கிறது; அதை ஒரு மனு
ஷன் கண்டு, மறைத்து, அதைப்பற்
றிய சந்தோஷத்தினாலே போய், தனக்கு
உண்டான எல்லாவற்றையும் விற்று,
அந்த நிலத்தைக் கொள்ளுகிறான்.

45 மேலும், பரலோகராஜ்யம் நல்ல
முத்துக்களைத் தேடுகிற வியாபாரிக்கு
46 ஒப்பாயிருக்கிறது. அவன் விலையுயர்
ந்த ஒரு முத்தைக் கண்டு, போய், தன
க்குண்டான எல்லாவற்றையும் விற்று,
அதைக் கொள்ளுகிறான்.
47 அன்றியும், பரலோகராஜ்யம் கட
லிலே போடப்பட்டு, சகலவிதமான
மீன்களையும் சேர்த்து வாரிக்கொள்ளும்
48 வலைக்கு ஒப்பாயிருக்கிறது. அது
நிறைந்தபோது, அதைக் கரையில் இழு
த்து, உட்கார்ந்து, நல்லவைகளைக்
கூடைகளில் சேர்த்து, ஆகாதவைகளை
49 எறிந்துபோடுவார்கள். இப்படியே உல
கத்தின் முடிவிலே நடக்கும். தேவதூ
தர்கள் புறப்பட்டு, நீதிமான்களின் நடு
விலிருந்து பொல்லாதவர்களைப் பிரித்து,
50 அவர்களை அக்கினிச்சூளையிலே போடு
வார்கள்; அங்கே அழுகையும் பற்கடி
ப்பும் உண்டாயிருக்கும் என்றார்.
51 பின்பு, இயேசு அவர்களை நோக்கி:
இவைகளையெல்லாம் அறிந்துகொண்
டீர்களா என்று கேட்டார். அதற்கு
அவர்கள்: ஆம், அறிந்துகொண்டோம்,
ஆண்டவரே, என்றார்கள்.
52 அப்பொழுது அவர் அவர்களை நோ
க்கி: இப்படியிருக்கிறபடியால், பர
லோகராஜ்யத்துக் கடுத்தவைகளில்
உபதேசிக்கப்பட்டுத் தேறின வேதபார
கன் எவனும் தன் பொக்கிஷத்திலிருந்து
புதியவைகளையும் பழையவைகளையும்
எடுத்துக்கொடுக்கிற வீட்டெஜமானு
கிய மனுஷனுக்கு ஒப்பாயிருக்கிறான்
என்றார்.
53 இயேசு இந்த உவமைகளைச் சொல்லி
முடித்தபின்பு, அவ்விடம் விட்டு,
54 தாம் வளர்ந்த ஊரிலே வந்து, அவர்க
ளுடைய ஜெபஆலயத்திலே அவர்க
ளுக்கு உபதேசம்பண்ணினார். அவர்
கள் ஆச்சரியப்பட்டு: இவனுக்கு இந்த
ஞானமும் பலத்த செய்கைகளும் எப்
55 படி வந்தது? இவன் தச்சனுடைய
குமாரன் அல்லவா? இவன் தாய் மரி
யாள் என்பவள் அல்லவா? யாக்கோபு
யோசே சீமோன் யூதா என்பவர்கள்
இவனுக்குச் சகோதரர் அல்லவா?
இவன் சகோதரிகளெல்லாரும் நம்மி 56
டத்தில் இருக்கிறார்கள் அல்லவா? இப்
படியிருக்க, இதெல்லாம் இவனுக்கு
எப்படி வந்தது? என்று சொல்லி, அவ 57
ரைக்குறித்து இடறலடைந்தார்கள்.
இயேசு அவர்களை நோக்கி: தீர்க்கத
ரிசி ஒருவன் தன் ஊரிலும் தன் வீட்
டிலுமேயன்றி வேறெங்கும் கனவீன
மடையான் என்றார். அவர்களுடைய 58
அவிசுவாசத்தினிமித்தம் அவர் அங்கே
அநேக அற்புதங்களைச் செய்யவில்லை.

அக்காலத்தில், காற்பங்கு தேசாதி 14
பதியாகிய ஏரோது இயேசுவின் கீர்த்
தியைக் கேள்விப்பட்டு, தன் ஊழியக் 2
காரரை நோக்கி: இவன் யோவான்
ஸ்நானன்; இவன் மரித்தோரிலிருந்து
எழுந்தான்; ஆகையால், இவனிடத்
தில் பலத்த செய்கைகள் விளங்குகிறது
என்றான்.
ஏரோது தன் சகோதரனாகிய பிலிப் 3
புவின் மனைவி ஏரோதியாளினிமித்தம்
யோவானைப் பிடித்துக் கட்டிக் காவ
லில் வைத்திருந்தான். ஏனெனில்: நீர் 4
அவளை வைத்துக்கொள்வது நியாயமல்
லவென்று யோவான் அவனுக்குச் சொ
ல்லியிருந்தான். ஏரோது அவனைக் 5
கொலைசெய்ய மனதாயிருந்தும், ஜனங்
கள் அவனைத் தீர்க்கதரிசியென்று எண்
ணினபடியால் அவர்களுக்குப் பயந்தி
ருந்தான். அப்படியிருக்க, ஏரோதின் 6
ஜென்மநாள் கொண்டாடப்படுகிற
போது, ஏரோதியாளின் குமாரத்தி
அவர்கள் நடுவே நடனம்பண்ணி ஏரோ
தைச் சந்தோஷப்படுத்தினாள். அதினி 7
மித்தம் அவன்: நீ எதைக் கேட்டா
லும் தருவேன் என்று அவளுக்கு ஆணை
யிட்டு வாக்குக்கொடுத்தான். அவள் 8
தன் தாயினால் ஏவப்பட்டபடியே:
யோவான் ஸ்நானனுடைய தலையை
இங்கே ஒரு தாலத்திலே எனக்குத்
தாரும் என்று கேட்டாள். ராஜா துக் 9
கமடைந்தான். ஆகிலும், ஆணையினி
மித்தமும் பந்தியில் கூட இருந்தவர்
களினிமித்தமும், அதைக் கொடுக்கக்
கட்டளையிட்டு, ஆள் அனுப்பி, காவற் 10
கூடத்திலே யோவானைச் சிரச்சேதம்

11 பண்ணுவித்தான். அவனுடைய சிர
சை ஒரு தாலத்திலே கொண்டுவந்து,
சிறுபெண்ணுக்குக் கொடுத்தார்கள்;
அவள் அதைத் தன் தாயினிடத்தில்
12 கொண்டுபோனாள். அவனுடைய
சீஷர்கள் வந்து உடலை எடுத்து அடக்
கம்பண்ணி, பின்பு போய் அந்தச்
சங்கதியை இயேசுவுக்கு அறிவித்தார்
கள்.
13 இயேசு அதைக் கேட்டு, அவ்விடம்
விட்டு, படவில் ஏறி, வனாந்தரமான
ஓர் இடத்துக்குத் தனியே போனார்.
ஜனங்கள் அதைக் கேள்விப்பட்டு, பட்
டணங்களிலிருந்து கால்நடையாய்
14 அவரிடத்திற்குப் போனார்கள். இயேசு
வந்து திரளான ஜனங்களைக் கண்டு,
அவர்கள்மேல் மனதுருகி, அவர்களில்
வியாதிஸ்தர்களாயிருந்தவர்களைச் சொ
ஸ்தமாக்கினார்.
15 சாயங்காலமானபோது, அவருடைய
சீஷர்கள் அவரிடத்தில் வந்து: இது
வனாந்தரமான இடம், நேரமுமாயிற்று;
ஜனங்கள் கிராமங்களுக்குப் போய்த்
தங்களுக்குப் போஜனபதார்த்தங்களைக்
கொள்ளும்படி அவர்களை அனுப்பிவிட
16 வேண்டும் என்றார்கள். இயேசு அவர்
களை நோக்கி: அவர்கள் போகவேண்
டுவதில்லை; நீங்களே அவர்களுக்குப்
17 போஜனங் கொடுங்கள் என்றார். அத
ற்கு அவர்கள்: இங்கே எங்களிடத்தில்
ஐந்து அப்பமும் இரண்டு மீன்களுமே
யல்லாமல், வேறொன்றும் இல்லை என்
18 றார்கள். அவைகளை என்னிடத்தில்
கொண்டுவாருங்கள் என்றார்.
19 அப்பொழுது, அவர் ஜனங்களைப் புல்
லின்மேல் பந்தியிருக்கக் கட்டளையிட்டு,
அந்த ஐந்து அப்பங்களையும், அந்த
இரண்டு மீன்களையும் எடுத்து, வானத்
தை அண்ணாந்து பார்த்து, ஆசீர்வ . . .
அப்பங்களைப் பிட்டுச் சீஷர்களிடத்தில்
கொடுத்தார்; சீஷர்கள் ஜனங்களுக்குக்
20 கொடுத்தார்கள். எல்லாரும் சாப்பிட்
டுத் திருப்தியடைந்தார்கள்; மீதியான
துணிக்கைகளைப் பன்னிரண்டு கூடை
21 நிறைய எடுத்தார்கள். ஸ்திரீகளும்
பிள்ளைகளும் தவிர, சாப்பிட்ட புருஷர்
கள் ஏறக்குறைய ஐயாயிரம்பேரா
யிருந்தார்கள்.
இயேசு ஜனங்களை அனுப்பிவிடுகை 22
யில், தம்முடைய சீஷர்கள் படவில்
ஏறி, தமக்கு முன்னே அக்கரைக்குப்
போகும்படி அவர்களைத் துரிதப்படுத்தி
னார். அவர் ஜனங்களை அனுப்பிவிட்ட 23
பின்பு, தனித்து ஜெபம்பண்ண ஒரு
மலையின்மேல் ஏறி, சாயங்காலமான
போது அங்கே தனிமையாயிருந்தார்.
அதற்குள்ளாக படவு நடுக்கடலிலே 24
சேர்ந்து, எதிர்க்காற்றாயிருந்தபடியால்
அலைகளினால் அலைவுபட்டது.
இரவின் நாலாம்ஜாமத்திலே, இயேசு 25
கடலின்மேல் நடந்து, அவர்களிடத்
திற்கு வந்தார். அவர் கடலின்மேல் 26
நடக்கிறதைச் சீஷர்கள் கண்டு, கலக்க
மடைந்து, ஆவேசம் என்று சொல்லி,
பயத்தினால் அலறினார்கள். உடனே 27
இயேசு அவர்களோடே பேசி: திடன்
கொள்ளுங்கள், நான்தான், பயப்படா
திருங்கள் என்றார்.
பேதுரு அவரை நோக்கி: ஆண்ட 28
வரே! நீரேயானால் நான் ஜலத்தின்மேல்
நடந்து உம்மிடத்தில் வரக் கட்டளை
யிடும் என்றான். அதற்கு அவர்: வா 29
என்றார். அப்பொழுது, பேதுரு பட
வை விட்டிறங்கி, இயேசுவினிடத்தில்
போக ஜலத்தின்மேல் நடந்தான். கா 30
ற்று பலமாயிருக்கிறதைக் கண்டு, பய
ந்து, அமிழ்ந்துபோகையில்: ஆண்ட
வரே, என்னை இரட்சியும் என்று கூப்
பிட்டான். உடனே இயேசு கையை 31
நீட்டி அவனைப் பிடித்து: அற்ப விசு
வாசியே, ஏன் சந்தேகப்பட்டாய் என்
றார். அவர்கள் படவில் ஏறினவுடனே 32
காற்று அமர்ந்தது. அப்பொழுது, பட 33
வில் உள்ளவர்கள் வந்து: மெய்யாகவே
நீர் தேவனுடைய குமாரன் என்று
சொல்லி, அவரைப் பணிந்துகொண்
டார்கள்.
பின்பு, அவர்கள் கடலைக் கடந்து, 34
கெனேசரேத்து நாட்டில் சேர்ந்தார்
கள். அவ்விடத்து மனுஷர் அவரை 35
இன்னார் என்று அறிந்து, சுற்றுப்புற
மெங்கும் செய்தி அனுப்பி, பிணியா

ளிகளெல்லாரையும் அவரிடத்தில் கொ
36 ண்டுவந்து, அவருடைய வஸ்திரத்
தின் ஓரத்தையாகிலும் அவர்கள் தொ
டும்படி உத்தரவாக வேண்டுமென்று
அவரை வேண்டிக்கொண்டார்கள்;
தொட்ட யாவரும் சொஸ்தமானார்கள்.
15 அப்பொழுது, எருசலேமிலிருந்து
வந்த வேதபாரகரும் பரிசேயரும்
2 இயேசுவினிடத்தில் வந்து: உம்மு
டைய சீஷர்கள் முன்னோர்களின் பார
ம்பரியத்தை ஏன் மீறி நடக்கிறார்கள்?
கைகழுவாமல் போஜனம்பண்ணுகிறார்
களே! என்றார்கள்.
3 அவர்களுக்கு அவர் பிரதியுத்தரமாக:
நீங்கள் உங்கள் பாரம்பரியத்தினாலே
தேவனுடைய கற்பனையை ஏன் மீறி
4 நடக்கிறீர்கள்? உன் தகப்பனையும்
உன் தாயையும் கனம்பண்ணுவாயாக
என்றும், தகப்பனையாவது தாயையா
வது நிந்திக்கிறவன் கொல்லப்படவே
ண்டும் என்றும், தேவன் கற்பித்திருக்
5 கிறாரே. நீங்களோ, எவனாகிலும் தகப்
பனையாவது தாயையாவது நோக்கி:
உனக்கு நான் செய்யத்தக்க உதவி எது
உண்டோ, அதைக் காணிக்கையாகக்
கொடுக்கிறேன் என்று சொல்லி, தன்
தகப்பனையாவது தன்தாயையாவது கன
ம்பண்ணாமற்போனாலும், அவனுடைய
6 கடமை தீர்ந்ததென்று போதித்து, உங்
கள் பாரம்பரியத்தினாலே தேவனுடைய
கற்பனையை அவமாக்கி வருகிறீர்கள்.
7 மாயக்காரரே, உங்களைக்குறித்து:
8 இந்த ஜனங்கள் தங்கள் வாயினால் என்
னிடத்தில் சேர்ந்து, தங்கள் உதடுகளி
னால் என்னைக் கனம்பண்ணுகிறார்கள்;
அவர்கள் இருதயமோ எனக்குத் தூர
9 மாய் விலகியிருக்கிறது; மனுஷரு
டைய கற்பனைகளை உபதேசங்களாகப்
போதித்து, வீணாய் எனக்கு ஆராதனை
செய்கிறார்கள் என்று, ஏசாயா தீர்க்க
தரிசி நன்றாய்ச் சொல்லியிருக்கிறான்
என்றார்.
10 பின்பு அவர் ஜனங்களை வரவழைத்து,
அவர்களை நோக்கி: நீங்கள் கேட்டு உண
11 ருங்கள். வாய்க்குள்ளே போகிறது
மனுஷனைத் தீட்டுப்படுத்தாது, வாயிலி
ருந்து புறப்படுகிறதே மனுஷனைத் தீட்
டுப்படுத்தும் என்றார்.
அப்பொழுது, அவருடைய சீஷர்கள் 12
அவரிடத்தில் வந்து: பரிசேயர் இந்த
வசனத்தைக் கேட்டு இடறலடைந்தார்
கள் என்று அறிவீரா என்றார்கள். அவர் 13
பிரதியுத்தரமாக: என் பரமபிதா நடாத
நாற்றெல்லாம் வேரோடே பிடுங்கப்
படும். அவர்களை விட்டுவிடுங்கள், அவர் 14
கள் குருடருக்கு வழிகாட்டுகிற குருட
ராயிருக்கிறார்கள்; குருடனுக்குக் குரு
டன் வழிகாட்டினால் இருவரும் குழி
யிலே விழுவார்களே என்றார்.
அப்பொழுது, பேதுரு அவரை நோ 15
க்கி: இந்த உவமையை எங்களுக்கு வெ
ளிப்படுத்தவேண்டும் என்றான். அதற்கு 16
இயேசு: நீங்களும் இன்னும் உணர்
வில்லாதவர்களாயிருக்கிறீர்களா? வாய் 17
க்குள்ளே போகிறதெல்லாம் வயிற்றில்
சென்று ஆசனவழியாய்க் கழிந்துபோம்
என்பதை நீங்கள் இன்னும் அறிய
வில்லையா? வாயிலிருந்து புறப்படுகிற 18
வைகள் இருதயத்திலிருந்து புறப்பட்டு
வரும்; அவைகளே மனுஷனைத் தீட்
டுப்படுத்தும். எப்படியெனில், இரு 19
தயத்திலிருந்து பொல்லாத சிந்தனைக
ளும், கொலைபாதகங்களும், விபசாரங்
களும், வேசித்தனங்களும், களவுக
ளும், பொய்ச்சாட்சிகளும், தூஷணங்
களும் புறப்பட்டுவரும். இவைகளே 20
மனுஷனைத் தீட்டுப்படுத்தும்; கைகழு
வாமல் சாப்பிடுகிறது மனுஷனைத் தீட்
டுப்படுத்தாது என்றார்.
பின்பு, இயேசு அவ்விடம்விட்டுப் 21
புறப்பட்டு, தீரு சீதோன் பட்டணங்க
ளின் திசைகளுக்குப் போனார். அப் 22
பொழுது, அந்தத் திசைகளில் குடியிரு
க்கிற கானானிய ஸ்திரீ ஒருத்தி அவரிடத்
தில் வந்து: ஆண்டவரே, தாவீதின் குமா
ரனே, எனக்கு இரங்கும், என் மகள்
பிசாசினால் கொடிய வேதனைப்படுகிறாள்
என்று சொல்லிக் கூப்பிட்டாள். அவ 23
ளுக்குப் பிரதியுத்தரமாக அவர் ஒரு
வார்த்தையும் சொல்லவில்லை. அப்பொ
ழுது அவருடைய சீஷர்கள் வந்து:
இவள் நம்மைப் பின்தொடர்ந்து கூப்

பிடுகிறாளே, இவளை அனுப்பிவிடும்
என்று அவரை வேண்டிக்கொண்டார்
24 கள். அதற்கு அவர்: காணாமற்போன
ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரிடத்
திற்கு அனுப்பப்பட்டேனேயன்றி, மற்
25 றப்படியல்லவென்றார். அவள் வந்து:
ஆண்டவரே, எனக்கு உதவி செய்யும்
என்று அவரைப் பணிந்துகொண்டாள்.
26 அவர் அவளை நோக்கி: பிள்ளைகளின் அப்
பத்தை எடுத்து, நாய்க்குட்டிகளுக்குப்
27 போடுகிறது நல்லதல்ல என்றார். அத
ற்கு அவள்: மெய்தான் ஆண்டவரே,
ஆகிலும் நாய்க்குட்டிகள் தங்கள் எஜ
மான்களின் மேஜையிலிருந்து விழும்
துணிக்கைகளைத் தின்னுமே என்றாள்.
28 இயேசு அவளுக்குப் பிரதியுத்தரமாக:
ஸ்திரீயே, உன் விசுவாசம் பெரிது; நீ
விரும்புகிறபடி உனக்கு ஆகக்கடவது
என்றார். அந்நேரமே அவள் மகள்
ஆரோக்கியமானாள்.
29 இயேசு அவ்விடம்விட்டுப் புறப்ப
ட்டு, கலிலேயாக் கடலருகே வந்து, ஒரு
மலையின்மேல் ஏறி, அங்கே உட்கார்ந்
30 தார். அப்பொழுது, சப்பாணிகள், குரு
டர், ஊமையர், ஊனர் முதலிய அநே
கரை, திரளான ஜனங்கள் கூட்டிக்கொ
ண்டு இயேசுவினிடத்தில் வந்து, அவர்
களை அவர் பாதத்திலே வைத்தார்கள்;
அவர்களை அவர் சொஸ்தப்படுத்தினார்.
31 ஊமையர் பேசுகிறதையும், ஊனர் சொ
ஸ்தமடைகிறதையும், சப்பாணிகள்
நடக்கிறதையும், குருடர் பார்க்கிறதை
யும் ஜனங்கள் கண்டு, ஆச்சரியப்பட்டு,
இஸ்ரவேலின் தேவனை மகிமைப்படுத்
தினார்கள்.
32 பின்பு, இயேசு தம்முடைய சீஷர்
களை அழைத்து: ஜனங்களுக்காகப் பரித
பிக்கிறேன், இவர்கள் என்னிடத்தில் மூ
ன்றுநாள் தங்கியிருந்து சாப்பிட ஒன்று
மில்லாதிருக்கிறார்கள்; இவர்களைப் பட்
டினியாய் அனுப்பிவிட எனக்கு மன
தில்லை, வழியில் சோர்ந்துபோவார்களே
33 என்றார். அதற்கு அவருடைய சீஷர்
கள்: இவ்வளவு திரளான ஜனங்களுக்
குத் திருப்தியுண்டாகும்படி வேண்டிய
அப்பங்கள் இந்த வனாந்தரத்திலே நம
க்கு எப்படி அகப்படும் என்றார்கள்.
அதற்கு இயேசு: உங்களிடத்தில் எத் 34
தனை அப்பங்கள் உண்டு என்று கேட்
டார். அவர்கள்: ஏழு அப்பங்களும்
சில சிறு மீன்களும் உண்டு என்றார்கள்.
அப்பொழுது அவர் ஜனங்களைத் தரை 35
யில் பந்தியிருக்கக் கட்டளையிட்டு, அந்த 36
ஏழு அப்பங்களையும் அந்த மீன்களையும்
எடுத்து, ஸ்தோத்திரம்பண்ணி, பிட்டுத்
தம்முடைய சீஷர்களிடத்தில் கொடுத்
தார்; சீஷர்கள் ஜனங்களுக்குப் பரிமா
றினார்கள். எல்லாரும் சாப்பிட்டுத் திரு 37
ப்தியடைந்தார்கள்; மீதியான துணிக்
கைகளை ஏழு கூடைநிறைய எடுத்தார்
கள். ஸ்திரீகளும் பிள்ளைகளும் தவிர, 38
சாப்பிட்ட புருஷர் நாலாயிரம் பேரா
யிருந்தார்கள்.
அவர் ஜனங்களை அனுப்பிவிட்டு, பட 39
வில் ஏறி, மகதலாவின் எல்லைகளில்
வந்தார்.
பரிசேயரும் சதுசேயரும் அவரைச் 16
சோதிக்கும்படி அவரிடத்தில் வந்து:
வானத்திலிருந்து ஓர் அடையாளத்தைத்
தங்களுக்குக் காண்பிக்கவேண்டும்
என்று கேட்டார்கள். அவர்களுக்கு 2
அவர் பிரதியுத்தரமாக: அஸ்தமனமா
கிறபோது, செவ்வானமிட்டிருக்கிறது,
அதினால் வெளிவாங்கும் என்று சொல்
லுகிறீர்கள். உதயமாகிறபோது, செவ் 3
வானமும் மந்தாரமுமா யிருக்கிறது,
அதினால் இன்றைக்குக் காற்றும் மழை
யும் உண்டாகும் என்று சொல்லுகிறீர்
கள். மாயக்காரரே, வானத்தின் தோற்
றத்தை நிதானிக்க உங்களுக்குத் தெரி
யுமே, காலங்களின் அடையாளங்களை
நிதானிக்க உங்களால் கூடாதா? இந் 4
தப் பொல்லாத விபசார சந்ததியார்
அடையாளம் தேடுகிறார்கள்; யோனா
தீர்க்கதரிசியின் அடையாளமேயன்றி
வேறே அடையாளம் இவர்களுக்குக்
கொடுக்கப்படுவதில்லை என்று சொல்லி,
அவர்களை விட்டுப் புறப்பட்டுப்போனார்.
அவருடைய சீஷர்கள் அக்கரை சேர் 5
ந்தபோது, அப்பங்களைக் கொண்டுவர
மறந்துபோனார்கள். இயேசு அவர்களை 6
நோக்கி: பரிசேயர் சதுசேயர் என்பவர்

களின் புளித்தமாவைக்குறித்து எச்ச
ரிக்கையாயிருங்கள் என்றார்.
7 நாம் அப்பங்களைக் கொண்டுவராதப
டியால் இப்படிச் சொல்லுகிறார் என்று
அவர்கள் தங்களுக்குள்ளே யோசனை
8 பண்ணிக்கொண்டார்கள். இயேசு
அதை அறிந்து: அற்ப விசுவாசிகளே,
அப்பங்களைக் கொண்டுவராததைக்
குறித்து நீங்கள் உங்களுக்குள்ளே யோ
9 சனை பண்ணுகிறதென்ன? இன்னும்
நீங்கள் உணரவில்லையா? ஐந்து அப்பங்
களை ஐயாயிரம் பேருக்குப் பகிர்ந்ததை
யும், மீதியானதை எத்தனை கூடை
நிறைய எடுத்தீர்கள் என்பதையும்;
10 ஏழு அப்பங்களை நாலாயிரம்பேருக்குப்
பகிர்ந்ததையும், மீதியானதை எத்தனை
கூடைநிறைய எடுத்தீர்கள் என்பதை
யும் நீங்கள் நினைவுகூராமலிருக்கிறீர்
11 களா? பரிசேயர் சதுசேயர் என்பவர்
களின் புளித்தமாவுக்கு எச்சரிக்கையா
யிருக்கவேண்டும் என்று நான் சொன்
னது அப்பத்தைக்குறித்துச் சொல்ல
வில்லை என்று நீங்கள் உணராதிருக்கி
12 றது எப்படி என்றார். அப்பொழுது,
அவர் அப்பத்தின் புளித்தமாவைக்
குறித்து எச்சரிக்கையாயிருக்கவேண்டு
மென்று சொல்லாமல், பரிசேயர் சது
சேயர் என்பவர்களின் உபதேசத்தைக்
குறித்தே அப்படிச் சொன்னார் என்று
அறிந்துகொண்டார்கள்.
13 பின்பு, இயேசு பிலிப்புச் செசரியா
வின் திசைகளில் வந்தபோது, தம்மு
டைய சீஷரை நோக்கி: மனுஷகுமார
னாகிய என்னை ஜனங்கள் யார் என்று
சொல்லுகிறார்கள் என்று கேட்டார்.
14 அதற்கு அவர்கள்: சிலர் உம்மை
யோவான்ஸ்நானன் என்றும், சிலர்
எலியா என்றும்; வேறு சிலர் எரே
மியா, அல்லது தீர்க்கதரிசிகளில் ஒரு
வர் என்றும் சொல்லுகிறார்கள் என்றார்
15 கள். அப்பொழுது அவர்: நீங்கள்
என்னை யார் என்று சொல்லுகிறீர்கள்
16 என்று கேட்டார். சீமோன் பேதுரு
பிரதியுத்தரமாக: நீர் ஜீவனுள்ள தேவ
னுடைய குமாரனாகிய கிறிஸ்து என்
றான்.

இயேசு அவனை நோக்கி: யோனாவின் 17
குமாரனாகிய சீமோனே, நீ பாக்கிய
வான்; மாம்சமும் இரத்தமும் இதை
உனக்கு வெளிப்படுத்தவில்லை, பரலோ
கத்திலிருக்கிற என் பிதா இதை உனக்கு
வெளிப்படுத்தினார். மேலும், நான் உன 18
க்குச் சொல்லுகிறேன், நீ பேதுருவாய்
இருக்கிறாய், இந்தக் கல்லின்மேல் என்
சபையைக் கட்டுவேன்; பாதாளத்தின்
வாசல்கள் அதை மேற்கொள்வதில்லை.
பரலோக ராஜ்யத்தின் திறவுகோல்களை 19
நான் உனக்குத் தருவேன்; பூலோகத்
திலே நீ கட்டுகிறது எதுவோ அது பர
லோகத்திலும் கட்டப்பட்டிருக்கும்,
பூலோகத்திலே நீ கட்டவிழ்ப்பது எது
வோ அது பரலோகத்திலும் கட்டவிழ்க்
கப்பட்டிருக்கும் என்றார்.
அப்பொழுது, தாம் கிறிஸ்துவாகிய 20
இயேசு என்று ஒருவருக்கும் சொல்லா
தபடிக்குத் தம்முடைய சீஷர்களுக்குக்
கட்டளையிட்டார்.
அதுமுதல் இயேசு, தாம் எருசலே 21
முக்குப் போய், மூப்பராலும் பிரதான
ஆசாரியராலும் வேதபாரகராலும் பல
பாடுகள்பட்டு, கொலையுண்டு மூன்றாம்
நாளில் எழுந்திருக்கவேண்டும் என்ப
தைத் தம்முடைய சீஷர்களுக்குச்
சொல்லத்தொடங்கினார்.
அப்பொழுது, பேதுரு அவரைத் தனி 22
யே அழைத்துக்கொண்டு போய்: ஆண்
டவரே, இது உமக்கு நேரிடக்கூடாதே,
இது உமக்குச் சம்பவிப்பதில்லை என்று
அவரைக் கடிந்துகொள்ளத் தொடங்கி
னான். அவரோ திரும்பிப் பேதுருவைப் 23
பார்த்து: எனக்குப் பின்னாகப் போ,
சாத்தானே, நீ எனக்கு இடறலாயிருக்
கிறாய்; தேவனுக்கு ஏற்றவைகளைச் சிந்
தியாமல் மனுஷனுக்கு ஏற்றவைகளைச்
சிந்திக்கிறாய் என்றார்.
அப்பொழுது, இயேசு தம்முடைய 24
சீஷர்களை நோக்கி: ஒருவன் என்னைப்
பின்பற்றிவர விரும்பினால், அவன் தன்
னைத்தான் வெறுத்து, தன் சிலுவையை
எடுத்துக்கொண்டு என்னைப் பின்பற்றக்
கடவன். தன் ஜீவனை இரட்சிக்க விரும் 25
புகிறவன் அதை இழந்துபோவான்;

என்னிமித்தமாகத் தன் ஜீவனை இழந்து
போகிறவன் அதைக் கண்டடைவான்.
26 மனுஷன் உலகம் முழுவதையும் ஆதா
யப்படுத்திக்கொண்டாலும், தன் ஜீவனை
நஷ்டப்படுத்தினால் அவனுக்கு லாபம்
என்ன? மனுஷன் தன் ஜீவனுக்கு
ஈடாக என்னத்தைக் கொடுப்பான்?
27 மனுஷகுமாரன் தம்முடைய பிதாவின்
மகிமை பொருந்தினவராய்த் தம்மு
டைய தூதரோடுங்கூட வருவார்; அப்
பொழுது, அவனவன் கிரியைக்குத் தக்
கதாக அவனவனுக்குப் பலனளிப்பார்.
28 இங்கே நிற்கிறவர்களில் சிலர் மனுஷ
குமாரன் தம்முடைய ராஜ்யத்தில் வரு
வதைக் காணுமுன், மரணத்தை ருசி
பார்ப்பதில்லை என்று, மெய்யாகவே
உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.
17 ஆறுநாளைக்குப் பின்பு, இயேசு
பேதுருவையும் யாக்கோபையும் அவ
னுடைய சகோதரனாகிய யோவானையும்
கூட்டிக்கொண்டு தனித்திருக்கும்படி
2 உயர்ந்த மலையின்மேல் போய், அவர்
களுக்கு முன்பாக மறுரூபமானார்;
அவர் முகம் சூரியனைப்போலப் பிரகா
சித்தது, அவர் வஸ்திரம் வெளிச்சத்
3 தைப்போல வெண்மையாயிற்று. அப்
பொழுது மோசேயும் எலியாவும் அவ
ரோடே பேசுகிறவர்களாக அவர்களுக
குக் காணப்பட்டார்கள்.
4 அப்பொழுது பேதுரு இயேசுவை
நோக்கி: ஆண்டவரே, நாம் இங்கே
இருக்கிறது நல்லது; உமக்குச் சித்த
மானால், இங்கே உமக்கு ஒரு கூடார
மும், மோசேக்கு ஒரு கூடாரமும், எலி
யாவுக்கு ஒரு கூடாரமுமாக, மூன்று
கூடாரங்களைப் போடுவோம் என்றான்.
5 அவன் பேசுகையில், இதோ ஒளியுள்ள
ஒரு மேகம் அவர்கள்மேல் நிழலிட்
டது. இவர் என்னுடைய நேசகுமா
ரன், இவரில் பிரியமாயிருக்கிறேன்,
இவருக்குச் செவிகொடுங்கள் என்று
அந்த மேகத்திலிருந்து ஒரு சத்தம்
6 உண்டாயிற்று. சீஷர்கள் அதைக்
கேட்டு, முகங்குப்புற விழுந்து, மிகவும்
7 பயந்தார்கள். அப்பொழுது, இயேசு
வந்து, அவர்களைத் தொட்டு: எழுந்திருங்

கள், பயப்படாதேயுங்கள் என்றார்.
அவர்கள் தங்கள் கண்களை ஏறெடுத் 8
துப் பார்க்கையில் இயேசுவைத்தவிர
வேறொருவரையும் காணவில்லை.
அவர்கள் மலையிலிருந்து இறங்குகிற 9
போது, இயேசு அவர்களை நோக்கி:
மனுஷகுமாரன் மரித்தோரிலிருந்து
எழுந்திருக்கும்வரைக்கும் இந்தத் தரி
சனத்தை ஒருவருக்கும் சொல்லவேண்
டாம் என்று கட்டளையிட்டார்.
அப்பொழுது, அவருடைய சீஷர்கள் 10
அவரை நோக்கி: அப்படியானால் எலியா
முந்திவரவேண்டும் என்று வேதபாரகர்
சொல்லுகிறார்களே, அதெப்படியென்று
கேட்டார்கள். இயேசு அவர்களுக்குப் 11
பிரதியுத்தரமாக: எலியா முந்திவந்து
எல்லாவற்றையும் சீர்ப்படுத்துவது மெ
ய்தான். ஆனாலும் எலியா வந்தா 12
யிற்று என்று உங்களுக்குச் சொல்லு
கிறேன்; அவனை அறியாமல் தங்கள்
இஷ்டப்படி அவனுக்குச் செய்தார்
கள்; இவ்விதமாய் மனுஷகுமாரனும்
அவர்களால் பாடுபடுவார் என்றார்.
அவர் யோவான்ஸ்நானனைக் குறித்துத் 13
தங்களுக்குச் சொன்னார் என்று சீஷர்
கள் அப்பொழுது அறிந்துகொண்
டார்கள்.
அவர்கள் ஜனங்களிடத்தில் வந்த 14
போது, ஒரு மனுஷன் அவரிடத்தில்
வந்து, அவர் முன்பாக முழங்கால்படி
யிட்டு: ஆண்டவரே, என் மகனுக்கு 15
இரங்கும், அவன் சந்திரரோகியாய்க்
கொடிய வேதனைப்படுகிறான்; அடிக்கடி
தீயிலும், அடிக்கடி ஜலத்திலும் விழுகி
றான், அவனை உம்முடைய சீஷர்களி 16
டத்தில் கொண்டுவந்தேன்; அவனைச்
சொஸ்தமாக்க அவர்களால் கூடாமற்
போயிற்று என்றான்.
இயேசு பிரதியுத்தரமாக: விசுவாச 17
மில்லாத மாறுபாடுள்ள சந்ததியே, எது
வரைக்கும் நான் உங்களோடு இருப்
பேன்? எதுவரைக்கும் உங்களிடத்தில்
பொறுமையாய் இருப்பேன்? அவனை
என்னிடத்தில் கொண்டுவாருங்கள் என்
றார். இயேசு பிசாசை அதட்டினார்; 18
உடனே அது அவனை விட்டுப் புறப்

பட்டது; அந்நேரமே அந்த இளைஞன்
சொஸ்தமானான்.
19 அப்பொழுது, சீஷர்கள் இயேசுவி
னிடத்தில்தனித்து வந்து: அதைத் துரத்
திவிட எங்களால் ஏன் கூடாமற் போ
20 யிற்று என்று கேட்டார்கள். அதற்கு
இயேசு: உங்கள் அவிசுவாசத்தினாலே
தான்; கடுகுவிதையளவு விசுவாசம்
உங்களுக்கு இருந்தால் நீங்கள் இந்த
மலையைப் பார்த்து, இவ்விடம்விட்டு
அப்புறம் போ என்று சொல்ல அது
அப்புறம் போம்; உங்களால் கூடாத
காரியம் ஒன்றுமிராது என்று, மெய்
யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.
21 இந்த ஜாதிப்பிசாசு ஜெபத்தினாலும் உப
வாசத்தினாலுமேயன்றி மற்றெவ்விதத்தி
னாலும் புறப்பட்டுப்போகாது என்றார்.
22 அவர்கள் கலிலேயாவிலே சஞ்சரிக்
கும்போது, இயேசு அவர்களை நோக்கி:
மனுஷகுமாரன் மனுஷர் கைகளில் ஒப்
23 புக்கொடுக்கப்படுவார். அவர்கள்
அவரைக் கொலைசெய்வார்கள்; ஆகிலும்
மூன்றாம்நாளிலே உயிர்த்தெழுந்திருப்
பார் என்றார். அவர்கள் மிகுந்த துக்க
மடைந்தார்கள்.
24 அவர்கள் கப்பர்நகூமில் வந்த
போது, வரிப்பணம் வாங்குகிறவர்கள்
பேதுருவினிடத்தில் வந்து: உங்கள்
போதகர் வரிப்பணம் செலுத்துகிறதில்
லையா என்று கேட்டார்கள்; செலுத்து
கிறார் என்றான்.
25 அவன் வீட்டிற்குள் வந்தபோது,
அவன் பேசுகிறதற்கு முன்னமே இயேசு
அவனை நோக்கி: சீமோனே, உனக்கு
எப்படித் தோன்றுகிறது? பூமியின்
ராஜாக்கள் தீர்வையையும் வரியையும்
தங்கள் பிள்ளைகளிடத்திலோ, அந்நியரி
டத்திலோ, யாரிடத்தில் வாங்குகிறார்
26 கள் என்று கேட்டார். அதற்குப் பே
துரு: அந்நியரிடத்தில் வாங்குகிறார்கள்
என்றான். இயேசு அவனை நோக்கி:
அப்படியானால் பிள்ளைகள் அதைச்
27 செலுத்தவேண்டுவதில்லையே. ஆகிலும்,
நாம் அவர்களுக்கு இடறலாயிராத
படிக்கு, நீ கடலுக்குப் போய், தூண்
டில் போட்டு, முதலாவது அகப்படுகிற
மீனைப் பிடித்து, அதின் வாயைத் திறந்
துபார்; ஒரு வெள்ளிப்பணத்தைக் காண்
பாய்; அதை எடுத்து எனக்காகவும்
உனக்காகவும் அவர்களிடத்தில் கொடு
என்றார்.
அவ்வேளையிலே சீஷர்கள் இயேசு 18
வினிடத்தில் வந்து: பரலோகராஜ்யத்
தில் எவன் பெரியவனாயிருப்பான் என்று
கேட்டார்கள்.
இயேசு ஒரு பிள்ளையைத் தம்மிடத் 2
தில் அழைத்து, அதை அவர்கள் நடுவே
நிறுத்தி: நீங்கள் மனந்திரும்பிப் பிள்ளை 3
களைப்போல் ஆகாவிட்டால், பரலோக
ராஜ்யத்தில் பிரவேசிக்கமாட்டீர்கள்
என்று, மெய்யாகவே உங்களுக்குச்
சொல்லுகிறேன். ஆகையால் இந்தப் 4
பிள்ளையைப்போலத் தன்னைத் தாழ்த்து
கிறவன் எவனோ, அவனே பரலோக
ராஜ்யத்தில் பெரியவனாயிருப்பான். இப் 5
படிப்பட்ட ஒரு பிள்ளையை என் நாமத்
தினிமித்தம் ஏற்றுக்கொள்ளுகிறவன்
என்னை ஏற்றுக்கொள்ளுகிறான். என் 6
னிடத்தில் விசுவாசமாயிருக்கிற இந்
தச் சிறியரில் ஒருவனுக்கு இடறல்
உண்டாக்குகிறவன் எவனோ, அவனு
டைய கழுத்தில் ஏந்திரக்கல்லைக் கட்டி,
சமுத்திரத்தின் ஆழத்திலே அவனை
அமிழ்த்துகிறது அவனுக்கு நலமா
யிருக்கும்.
இடறல்களினிமித்தம் உலகத்துக்கு 7
ஐயோ, இடறல்கள் வருவது அவசி
யம், ஆனாலும் எந்த மனுஷனால் இட
றல் வருகிறதோ, அவனுக்கு ஐயோ,
உன் கையாவது உன் காலாவது உன 8
க்கு இடறல் உண்டாக்கினால், அதைத்
தறித்து எறிந்துபோடு; நீ இரண்டு
கையுடையவனாய், அல்லது இரண்டு
காலுடையவனாய் நித்திய அக்கினியிலே
தள்ளப்படுவதைப்பார்க்கிலும், சப்
பாணியாய், அல்லது ஊனனாய், நித்திய
ஜீவனுக்குள் பிரவேசிப்பது உனக்கு
நலமாயிருக்கும். உன் கண் உனக்கு 9
இடறல் உண்டாக்கினால், அதைப்
பிடுங்கி எறிந்துபோடு; இரண்டு கண்
ணுடையவனாய் எரிநரகத்தில் தள்ளப்
படுவதைப்பார்க்கிலும், ஒற்றைக்கண்

னாய் ஜீவனுக்குள் பிரவேசிப்பது
உனக்கு நலமாயிருக்கும்.
10 இந்தச் சிறியரில் ஒருவனையும் அற்ப
மாய் எண்ணாதபடிக்கு எச்சரிக்கையா
யிருங்கள்; அவர்களுக்குரிய தேவதூ
தர்கள் பரலோகத்திலே என் பரமபிதா
வின் சமுகத்தை எப்போதும் தரிசிக்கி
றார்கள் என்று உங்களுக்குச் சொல்லு
கிறேன்.
11 மனுஷகுமாரன் கெட்டுப்போனதை
12 இரட்சிக்க வந்தார். உங்களுக்கு எப்ப
டித தோன்றுகிறது? ஒரு மனுஷனுக்கு
நூறு ஆடுகளிருக்க, அவைகளில் ஒன்று
சிதறிப்போனால், அவன் மற்றத் தொண்
ணூற்றொன்பது ஆடுகளையும் மலைகளில்
விட்டுப்போய்ச் சிதறிப்போனதைத
13 தேடாமலிருப்பானோ? அவன் அதைக
கண்டுபிடித்தால், சிதறிப்போகாத
தொண்ணூற்றொன்பது ஆடுகளைககுறித்
துச சந்தோஷப்படுகிறதைப் பார்க்கி
லும், அதைக்குறித்து அதிகமாய்ச் சந்
தோஷப்படுவான் என்று, மெய்யாகவே
14 உஙகளுக்குச் சொல்லுகிறேன். இவ்
விதமாக, இந்தச் சிறியரில் ஒருவனாகி
லும் கெட்டுப்போவது பரலோகத்திலி
ருக்கிற உங்கள் பிதாவின் சித்தமல்ல.
15 உன் சகோதரன் உனக்கு விரோத
மாகக் குற்றஞ்செய்தால், அவனிடத்
தில் போய், நீயும் அவனும் தனித்திருக்
கையில், அவன் குற்றத்தை அவனுக்கு
உணர்த்து; அவன் உனக்குச் செவிகொ
டுத்தால், உன் சகோதரனை ஆதாயப்
16 படுத்திக்கொண்டாய். அவன் செவி
கொடாமற்போனால், இரண்டு மூன்று
சாட்சிகளுடைய வாக்கினாலே சங்கதிக
ளெல்லாம் நிலைவரப்படும்படி, இரண்
டொருவரை உன்னுடனே கூட்டிக்
17 கொண்டுபோ. அவர்களுக்கும் அவன்
செவிகொடாமற்போனால், அதைச்
சபைக்குத் தெரியப்படுத்து; சபைக்கும்
செவிகொடாதிருப்பானானால் அவன்
உனக்கு அஞ்ஞானியைப்போலவும்
ஆயக்காரனைப்போலவும் இருப்பானாக.
18 பூலோகத்திலே நீங்கள் எவைகளைக்
கட்டுவீர்களோ அவைகள் பரலோகத்தி
லும் கட்டப்பட்டிருக்கும்; பூலோகத்தி
லே நீங்கள் எவைகளைக் கட்டவிழ்ப்
பீர்களோ அவைகள் பரலோகத்திலும்
கட்டவிழ்க்கப்பட்டிருக்கும் என்று,
மெய்யாகவே உங்களுக்குச் சொல்லு
கிறேன்.
அல்லாமலும், உங்களில் இரண்டு 19
பேர் தாங்கள் வேண்டிக்கொள்ளப்போ
கிற எந்தக் காரியத்தைக்குறித்தாகிலும்
பூமியிலே ஒருமனப்பட்டிருந்தால், பர
லோகத்தில் இருக்கிற என் பிதாவினால்
அது அவர்களுக்கு உண்டாகும் என்று
உங்களுக்குச் சொல்லுகிறேன். ஏனெ 20
னில், இரண்டுபேராவது மூன்றுபேரா
வது என் நாமத்தினாலே எங்கே கூடியி
ருக்கிறார்களோ, அங்கே அவர்கள் நடு
விலே இருக்கிறேன் என்றார்.
அப்பொழுது, பேதுரு அவரிடத்தில் 21
வந்து. ஆண்டவரே, என் சகோதரன்
எனக்கு விரோதமாய்க் குற்றஞ் செய்து
வந்தால், நான் எத்தனைதரம் மன்னிக்க
வேண்டும்? ஏழுதரமட்டுமோ என்று
கேட்டான். அதற்கு இயேசு. ஏழுத 22
ரம் மாத்திரம் அல்ல, ஏழெழுபதுதர
மட்டும் என்று உனக்குச் சொல்லுகி
றேன். எப்படியெனில், பரலோகராஜ 23
யம் தன் ஊழியக்காரரிடத்தில் கணக்
குப் பார்க்கவேண்டுமென்றிருந்த ஒரு
ராஜாவுக்கு ஒப்பாயிருக்கிறது. அவன் 24
கணக்குப்பார்க்கத் தொடங்கினபோது,
பதினாயிரம் தாலந்து கடன்பட்டவன்
ஒருவனை அவனுக்கு முன்பாகக் கொண்
டுவந்தார்கள். கடனைத் தீர்க்க அவ 25
னுக்கு நிவாகம் இல்லாதபடியால்,
அவனுடைய ஆண்டவன் அவனையும்
அவன் பெண்ஜாதி பிள்ளைகளையும், அவ
னுக்கு உண்டான எல்லாவற்றையும்
விற்று, கடனைத் தீர்க்கும்படிக் கட்ட
ளையிட்டான். அப்பொழுது, அந்த 26
ஊழியக்காரன் தாழ விழுந்து, வண
ங்கி: ஆண்டவனே! என்னிடத்தில் பொ
றுமையாயிரும், எல்லாவற்றையும்
உமக்குக் கொடுத்துத் தீர்க்கிறேன் என்
றான். அந்த ஊழியக்காரனுடைய 27
ஆண்டவன் மனதிரங்கி, அவனை விடு
தலைபண்ணி, கடனையும் அவனுக்கு
மன்னித்துவிட்டான்.

28 அப்படியிருக்க, அந்த ஊழியக்கா
ரன் புறப்பட்டுப் போகையில், தன்னி
டத்தில் நூறு வெள்ளிப்பணம் கடன்
பட்டிருந்தவனாகிய தன் உடன் வேலைக்
காரரில் ஒருவனைக் கண்டு, அவனைப்
பிடித்து, தொண்டையை நெரித்து: நீ
பட்ட கடனை எனக்குக் கொடுத்துத்
29 தீர்க்கவேண்டும் என்றான். அப்பொ
ழுது அவனுடைய உடன் வேலைக்கா
ரன் அவன் காலிலே விழுந்து: என்னி
டத்தில் பொறுமையாயிரும், எல்லாவற்
றையும் உமக்குக் கொடுத்துத் தீர்க்கி
றேன் என்று, அவனை வேண்டிக்கொண்
30 டான். அவனோ சம்மதியாமல், போய்,
அவன் பட்ட கடனைக் கொடுத்துத்
தீர்க்குமளவும் அவனைக் காவலில் போ
டுவித்தான்.
31 நடந்ததை அவனுடைய உடன்
வேலைக்காரர் கண்டு, மிகவும் துக்கப்
பட்டு, ஆண்டவனிடத்தில் வந்து, நடந்
32 ததையெல்லாம் அறிவித்தார்கள். அப்
பொழுது, அவனுடைய ஆண்டவன்
அவனை அழைப்பித்து: பொல்லாத
ஊழியக்காரனே, நீ என்னை வேண்டிக்
கொண்டபடியினால் அந்தக்கடன் முழு
வதையும் உனக்கு மன்னித்துவிட்
33 டேன். நான் உனக்கு இரங்கினது
போல, நீயும் உன் உடன் வேலைக்கா
ரனுக்கு இரங்கவேண்டாமோ என்று
34 சொல்லி, அவனுடைய ஆண்டவன்
கோபமடைந்து, அவன் பட்ட கடனை
யெல்லாம் தனக்குக் கொடுத்துத் தீர்க்
குமளவும் உபாதிக்கிறவர்களிடத்தில்
35 அவனை ஒப்புக்கொடுத்தான். நீங்க
ளும் அவனவன் தன்தன் சகோதரன்
செய்த தப்பிதங்களை மனப்பூர்வமாய்
மன்னியாமற்போனால், என் பரமபிதா
வும் உங்களுக்கு இப்படியே செய்வார்
என்றார்.

19 இயேசு இந்த வசனங்களைச் சொ
ல்லி முடித்தபின்பு, அவர் கலிலேயா
வை விட்டு யோர்தானுக்கு அக்கரை
யான யூதேயாவின் எல்லைகளில் வந்
2 தார். திரளான ஜனங்கள் அவருக்குப்
பின் சென்றார்கள்; அவ்விடத்தில்
அவர்களைச் சொஸ்தமாக்கினார்.

அப்பொழுது, பரிசேயர் அவரைச் 3
சோதிக்கவேண்டுமென்று அவரிடத்தில்
வந்து: புருஷனானவன் தன் மனைவியை
எந்த முகாந்தரத்தினாலாகிலும் தள்ளி
விடுவது நியாயமா என்று கேட்டார்
கள்.

அவர்களுக்கு அவர் பிரதியுத்தர 4
மாக: ஆதியிலே மனுஷரை உண்டாக்
கினவர் அவர்களை ஆணும் பெண்ணு
மாக உண்டாக்கினார் என்பதையும்,
இதினிமித்தம் புருஷனானவன் தன் 5
தகப்பனையும் தாயையும் விட்டுத் தன்
மனைவியோடே இசைந்திருப்பான்;
அவர்கள் இருவரும் ஒரே மாம்சமா
யிருப்பார்கள் என்று அவர் சொன்ன
தையும், நீங்கள் வாசிக்கவில்லையா?
இப்படி இருக்கிறபடியினால், அவர்கள் 6
இருவராயிராமல், ஒரே மாம்சமாயிருக்
கிறார்கள்: ஆகையால், தேவன் இணைத்
ததை மனுஷன் பிரிக்காதிருக்கக்கட
வன் என்றார்.

அதற்கு அவர்கள்: அப்படியானால், 7
தள்ளுதற் சீட்டைக் கொடுத்து, அவ
ளைத் தள்ளிவிடலாமென்று மோசே ஏன்
கட்டளையிட்டார் என்றார்கள். அதற்கு 8
அவர்: உங்கள் மனைவிகளைத் தள்ளிவிட
லாமென்று உங்கள் இருதய கடினத்தி
னிமித்தம் மோசே உங்களுக்கு இடங்
கொடுத்தார்; ஆதிமுதலாய் அப்படி
யிருக்கவில்லை. ஆதலால், எவனாகிலும் 9
தன் மனைவி வேசித்தனஞ் செய்ததி
னிமித்தமேயன்றி, அவளைத் தள்ளி
விட்டு வேறொருத்தியை விவாகம் பண்
ணினால், அவன் விபசாரஞ் செய்கிற
வனாயிருப்பான்; தள்ளிவிடப்பட்ட
வளை விவாகம் பண்ணுகிறவனும் விப
சாரஞ் செய்கிறவனாயிருப்பான் என்று
உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

அவருடைய சீஷர்கள் அவரை நோ 10
க்கி: மனைவியைப்பற்றி புருஷனுடைய
காரியம் இப்படியிருந்தால், விவாகம்
பண்ணுகிறது நல்லதல்ல என்றார்கள்.
அதற்கு அவர்: வரம்பெற்றவர்களே 11
தவிர மற்றவர்கள் இந்த வசனத்தை
ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். தாயின் 12
வயிற்றிலிருந்து அண்ணகர்களாய்ப்

பிறந்தவர்களும் உண்டு; மனுஷர்க ரருக்குக் கொடு, அப்பொழுது, பரலோ
ளால் அண்ணகர்க ளாக்கப்பட்டவர் கத்தில் உனக்குப் பொக்கிஷம் உண்
களும் உண்டு; பரலோகராஜ்யத்தினி டாயிருக்கும்; பின்பு என்னைப் பின்பற்
மித்தம் தங்களை அண்ணகர்க ளாக்கிக் றிவா என்றார். அந்த வாலிபன் மிகுந்த 22
கொண்டவர்களும் உண்டு; இதை ஏற் ஆஸ்தியுள்ளவனாயிருந்தபடியால், இந்த
றுக்கொள்ள வல்லவன் ஏற்றுக்கொள் வார்த்தையைக் கேட்டபொழுது, துக்க
ளக்கடவன் என்றார். மடைந்தவனாய்ப் போய்விட்டான்.

13 அப்பொழுது, சிறுபிள்ளைகளின்மேல் அவர் கைகளை வைத்து ஜெபம் பண்ணும்படிக்கு அவர்களை அவரிடத்தில் கொண்டுவந்தார்கள்; கொண்டுவந்தவர்
14 களைச் சீஷர்கள் அதட்டினார்கள். இயேசுவோ: சிறுபிள்ளைகள் என்னிடத்தில் வருகிறதற்கு இடங்கொடுங்கள்; அவர்களைத் தடை பண்ணாதிருங்கள்; பரலோகராஜ்யம் அப்படிப்பட்டவர்களு
15 டையது என்று சொல்லி, அவர்கள் மேல் கைகளை வைத்து, பின்பு அவ்விடம் விட்டுப் புறப்பட்டுப்போனார்.

16 அப்பொழுது ஒருவன் வந்து, அவரை நோக்கி: நல்ல போதகரே, நித்திய ஜீவனை அடைவதற்கு நான் எந்த நன்மையைச் செய்யவேண்டும் என்று
17 கேட்டான். அதற்கு அவர்: நீ என்னை நல்லவன் என்று சொல்வானேன்? தேவன் ஒருவர்தவிர நல்லவன் ஒருவனும் இல்லையே; நீ ஜீவனில் பிரவேசிக்க விரும்பினால் கற்பனைகளைக் கைக்கொள்
18 என்றார். அவன் அவரை நோக்கி: எவைகளை என்று கேட்டான். அதற்கு இயேசு: கொலை செய்யாதிருப்பாயாக, விபசாரஞ் செய்யாதிருப்பாயாக, களவு செய்யாதிருப்பாயாக, பொய்ச்சாட்சி
19 சொல்லாதிருப்பாயாக; உன் தகப்பனையும் உன் தாயையும் கனம்பண்ணுவாயாக; உன்னிடத்தில் நீ அன்புகூருவது போலப் பிறனிடத்திலும் அன்பு கூருவாயாக என்பவைகளையே என்றார்.
20 அந்த வாலிபன் அவரை நோக்கி: இவைகளையெல்லாம் என் சிறுவயது முதல் கைக்கொண்டிருக்கிறேன்; இன்னும் என்னிடத்தில் குறைவு என்ன என்றான்.

21 அதற்கு இயேசு: நீ பூரண சற்குணனாயிருக்க விரும்பினால், போய், உனக்கு உண்டானவைகளை விற்று, தரித்தி

அப்பொழுது, இயேசு தம்முடைய 23
சீஷர்களை நோக்கி: ஐசுவரியவான் பர
லோகராஜ்யத்தில் பிரவேசிப்பது அரி
தென்று, மெய்யாகவே உங்களுக்குச்
சொல்லுகிறேன். மேலும் ஐசுவரிய 24
வான் தேவனுடைய ராஜ்யத்தில் பிர
வேசிப்பதைப்பார்க்கிலும், ஒட்டகமா
னது ஊசியின் காதிலே நுழைவது எளி
தாயிருக்கும் என்று உங்களுக்குச்
சொல்லுகிறேன் என்றார்.

அவருடைய சீஷர்கள் அதைக் 25
கேட்டு மிகவும் ஆச்சரியப்பட்டு: அப்
படியானால், யார் இரட்சிக்கப்படக்கூ
டும் என்றார்கள். இயேசு, அவர்களைப் 26
பார்த்து: மனுஷரால் இது கூடாதது
தான்; தேவனாலே எல்லாம் கூடும் என்
றார்.

அப்பொழுது, பேதுரு அவரை நோ 27
க்கி: இதோ, நாங்கள் எல்லாவற்றை
யும் விட்டு, உம்மைப் பின்பற்றினோ
மே; எங்களுக்கு என்ன கிடைக்கும்
என்றான்.

அதற்கு இயேசு: மறுஜெந்ம காலத் 28
திலே மனுஷகுமாரன் தம்முடைய
மகிமையுள்ள சிங்காசனத்தின்மேல்
வீற்றிருக்கும்போது, என்னைப் பின்பற்
றின நீங்களும், இஸ்ரவேலின் பன்னி
ரண்டு கோத்திரங்களையும் நியாயந்தீர்க்
கிறவர்களாகப் பன்னிரண்டு சிங்காச
னங்களின்மேல் வீற்றிருப்பீர்கள்
என்று, மெய்யாகவே உங்களுக்குச்
சொல்லுகிறேன். என் நாமத்தினிமித் 29
தம் வீட்டையாவது, சகோதரரையா
வது, சகோதரிகளையாவது, தகப்பனை
யாவது, தாயையாவது, மனைவியையா
வது, பிள்ளைகளையாவது, நிலங்களையா
வது விட்டவன் எவனோ, அவன் நூறத்
தனையாய் அடைந்து, நித்திய ஜீவனை
யும் சுதந்தரித்துக்கொள்ளுவான்; ஆகி 30

னும், முந்தினோர் அநேகர் பிந்தினோரா
யும், பிந்தினோர் அநேகர் முந்தினோரா
யும் இருப்பார்கள் என்றார்.
20 பரலோகராஜ்யம் வீட்டெஜமானா
கிய ஒரு மனுஷனுக்கு ஒப்பாயிருக்
கிறது; அவன் தன் திராட்சத்தோட்டத்
துக்கு வேலையாட்களை அமர்த்த அதிகா
2 லையிலே புறப்பட்டான். வேலையாட்
களுடன் நாளொன்றுக்கு ஒரு பணம்
கூலிபேசி, அவர்களைத் தன் திராட்சத்
3 தோட்டத்துக்கு அனுப்பினான். மூன்
றாம் மணி வேளையிலும் அவன் புறப்
பட்டுப் போய், கடைத்தெருவிலே சும்
மா நிற்கிற வேறு சிலரைக் கண்டு:
4 நீங்களும் திராட்சத்தோட்டத்துக்குப்
போங்கள், நியாயமானபடி உங்களுக்
குக் கூலி கொடுப்பேன் என்றான்; அவர்
5 களும் போனார்கள். மறுபடியும்,
ஆறாம் ஒன்பதாம் மணி வேளையிலும்
அவன் போய் அப்படியே செய்தான்.
6 பதினோராம் மணி வேளையிலும் அவன்
போய், சும்மா நிற்கிற வேறு சிலரைக்
கண்டு: நீங்கள் பகல் முழுவதும் இங்
கே சும்மா நிற்கிறதென்ன என்று கேட்
7 டான். அதற்கு அவர்கள்: ஒருவரும்
எங்களுக்கு வேலையிடவில்லை என்றார்
கள். அவன் அவர்களை நோக்கி: நீங்க
ளும் திராட்சத்தோட்டத்துக்குப் போங்
கள்; நியாயமானபடி கூலி பெற்றுக்
கொள்வீர்கள் என்றான்.
8 சாயங்காலத்தில், திராட்சத்தோட்
டத்துக்கு எஜமான் தன் காரியக்காரனை
நோக்கி: நீ வேலையாட்களை அழைத்து,
பிந்திவந்தவர்கள் தொடங்கி முந்திவந்
தவர்கள் வரைக்கும் அவர்களுக்குக்
9 கூலி கொடு என்றான். அப்பொழுது
பதினோராம் மணி வேளையில் வேலை
யமர்த்தப்பட்டவர்கள் வந்து ஆளுக்கு
ஒவ்வொரு பணம் வாங்கினார்கள்.
10 முந்தி அமர்த்தப்பட்டவர்கள் வந்து,
தங்களுக்கு அதிக கூலி கிடைக்கும்
என்று எண்ணினார்கள், அவர்களும்
ஆளுக்கு ஒவ்வொரு பணம் வாங்கினார்
11 கள். வாங்கிக்கொண்டு, வீட்டெஜ
12 மானை நோக்கி: பிந்திவந்தவர்களாகிய
இவர்கள் ஒரு மணி நேரமாத்திரம்
வேலைசெய்தார்கள்; பகலின் கஷ்டத்
தையும் வெயிலின் உஷ்ணத்தையும்
சகித்த எங்களுக்கு இவர்களைச் சம
மாக்கினீரே என்று முறுமுறுத்தார்கள்.
அவர்களில் ஒருவனுக்கு அவன் பிரதி 13
யுத்தரமாக: சிநேகிதனே, நான் உனக்கு
அநியாயஞ் செய்யவில்லை; நீ என்னி
டத்தில் ஒரு பணத்துக்குச் சம்மதிக்க
வில்லையா? உன்னுடையதை நீ வாங் 14
கிக்கொண்டு போ, உனக்குக் கொடுத்
ததுபோலப் பிந்திவந்தவனாகிய இவ
னுக்கும் கொடுப்பது என்னுடைய இஷ்
டம். என்னுடையதை என் இஷ்டப் 15
படி செய்ய எனக்கு அதிகாரமில்லையா?
நான் தயாளனாயிருக்கிறபடியால், நீ
வன்கண்ணனாயிருக்கலாமா என்றான்.
இவ்விதமாக, பிந்தினோர் முந்தினோரா 16
யும், முந்தினோர் பிந்தினோராயும் இருப்
பார்கள்; அழைக்கப்பட்டவர்கள் அநே
கர், தெரிந்துகொள்ளப்பட்டவர்களோ
சிலர் என்றார்.
இயேசு எருசலேமுக்குப் போகும் 17
போது, வழியிலே பன்னிரண்டு சீஷ
ரையும் தனியே அழைத்து: இதோ, 18
எருசலேமுக்குப் போகிறோம்; மனுஷ
குமாரன் பிரதான ஆசாரியரிடத்திலும்
வேதபாரகரிடத்திலும் ஒப்புக்கொடுக்
கப்படுவார்; அவர்கள் அவரை மரண
ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்து, அவரைப் 19
பரியாசம் பண்ணவும், வாரினால் அடிக்
கவும், சிலுவையில் அறையவும் புற
ஜாதியாரிடத்தில் ஒப்புக்கொடுப்பார்
கள்; ஆகிலும் மூன்றாம்நாளிலே அவர்
உயிரோடே எழுந்திருப்பார் என்
றார்.
அப்பொழுது, செபெதேயுவின் குமா 20
ரருடைய தாய் தன் குமாரரோடுகூட
அவரிடத்தில் வந்து, அவரைப் பணிந்
துகொண்டு: உம்மிடத்தில் ஒரு விண்
ணப்பம் பண்ணவேண்டும் என்றாள்.
அவர் அவளை நோக்கி: உனக்கு என்ன 21
வேண்டும் என்று கேட்டார். அதற்கு
அவள்: உம்முடைய ராஜ்யத்திலே என்
குமாரராகிய இவ்விரண்டுபேரில் ஒரு
வன் உமது வலதுபாரிசத்திலும், ஒரு
வன் உமது இடதுபாரிசத்திலும் உட்

கார்ந்திருக்கும்படி அருள்செய்யவேண்
டும் என்றாள்.
22 இயேசு பிரதியுத்தரமாக: நீங்கள்
கேட்டுக்கொள்ளுகிறது இன்னது என்று
உங்களுக்குத் தெரியவில்லை. நான்
குடிக்கும் பாத்திரத்தில் நீங்கள் குடிக்க
வும், நான் பெறும் ஸ்நானத்தை நீங்கள்
பெறவும் உங்களால் கூடுமா என்றார்.
அதற்கு அவர்கள்: கூடும் என்றார்கள்.
23 அவர் அவர்களை நோக்கி: என் பாத்திரத்
தில் நீங்கள் குடிப்பீர்கள், நான் பெறும்
ஸ்நானத்தையும் நீங்கள் பெறுவீர்கள்;
ஆனாலும், என் வலதுபாரிசத்திலும்
என் இடதுபாரிசத்திலும் உட்கார்ந்தி
ருக்கும்படி என் பிதாவினால் எவர்க
ளுக்கு ஆயத்தம் பண்ணப்பட்டிருக்கி
றதோ அவர்களுக்கே யல்லாமல், மற்
றொருவருக்கும் அதை அருளுவது என்
காரியமல்ல என்றார்.
24 மற்றப் பத்துப்பேரும் அதைக் கே
ட்டு, அந்த இரண்டு சகோதரர் பேரி
லும் எரிச்சலானார்கள்.
25 அப்பொழுது, இயேசு அவர்களைக்
கிட்டவரச்செய்து: புறஜாதியாருடைய
அதிகாரிகள் அவர்களை இறுமாப்பாய்
ஆளுகிறார்கள் என்றும், பெரியவர்கள்
அவர்கள்மேல் கடினமாய் அதிகாரஞ்
செலுத்துகிறார்கள் என்றும், நீங்கள்
26 அறிந்திருக்கிறீர்கள். உங்களுக்குள்ளே
அப்படி இருக்கலாகாது; உங்களில்
எவனாகிலும் பெரியவனாயிருக்க விரும்
பினால், அவன் உங்களுக்குப் பணிவி
27 டைக்காரனா யிருக்கக்கடவன். உங்க
ளில் எவனாகிலும் முதன்மையானவனா
யிருக்க விரும்பினால், அவன் உங்க
ளுக்கு ஊழியக்காரனா யிருக்கக்கட
28 வன். அப்படியே, மனுஷகுமாரனும்
ஊழியங்கொள்ளும்படி வராமல், ஊழி
யஞ் செய்யவும், அநேகரை மீட்கும்
பொருளாகத் தம்முடைய ஜீவனைக்
கொடுக்கவும் வந்தார் என்றார்.
29 அவர்கள் எரிகோவிலிருந்து புறப்
பட்டுப் போகையில், திரளான ஜனங்
கள் அவருக்குப் பின்சென்றார்கள்.
30 அப்பொழுது வழியருகே உட்கார்ந்
திருந்த இரண்டு குருடர், இயேசு அவ்
வழியே வருகிறார் என்று கேள்விப்ப
ட்டு: ஆண்டவரே, தாவீதின் குமாரனே,
எங்களுக்கு இரங்கும் என்று கூப்பிட்
டார்கள். அவர்கள் பேசாதிருக்கும் 31
படி ஜனங்கள் அவர்களை அதட்டினார்
கள். அவர்களோ: ஆண்டவரே, தா
வீதின் குமாரனே, எங்களுக்கு இரங்
கும் என்று அதிகமாய்க் கூப்பிட்டார்
கள்.
இயேசு நின்று, அவர்களைத் தம்மிட 32
த்தில் அழைத்து: நான் உங்களுக்கு
என்னசெய்யவேண்டும் என்றிருக்கிறீர்
கள் என்றார். அதற்கு அவர்கள்: ஆண் 33
டவரே, எங்கள் கண்களைத் திறக்க
வேண்டும் என்றார்கள். இயேசு மனது 34
ருகி, அவர்கள் கண்களைத் தொட்டார்;
உடனே அவர்கள் பார்வையடைந்து,
அவருக்குப் பின்சென்றார்கள்.

அவர்கள் எருசலேமுக்குச் சமீப **21**
மாய்ச் சேர்ந்து, ஒலிவமலைக்கு அரு
கான பெத்பகேயுக்கு வந்தபோது,
இயேசுவானவர் சீஷரில் இரண்டு
பேரை நோக்கி: உங்களுக்கு எதிரே 2
இருக்கிற கிராமத்துக்குப் போங்கள்;
போனவுடனே, அங்கே ஒரு கழுதை
யையும் அதனோடே ஒரு குட்டியை
யும் கட்டியிருக்கக் காண்பீர்கள்;
அவைகளை அவிழ்த்து என்னிடத்தில்
கொண்டுவாருங்கள். ஒருவன் உங் 3
களுக்கு ஏதாகிலும் சொன்னால்: இவை
கள் ஆண்டவருக்கு வேண்டுமென்று
சொல்லுங்கள்; உடனே அவைகளை
அனுப்பிவிடுவான் என்று சொல்லி,
அவர்களை அனுப்பினார்.
இதோ, உன் ராஜா சாந்தகுணமுள் 4
ளவராய், கழுதையின்மேலும் கழுதைக்
குட்டியாகிய மறியின்மேலும் ஏறிக்
கொண்டு, உன்னிடத்தில் வருகிறார்
என்று சீயோன் குமாரத்திக்குச் சொல்
லுங்கள் என்று, தீர்க்கதரிசியினால் 5
உரைக்கப்பட்டது நிறைவேறும்படி
இதெல்லாம் நடந்தது.
சீஷர்கள் போய், இயேசு தங்களுக் 6
குக் கட்டளையிட்டபடியே செய்து,
கழுதையையும் குட்டியையும் கொண் 7
டுவந்து, அவைகள்மேல் தங்கள் வஸ்

திரங்களைப் போட்டு, அவரை ஏற்றினார்
8 கள். திரளான ஜனங்கள் தங்கள் வஸ்
திரங்களை வழியிலே விரித்தார்கள்;
வேறு சிலர் மரக்கிளைகளைத் தறித்து வழி
9 யிலே பரப்பினார்கள். முன்நடப்பா
ரும் பின்நடப்பாருமாகிய திரளான
ஜனங்கள்: தாவீதின் குமாரனுக்கு
ஓசன்னா! கர்த்தரின் நாமத்தினாலே வரு
கிறவர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர், உன்
னதத்திலே ஓசன்னா என்று சொல்லி
ஆர்ப்பரித்தார்கள்.
10 அவர் எருசலேமுக்குள் பிரவேசிக்
கையில், நகரத்தார் யாவரும் ஆச்சரி
யப்பட்டு, இவர் யார்? என்று விசாரித்
11 தார்கள். அதற்கு ஜனங்கள்: இவர்
கலிலேயாவிலுள்ள நாசரேத்திலிருந்து
வந்த தீர்க்கதரிசியாகிய இயேசு என்
றார்கள்.
12 இயேசு தேவாலயத்தில் பிரவேசித்து,
ஆலயத்திலே விற்கிறவர்களும் கொள்
ளுகிறவர்களுமாகிய யாவரையும் வெ
ளியே துரத்தி, காசுக்காரருடைய பல
கைகளையும் புறா விற்கிறவர்களின் ஆச
13 னங்களையும் கவிழ்த்து: என்னுடைய
வீடு ஜெபவீடு என்னப்படும் என்று எழு
தியிருக்கிறது; நீங்களோ அதைக் கள்
ளர் குகையாக்கினீர்கள் என்றார்.
14 அப்பொழுது, குருடரும் சப்பாணி
களும் தேவாலயத்திலே அவரிடத்திற்கு
வந்தார்கள், அவர்களைச் சொஸ்தமாக்
கினார்.
15 அவர் செய்த அதிசயங்களையும், தா
வீதின் குமாரனுக்கு ஓசன்னா! என்று
தேவாலயத்திலே ஆர்ப்பரிக்கிற பிள்ளை
களையும், பிரதான ஆசாரியரும் வேதபா
16 ரகரும் கண்டு, கோபமடைந்து, அவ
ரை நோக்கி: இவர்கள் சொல்லுகிற
தைக் கேட்கிறீரோ என்றார்கள். அதற்கு
இயேசு: ஆம், கேட்கிறேன். குழந்தை
களுடைய வாயினாலும் பாலகருடைய
வாயினாலும் துதி உண்டாகும்படி செய்
தீர் என்பதை நீங்கள் ஒருக்காலும் வா
சிக்கவில்லையா என்றார்.
17 அவர்களை விட்டு நகரத்திலிருந்து
புறப்பட்டு, பெத்தானியாவுக்குப்போய்,
அங்கே இராத்தங்கினார்.

காலையிலே அவர் நகரத்துக்குத் திரும் 18
பிவருகையில், அவருக்குப் பசியுண்டா
யிற்று. அப்பொழுது வழியருகே ஒரு 19
அத்திமரத்தைக் கண்டு, அதினிடத்திற்
போய், அதிலே இலைகளையன்றி வே
றொன்றையுங் காணாமல்: இனி ஒருக்
காலும் உன்னிடத்தில் கனி உண்டா
காதிருக்கக்கடவது என்றார்; உடனே
அத்திமரம் பட்டுப்போயிற்று. சீஷர் 20
கள் அதைக் கண்டு: இந்த அத்திமரம்
எத்தனை சீக்கிரமாய்ப் பட்டுப்போ
யிற்று. என்று சொல்லி ஆச்சரியப்பட்
டார்கள்.
இயேசு அவர்களை நோக்கி: நீங்கள் 21
சந்தேகப்படாமல் விசுவாசமுள்ளவர்
களாயிருந்தால், இந்த அத்திமரத்திற்
குச் செய்ததை நீங்கள் செய்வதுமல்
லாமல், இந்த மலையைப் பார்த்து: நீ
பெயர்ந்து சமுத்திரத்திலே தள்ளுண்டு
போ என்று சொன்னாலும் அப்படியா
கும் என்று, மெய்யாகவே உங்களுக்
குச் சொல்லுகிறேன். மேலும், நீங்கள் 22
விசுவாசமுள்ளவர்களாய ஜெபத்திலே
எவைகளைக் கேட்பீர்களோ அவை
களையெல்லாம் பெறுவீர்கள் என்றார்.
அவர் தேவாலயத்தில் வந்து, உபதே 23
சம் பண்ணுகையில், பிரதான ஆசாரி
யரும் ஜனத்தின் மூப்பரும் அவரிடத்
தில் வந்து: நீர் எந்த அதிகாரத்தினால்
இவைகளைச் செய்கிறீர்? இந்த அதிகா
ரத்தை உமக்குக் கொடுத்தவர் யார்?
என்று கேட்டார்கள்.
இயேசு பிரதியுத்தரமாக: நானும் 24
உங்களிடத்தில் ஒரு காரியத்தைக்
கேட்கிறேன், அதை எனக்குச் சொல்
லுவீர்களானால், நானும் இன்ன அதிகா
ரத்தினாலே இவைகளைச் செய்கிறே
னென்று உங்களுக்குச் சொல்லுவேன்.
யோவான் கொடுத்த ஸ்நானம் தேவ 25
னால் உண்டாயிற்றோ? மனுஷரால் உண்
டாயிற்றோ? யாரால் உண்டாயிற்று?
என்று கேட்டார்.
அதற்கு அவர்கள்: தேவனால் உண்
டாயிற்றென்று சொல்வோமானால், பின்
னை ஏன் அவனை விசுவாசிக்கவில்லை என்
று நம்மைக் கேட்பார்; மனுஷரால் 26

உணடாயிறறெனறு சொலவோமானால,
ஜனஙகளுககுப பயபபடுகிறோம, எல
லாரும யோவானைத தீாககதரிசி
யெனறு எணணுகிறாாகளே எனறு, தங
களுககுளளே ஆலோசனை பணணி,
27 இயேசுவுககுப பிரதியுததரமாக எஙக
ளுககுத தெரியாது எனறாாகள அப
பொழுது, அவா நானும இனன அதி
காரததினாலே இவைகளைச செயகிறே
னெனறு உஙகளுககுச சொலலேன
எனறாா
28 ஆயினும உஙகளுககு எபபடித
தோனறுகிறது? ஒரு மனுஷனுககு இர
ணடு குமாராா இருநதாாகள மூததவ
னிடததில அவன வநது மகனே, நீ
போய இனறைககு என திராடசத
தோடடததில வேலைசெய எனறான
29 அதறகு அவன மாடடேன எனறான
ஆகிலும, பினபு அவன மனஸதாபப
30 படடுப போனான இளையவனிடததி
லும அவன வநது, அபபடியே சொன
னான அதறகு அவன போகிறேன
ஐயா, எனறு சொலலியும,போகவிலலை
31 இவவிருவரில எவன தகபபனுடைய
சிததததினபடி செயதவன எனறு கேட
டாா, அதறகு அவாகள மூததவன
தான எனறாாகள
அபபொழுது, இயேசு அவாகளை
நோககி ஆயககாரரும வேசிகளும
உஙகளுககு முனனே தேவனுடைய
ராஜயததில பிரவேசிககிறாாகள எனறு,
மெயயாகவே உஙகளுககுச சொலலு
32 கிறேன ஏனெனறால, யோவான நீதி
மாாககமாய உஙகளிடததில வநதிருந
தும, நீஙகள அவனை விசுவாசிககவிலலை,
ஆயககாரரும வேசிகளுமோ அவனை
விசுவாசிததாாகள, அதை நீஙகள கண
டும, அவனை விசுவாசிககுமபடியாகப
பினபாகிலும மனஸதாபபபடவிலலை
எனறாா
33 வேறொருஉவமையைககேளுஙகள
வீடடெஜமானாகிய ஒரு மனுஷன இருந
தான, அவன ஒரு திராடசததோடடத
தை உணடாககி, அதைச சுறறிலும
வேலியடைதது, அதில ஒரு ஆலையை
நாடடி, கோபுரததையும கடடி,
தோடடககாரருககு அதைக குததகை
யாக விடடு, புறததேசததுககுப போ
யிருநதான — கனிகாலம சமீபிதத 34
போது, அதின கனிகளை வாஙகிககொண
டுவருமபடி தன ஊழியககாரரைத
தோடடககாரரிடததில அனுபபினான
தோடடககாராா அநத ஊழியககாரரைப 35
பிடிதது, ஒருவனை அடிதது, ஒருவனைக
கொலைசெயது, ஒருவனைக கலலெறிநது
கொனறாாகள பினனும அவன முந 36
தினவாகளிலும அதிகமான வேறே
ஊழியககாரரை அனுபபினான, அவா
களையும அபபடியே செயதாாகள
கடைசியிலே அவன என குமாரனு 37
ககு அஞசுவாாகள எனறு சொலலி,
தன குமாரனை அவாகளிடததில அனுப
பினான தோடடககாராா குமாரனைக 38
கணடபோது இவன சுதநதரவாளி,
இவனைக கொனறு, இவன சுதநதரத
தைக கடடிககொளவோம வாருஙகள
எனறு ஒருவரோடொருவா சொலலிக
கொணடு அவனைப பிடிககுத திராட 39
சததோடடததிறகுப புறமபே தளளிக
கொலை செயதாாகள அபபடியிருகக 40
திராடசததோடடததின எஜமான வரு
மபோது, அநதத தோடடககாரரை
எனன செயவான எனறு கேடடாா
அதறகு அவாகள அநதக கொடி 41
யரைக கொடுமையாய அழிதது, ஏறற
காலஙகளில தனககுக கனிகளைக கொ
டுககததகக வேறே தோடடககாரரிடத
தில திராடசததோடடததைக குதத
கையாகக கொடுபபான எனறாாகள
இயேசு அவாகளை நோககி வீடு 42
கடடுகிறவாகள ஆகாதெனறு தளளின
கலலே மூலைககுத தலைககலலாயிறறு,
அது காததராலே ஆயிறறு, அது நமமு
டைய கணகளுககு ஆசசரியமாயிருக
கிறது எனறு நீஙகள வேதததில ஒருக
காலும வாசிககவிலலையா? — ஆகை 43
யால, தேவனுடைய ராஜயம உஙகளி
டததிலிருநது நீககபபடடு, அதறகேறற
கனிகளைத தருகிற ஜனஙகளுககுக கொ
டுககபபடும இநதக கலலினமேல விழு 44
கிறவன நொறுஙகிபபோவான, இது
எவனமேல விழுமோ அவனை நசுககிப

போடும் என்று நான் உங்களுக்குச்
சொல்லுகிறேன் என்றார்.
45 பிரதான ஆசாரியரும் பரிசேய
ரும் அவருடைய உவமைகளைக்கேட்டு,
தங்களைக்குறித்துச் சொல்லுகிறாரென்று
46 அறிந்து, அவரைப் பிடிக்க வகை தேடி
னார்கள்; ஆகிலும் ஜனங்கள் அவரைத்
தீர்க்கதரிசியென்று எண்ணினபடியி
னால் அவர்களுக்குப் பயந்திருந்தார்கள்.
22 இயேசு மறுபடியும் அவர்களோ
டே உவமைகளாய்ப் பேசிச் சொன்
2 னது என்னவென்றால்: பரலோகராஜ்
யம் தன் குமாரனுக்குக் கலியாணஞ்
செய்த ஒரு ராஜாவுக்கு ஒப்பாயிருக்கி
3 றது. அழைக்கப்பட்டவர்களைக் கலி
யாணத்திற்கு வரச்சொல்லும்படி
அவன் தன் ஊழியக்காரரை அனுப்பி
னான்; அவர்களோ வர மனதில்லாதிருந்
4 தார்கள். அப்பொழுது அவன் வேறு ஊழி
யக்காரரை அழைத்து: நீங்கள் போய்,
இதோ, என் விருந்தை ஆயத்தம்பண்
ணினேன், என் எருதுகளும் கொழுத்த
ஜந்துக்களும் அடிக்கப்பட்டது, எல்
லாம் ஆயத்தமாயிருக்கிறது, கலியா
ணத்துக்கு வாருங்கள் என்று அழைக்
கப்பட்டவர்களுக்குச் சொல்லுங்களெ
5 ன்று அனுப்பினான். அழைக்கப்பட்
டவர்களோ அதை அசட்டைபண்ணி,
ஒருவன் தன் வயலுக்கும், ஒருவன் தன்
வியாபாரத்துக்கும் போய்விட்டார்கள்.
6 மற்றவர்கள் அவன் ஊழியக்காரரைப்
பிடித்து, அவமானப்படுத்தி, கொலை
7 செய்தார்கள். ராஜா அதைக் கேள்விப்
பட்டு, கோபமடைந்து, தன் சேனைகளை
அனுப்பி, அந்தக் கொலைபாதகரை
அழித்து, அவர்கள் பட்டணத்தையும்
சுட்டெரித்தான்.
8 அப்பொழுது, அவன் தன் ஊழியக்
காரரை நோக்கி: கலியாணவிருந்து
ஆயத்தமாயிருக்கிறது, அழைக்கப்
பட்டவர்களோ அதற்கு அபாத்திர
9 ராய்ப் போனார்கள். ஆகையால், நீங்
கள் வழிச்சந்திகளிலே போய், காணப்
படுகிற யாவரையும் கலியாணத்திற்கு
அழைத்துக்கொண்டு வாருங்கள் என்
10 றான். அந்த ஊழியக்காரர் புறப்பட்டு,
வழிகளிலே போய், தாங்கள் கண்ட
நல்லார் பொல்லார் யாவரையும் கூட்
டிக்கொண்டு வந்தார்கள்; கலியாண
சாலை விருந்தாளிகளால் நிறைந்தது.
விருந்தாளிகளைப் பார்க்கும்படி ரா 11
ஜா உள்ளே பிரவேசித்தபோது, கலி
யாண வஸ்திரம் தரித்திராத ஒரு மனு
ஷனை அங்கே கண்டு: சிநேகிதனே, நீ 12
கலியாண வஸ்திரமில்லாதவனாய் இங்
கே எப்படி வந்தாய் என்று கேட்டான்;
அதற்கு அவன் பேசாமலிருந்தான். அப் 13
பொழுது, ராஜா பணிவிடைக்காரரை
நோக்கி: இவனைக் கையுங்காலும் கட்
டிக் கொண்டுபோய், அழுகையும் பற்
கடிப்பும் உண்டாயிருக்கிற புறம்பான
இருளிலே போடுங்கள் என்றான். அந் 14
தப்படியே, அழைக்கப்பட்டவர்கள்
அநேகர், தெரிந்துகொள்ளப்பட்டவர்
களோ சிலர் என்றார்.
அப்பொழுது, பரிசேயர் போய், 15
பேச்சிலே அவரை அகப்படுத்தும்படி
யோசனைபண்ணி, தங்கள் சீஷரையும் 16
ஏரோதியரையும் அவரிடத்தில் அனுப்
பினார்கள். அவர்கள் வந்து: போதக
ரே, நீர் சத்தியமுள்ளவரென்றும், தேவ
னுடைய மார்க்கத்தைச் சத்தியமாய்ப்
போதிக்கிறவரென்றும், நீர் முகதாட்சி
ணியம் இல்லாதவராகையால் எவனைக்
குறித்தும் உமக்குக் கவையில்லை யென்
றும் அறிந்திருக்கிறோம். ஆதலால், 17
உமக்கு எப்படித் தோன்றுகிறது? இரா
யனுக்கு வரி கொடுக்கிறது நியாயமோ,
அல்லவோ? அதை எங்களுக்குச் சொல்
லும் என்று கேட்டார்கள்.
இயேசு அவர்கள் துர்க்குணத்தை 18
அறிந்து: மாயக்காரரே, நீங்கள் என்னை
ஏன் சோதிக்கிறீர்கள்? வரிக்காசை 19
எனக்குக் காண்பியுங்கள் என்றார்;
அவர்கள் ஒரு பணத்தை அவரிடத்தில்
கொண்டுவந்தார்கள். அப்பொழுது 20
அவர்: இந்தச் சுரூபமும் மேலெழுத்தும்
யாருடையது என்று கேட்டார். இராய 21
னுடையது என்றார்கள். அதற்கு அவர்:
அப்படியானால், இராயனுடையதை
இராயனுக்கும், தேவனுடையதை தே
வனுக்கும் செலுத்துங்கள் என்றார்.

22 அவர்கள் அதைக் கேட்டு ஆச்சரி
யப்பட்டு அவரைவிட்டுப் போய்விட்
டார்கள்.
23 உயிர்த்தெழுதல் இல்லை என்று சா
திக்கிற சதுசேயர் அன்றையதினம் அவ
24 ரிடத்தில் வந்து: போதகரே, ஒருவன்
சந்தானம் இல்லாமல் இறந்துபோனால்,
அவனுடைய சகோதரன் அவன் மனை
வியை விவாகம்பண்ணி, தன் சகோ
தரனுக்குச் சந்தானம் உண்டாக்க
வேண்டும் என்று மோசே சொன்னாரே.
25 எங்களுக்குள்ளே சகோதரர் ஏழுபேர்
இருந்தார்கள்; மூத்தவன் விவாகம்
பண்ணி, மரித்து, சந்தானமில்லாததி
னால் தன் மனைவியைத் தன் சகோதர
26 னுக்கு விட்டுவிட்டுப் போனான். அப்
படியே இரண்டாம் மூன்றாம் சகோத
ரன்முதல் ஏழாம் சகோதரன் வரைக்
27 கும் செய்தார்கள். எல்லாருக்கும்
பின்பு அந்த ஸ்திரீயும் இறந்துபோ
28 னாள். ஆகையால், உயிர்த்தெழுதலில்
அவ்வேழுபேரில் எவனுக்கு அவள்
மனைவியாயிருப்பாள்? அவர்கள் எல்
லாரும் அவளை விவாகம்பண்ணியிருந்
தார்களே என்று கேட்டார்கள்.
29 இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தர
மாக: நீங்கள் வேதவாக்கியங்களையும்,
தேவனுடைய வல்லமையையும் அறி
யாமல் தப்பான எண்ணங்கொள்ளுகி
30 றீர்கள். உயிர்த்தெழுதலில் கொள்வ
னையும் கொடுப்பனையும் இல்லை; அவர்
கள் பரலோகத்திலே தேவதூதரைப்
31 போல் இருப்பார்கள்; மேலும் மரித்
தோர் உயிர்த்தெழுதலைப்பற்றி: நான்
ஆபிரகாமின் தேவனும், ஈசாக்கின்
தேவனும், யாக்கோபின் தேவனுமாயி
ருக்கிறேன் என்று தேவனால் உங்க
ளுக்கு உரைக்கப்பட்டிருக்கிறதை நீங்
32 கள் வாசிக்கவில்லையா? தேவன் மரித்
தோருக்கு தேவனாயிராமல், ஜீவனுள்
ளோருக்கு தேவனாயிருக்கிறார் என்றார்.
33 ஜனங்கள் இதைக் கேட்டு, அவரு
டைய போதகத்தைக்குறித்து ஆச்சரி
யப்பட்டார்கள்.
34 அவர் சதுசேயரை வாயடைத்தார்
என்று பரிசேயர் கேள்விப்பட்டு, அவ
ரிடத்தில் கூடிவந்தார்கள். அவர்களில் 35
நியாயசாஸ்திரி ஒருவன் அவரைச் சோ
திக்கும்படி: போதகரே, நியாயப்பிர 36
மாணத்திலே எந்தக் கற்பனை பிரதான
மானது என்று கேட்டான். இயேசு 37
அவனை நோக்கி: உன் தேவனாகிய கர்த்த
ரிடத்தில் உன் முழு இருதயத்தோடும்
உன் முழு ஆத்துமாவோடும் உன் முழு
மனதோடும் அன்புகூருவாயாக; இது 38
முதலாம் பிரதான கற்பனை. இதற்கு 39
ஒப்பாயிருக்கிற இரண்டாம் கற்பனை
என்னவென்றால், உன்னிடத்தில் நீ
அன்புகூருவதுபோலப் பிறனிடத்தி
லும் அன்புகூருவாயாக என்பதே. இவ் 40
விரண்டு கற்பனைகளிலும் நியாயப் பிர
மாணம் முழுமையும் தீர்க்கதரிசனங்
களும் அடங்கியிருக்கிறது என்றார்.
பரிசேயர் கூடியிருக்கையில், இயேசு 41
அவர்களை நோக்கி: கிறிஸ்துவைக்கு 42
றித்து நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்,
அவர் யாருடைய குமாரன்? என்று
கேட்டார். அவர் தாவீதின் குமாரன்
என்றார்கள். அதற்கு அவர்: அப்படி 43
யானால், தாவீது பரிசுத்த ஆவியினாலே
அவரை ஆண்டவர் என்று சொல்லியி
ருக்கிறது எப்படி? நான் உம்முடைய 44
சத்துருக்களை உமக்குப் பாதபடியாக்
கிப்போடும்வரைக்கும் நீர் என்னுடைய
வலதுபாரிசத்தில் உட்காரும் என்று
கர்த்தர் என் ஆண்டவரோடே சொன்
னார் என்று சொல்லியிருக்கிறானே.
தாவீது அவரை ஆண்டவர் என்று 45
சொல்லியிருக்க, அவனுக்கு அவர் குமா
ரனாயிருப்பது எப்படி என்றார்.
அதற்கு மாறுத்தரமாக ஒருவனும் 46
அவருக்கு ஒரு வார்த்தையும் சொல்லக்
கூடாதிருந்தது. அன்றுமுதல் ஒருவ
னும் அவரிடத்தில் கேள்விகேட்கத்
துணியவில்லை.
பின்பு இயேசு ஜனங்களையும் தம் **23**
முடைய சீஷர்களையும் நோக்கி: வேத 2
பாரகரும் பரிசேயரும் மோசேயினு
டைய ஆசனத்தில் உட்கார்ந்திருக்கிறார்
கள்; ஆகையால், நீங்கள் கைக்கொள் 3
ளும்படி அவர்கள் உங்களுக்குச் சொல்
லுகிற யாவையும் கைக்கொண்டு செய்

யுங்கள்; அவர்கள் செய்கையின்படி
யோ செய்யாதிருங்கள்; ஏனெனில்,
அவர்கள் சொல்லுகிறார்கள், சொல்லி
4 யும் செய்யாதிருக்கிறார்கள், சுமப்பதற்
கரிய பாரமான சுமைகளைக் கட்டி மனு
ஷர் தோள்களின்மேல் சுமத்துகிறார்
கள்; தாங்களோ ஒரு விரலினாலும்
5 அவைகளைத் தொடமாட்டார்கள் தங்
கள் கிரியைகளையெல்லாம் மனுஷர்
காணவேண்டுமென்று செய்கிறார்கள்,
தங்கள் காப்பு நாடாக்களை அகலமாக்கி,
தங்கள் வஸ்திரங்களின் தொங்கல்களைப்
6 பெரிதாக்கி, விருந்துகளில் முதன்மை
யான இடங்களையும், ஜெபஆலயங்க
ளில் முதன்மையான ஆசனங்களையும்,
7 சந்தைவெளிகளில் வந்தனங்களையும்,
மனுஷரால் ரபீ, ரபீ, என்று அழைக்
8 கப்படுவதையும் விரும்புகிறாகள்: நீங்
களோ ரபீ என்றழைக்கப்படாதிருங்
கள்; கிறிஸ்து ஒருவரே உங்களுக்குப்
போதகராயிருக்கிறார், நீங்கள் எல்லா
9 ரும் சகோதரராயிருக்கிறீர்கள். பூமியி
லே ஒருவனையும் உங்கள் பிதா என்று
சொல்லாதிருங்கள்; பரலோகத்திலிருக
கிற ஒருவரே உங்களுக்குப் பிதாவாயி
10 ருக்கிறார். நீங்கள் குருக்கள் என்றும்
அழைக்கப்படாதிருங்கள்: கிறிஸ்து
ஒருவரே உங்களுக்குக் குருவாயிருககி
11 றார். உங்களில் பெரியவனாயிருக்கிற
வன் உங்களுக்கு ஊழியக்காரனாயிருக்
12 கக்கடவன். தன்னை உயர்த்துகிறவன்
தாழ்த்தப்படுவான், தன்னைத் தாழ்த்து
கிறவன் உயர்த்தப்படுவான்
13 மாயக்காரராகிய வேதபாரகரே! பரி
சேயரே! உங்களுக்கு ஐயோ, மனு
ஷர் பிரவேசியாதபடி பரலோகராஜ்யத்
தைப் பூட்டிப்போடுகிறீர்கள்; நீங்கள்
அதில் பிரவேசிக்கிறதுமில்லை, பிரவே
சிக்கப் போகிறவர்களைப் பிரவேசிக்க வி
14 டுகிறதுமில்லை. மாயக்காரராகிய வே
தபாரகரே! பரிசேயரே! உங்களுக்கு
ஐயோ, பார்வைக்காக நீண்ட ஜெபம்
பண்ணி, விதவைகளின் வீடுகளைப் பட்
சித்துப்போடுகிறீர்கள்; இதினிமித்தம்
அதிக ஆக்கினையை அடைவீர்கள்.
15 மாயக்காரராகிய வேதபாரகரே! பரி
சேயரே! உங்களுக்கு ஐயோ, ஒருவனை
உங்கள் மார்க்கத்தானாக்கும்படி சமுத்
திரத்தையும் பூமியையும் சுற்றித் திரி
கிறீர்கள்; அவன் உங்கள் மார்க்கத்
தானானபோது அவனை உங்களிலும்
இரட்டிப்பாய் நரகததின் மகனாக்குகி
றீர்கள்.
குருடரான வழிகாட்டிகளே! உங் 16
களுக்கு ஐயோ, எவனாகிலும் தேவால
யததின்பேரில் சத்தியம் பண்ணினால்
அதினால் ஒன்றுமில்லையென்றும், எவ
னாகிலும் தேவாலயத்தின் பொன்னின்
பேரில் சததியம் பண்ணினால் அவன்
கடனாளியென்றும் சொல்லுகிறீர்கள்.
மதிகேடரே, குருடரே! எது முக்கியம்? 17
பொன்னோ, பொன்னைப் பரிசுத்தமாக்
குகிற தேவாலயமோ? மேலும், எவ 18
னாகிலும் பலிபீடத்தின்பேரில் சத்தியம்
பண்ணினால் அதினால் ஒன்றுமில்லையெ
ன்றும், எவனாகிலும் அதின்மேல் இருக்
கிற காணிக்கையின்பேரில் சத்தியம்
பண்ணினால், அவன் கடனாளியென்றும்
சொல்லுகிறீர்கள். மதிகேடரே, குரு 19
டரே' எது முக்கியம்? காணிக்கையோ,
காணிக்கையைப் பரிசுததமாக்குகிற
பலிபீடமோ? ஆகையால், பலிபீடத் 20
தின்பேரில் சத்தியம் பண்ணுகிறவன்
அதின்பேரிலும் அதின்மேலுள்ள எல்
லாவறறின்பேரிலும் சத்தியம் பண்ணு
கிறான். தேவாலயத்தின்பேரில் சத்தி 21
யம் பண்ணுகிறவன் அதின்பேரிலும்
அதில் வாசமாயிருக்கிறவர்பேரிலும் சத்
தியம் பண்ணுகிறான். வானததின்பே 22
ரில் சத்தியம் பண்ணுகிறவன் தேவனு
டைய சிங்காசனத்தின்பேரிலும் அதில்
வீற்றிருக்கிறவர்பேரிலும் சத்தியம் பண்
ணுகிறான்.
மாயக்காரராகிய வேதபாரகரே! பரி 23
சேயரே! உங்களுக்கு ஐயோ, நீங்கள்
ஒற்தலாமிலும் வெந்தையத்திலும் சீர
கத்திலும் தசமபாகம் செலுத்தி, நியா
யப்பிரமாணத்தில் கற்பித்திருக்கிற வி
சேஷித்தவைகளாகிய நீதியையும் இர
க்கத்தையும் விசுவாசத்தையும் விட்டு
விட்டீர்கள், இவைகளையும் செய்யவே
ண்டும், அவைகளையும் விடாதிருக்கவே

24 ண்டுமே. குருடரான வழிகாட்டிகளே,
கொசுவில்லாதபடி வடிகட்டி, ஒட்ட
கத்தை விழுங்குகிறவர்களாயிருக்கிறீர்
கள்.
25 மாயக்காரராகிய வேதபாரகரே! பரி
சேயரே! உங்களுக்கு ஐயோ, போஜன
பான பாத்திரங்களின் வெளிப்புறத்
தைச் சுத்தமாக்குகிறீர்கள்; உட்புறத்
திலோ அவைகள் கொள்ளையினாலும்
26 அநீதத்தினாலும் நிறைந்திருக்கிறது. குரு
டனான பரிசேயனே! போஜன பான
பாத்திரங்களின் வெளிப்புறம் சுத்தமா
கும்படி அவைகளின் உட்புறத்தை
முதலாவது சுத்தமாக்கு.
27 மாயக்காரராகிய வேதபாரகரே! பரி
சேயரே! உங்களுக்கு ஐயோ, வெள்
ளையடிக்கப்பட்ட கல்லறைகளுக்கு ஒப்
பாயிருக்கிறீர்கள், அவைகள் புறம்பே
அலங்காரமாய்க் காணப்படும், உள்
ளேயோ மரித்தவர்களின் எலும்புகளி
னாலும் சகல அசுத்தத்தினாலும் நிறைந்
28 திருக்கும். அப்படியே நீங்களும் மனு
ஷருக்கு நீதிமான்கள் என்று புறம்பே
காணப்படுகிறீர்கள்; உள்ளத்திலோ மா
யத்தினாலும் அக்கிரமத்தினாலும் நிறைந்
திருக்கிறீர்கள்.
29 மாயக்காரராகிய வேதபாரகரே! பரி
சேயரே! உங்களுக்கு ஐயோ, நீங்கள்
தீர்க்கதரிசிகளின் கல்லறைகளைக் கட்டி,
நீதிமான்களின் சமாதிகளைச் சிங்காரித்து:
30 எங்கள் பிதாக்களின் நாட்களில் இருந்
தோமானால், அவர்களோடே நாங்கள்
தீர்க்கதரிசிகளின் இரத்தப்பழிக்கு
உடன்பட்டிருக்கமாட்டோம் என்கிறீர்
31 கள். ஆகையால், தீர்க்கதரிசிகளைக்
கொலைசெய்தவர்களுக்குப் புத்திரராயி
ருக்கிறீர்கள் என்று உங்களைக்குறித்து
32 நீங்களே சாட்சிகளாயிருக்கிறீர்கள். நீங்
களும் உங்கள் பிதாக்களின் அக்கிரம
33 அளவை நிரப்புங்கள். சர்ப்பங்களே,
விரியன் பாம்புக்குட்டிகளே! நரகாக்
கினைக்கு எப்படித் தப்பித்துக்கொள்
வீர்கள்?
34 ஆகையால், இதோ, தீர்க்கதரிசிக
ளையும் ஞானிகளையும் வேதபாரகரையும்
உங்களிடத்தில் அனுப்புகிறேன்; அவர்
களில் சிலரைக் கொன்று சிலுவைகளில்
அறைவீர்கள், சிலரை உங்கள் ஆலயங்
களில் வாரினால் அடித்து, ஊருக்கு
ஊர் துன்பப்படுத்துவீர்கள்; நீதிமானா 35
கிய ஆபேலின் இரத்தம்முதல் தேவா
லயத்துக்கும் பலிபீடத்துக்கும் நடுவே
நீங்கள் கொலைசெய்த பரகியாவின் குமா
ரனாகிய சகரியாவின் இரத்தம்வரைக்
கும், பூமியின்மேல் சிந்தப்பட்ட நீதி
மான்களின் இரத்தப்பழியெல்லாம் உங்
கள்மேல் வரும்படியாக இப்படிச்
செய்வீர்கள். இவைகளெல்லாம் இந் 36
தச் சந்ததியின்மேல் வருமென்று, மெய்
யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.
எருசலேமே, எருசலேமே, தீர்க்கத 37
ரிசிகளைக் கொலைசெய்து, உன்னிடத்தில்
அனுப்பப்பட்டவர்களைக் கல்லெறிகிற
வளே! கோழி தன் குஞ்சுகளைத் தன் சிற
குகளின் கீழே கூட்டிச் சேர்த்துக்கொள்
ளும் வண்ணமாக நான் எத்தனைதர
மோ உன் பிள்ளைகளைக் கூட்டிச் சேர்த்
துக்கொள்ள மனதாயிருந்தேன்; உங்
களுக்கோ மனதில்லாமற் போயிற்று.
இதோ, உங்கள் வீடு உங்களுக்குப் பா 38
ழாக்கிவிடப்படும். கர்த்தருடைய நா 39
மத்தினாலே வருகிறவர் ஸ்தோத்திரிக்
கப்பட்டவர் என்று நீங்கள் சொல்லு
மளவும், இதுமுதல் என்னைக் காணாதி
ருப்பீர்கள் என்று உங்களுக்குச் சொல்
லுகிறேன் என்றார்.
இயேசு தேவாலயத்தை விட்டுப் 24
புறப்பட்டுப் போகையில், அவருடைய
சீஷர்கள் தேவாலயத்தின் கட்டடங்
களை அவருக்குக் காண்பிக்க அவரிடத்
தில் வந்தார்கள். இயேசு அவர்களை 2
நோக்கி: இவைகளையெல்லாம் பார்க்
கிறீர்களே, இவ்விடத்தில் ஒரு கல்லின்
மேல் ஒரு கல்லிராதபடிக்கு எல்லாம்
இடிக்கப்பட்டுப் போகும் என்று மெய்
யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்
என்றார்.
பின்பு, அவர் ஒலிவமலையின்மேல் 3
உட்கார்ந்திருக்கையில், சீஷர்கள் அவ
ரிடத்தில் தனித்துவந்து: இவைகள் எப்
பொழுது சம்பவிக்கும்? உம்முடைய
வருகைக்கும், உலகத்தின் முடிவுக்கும்

அடையாளம் என்ன? எங்களுக்குச்
சொல்லவேண்டும் என்றார்கள்.
4 இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தர
மாக: ஒருவனும் உங்களை வஞ்சியாத
5 படிக்கு எச்சரிக்கையாயிருங்கள்; ஏ
னெனில், அநேகர் வந்து, என் நாமத்
தைத் தரித்துக்கொண்டு: நானே கிறி
ஸ்து என்று சொல்லி, அநேகரை வஞ்
6 சிப்பார்கள். யுத்தங்களையும் யுத்தங்
களின் செய்திகளையும் கேள்விப்படுவீர்
கள்; கலங்காதபடி எச்சரிக்கையா
யிருங்கள்; இவைகளெல்லாம் சம்ப
விக்கவேண்டியதே; ஆனாலும், முடிவு
7 உடனே வராது. ஜனத்துக்கு விரோத
மாய் ஜனமும், ராஜ்யத்துக்கு விரோத
மாய் ராஜ்யமும் எழும்பும்; பஞ்சங்
களும், கொள்ளைநோய்களும், பூமிய
திர்ச்சிகளும் பல இடங்களில் உண்டா
8 கும். இவைகளெல்லாம் வேதனைக
ளுக்கு ஆரம்பம்.
9 அப்பொழுது, உங்களை உபத்திரவங்
களுக்கு ஒப்புக்கொடுத்து, உங்களைக்
கொலை செய்வார்கள்; என் நாமத்தி
னிமித்தம் நீங்கள் சகல ஜனங்களா
10 லும் பகைக்கப்படுவீர்கள். அப்பொ
ழுது, அநேகர் இடறலடைந்து, ஒருவ
ரையொருவர் காட்டிக்கொடுத்து, ஒரு
11 வரையொருவர் பகைப்பார்கள். அநே
கங் கள்ளத்தீர்க்கதரிசிகளும் எழும்பி,
12 அநேகரை வஞ்சிப்பார்கள். அக்கிர
மம் மிகுதியாவதினால் அநேகருடைய
13 அன்பு தணிந்துபோம். முடிவுபரியந்
தம் நிலைநிற்பவனே இரட்சிக்கப்படு
14 வான். ராஜ்யத்தினுடைய இந்தச் சுவி
சேஷம் பூலோகமெங்குமுள்ள சகல
ஜாதிகளுக்கும் சாட்சியாகப் பிரசங்கிக்
கப்படும், அப்போது முடிவு வரும்.
15 மேலும், பாழாக்குகிற அருவருப்
பைக் குறித்துத் தானியேல் தீர்க்கதரிசி
சொல்லியிருக்கிறானே, வாசிக்கிறவன்
சிந்திக்கக்கடவன். நீங்கள் அதைப் பரி
சுத்த ஸ்தலத்தில் நிற்கக்காணும்போது,
16 யூதேயாவில் இருக்கிறவர்கள் மலைக
17 ளுக்கு ஓடிப்போகக்கடவர்கள். வீட்
டின்மேல் இருக்கிறவன் தன் வீட்டிலே
எதையாகிலும் எடுப்பதற்கு இறங்கா
திருக்கக்கடவன். வயலில் இருக்கிற 18
வன் தன் வஸ்திரங்களை எடுப்பதற்குத்
திரும்பாதிருக்கக்கடவன்.
அந்நாட்களிலே கர்ப்பவதிகளுக்கும் 19
பால்கொடுக்கிறவர்களுக்கும் ஐயோ.
நீங்கள் ஓடிப்போவது மாரிகாலத்திலா 20
வது, ஓய்வுநாளிலாவது, சம்பவியாத
படிக்கு வேண்டிக்கொள்ளுங்கள்.
ஏனெனில், உலகமுண்டானதுமுதல் 21
இதுவரைக்கும் சம்பவித்திராததும்,
இனிமேலும் சம்பவியாததுமான மிகு
ந்த உபத்திரவம் அப்பொழுது உண்டா
யிருக்கும். அந்நாட்கள் குறைக்கப் 22
படாதிருந்தால், ஒருவனாகிலும் தப்பிப்
போவதில்லை; தெரிந்துகொள்ளப்பட்
டவர்களினிமித்தமோ அந்த நாட்கள்
குறைக்கப்படும்.
அப்பொழுது, இதோ, கிறிஸ்து இங் 23
கே இருக்கிறார், அதோ, அங்கே இருக்
கிறார் என்று எவனாகிலும் சொன்னால்
நம்பாதேயுங்கள். ஏனெனில், கள்ளக் 24
கிறிஸ்துக்களும் கள்ளத் தீர்க்கதரிசிக
ளும் எழும்பி, கூடுமானால் தெரிந்து
கொள்ளப்பட்டவர்களையும் வஞ்சிக்கத்
தக்கதாகப் பெரிய அடையாளங்களை
யும் அற்புதங்களையும் செய்வார்கள்.
இதோ, முன்னதாக உங்களுக்கு அறி 25
வித்திருக்கிறேன். ஆகையால்: அதோ, 26
வனாந்தரத்தில் இருக்கிறார் என்று சொல்
வார்களானால், புறப்படாதிருங்கள்;
இதோ, அறைவீட்டிற்குள் இருக்கிறார்
என்று சொல்வார்களானால் நம்பாதிருங்
கள். மின்னல் கிழக்கிலிருந்து தோ 27
ன்றி மேற்குவரைக்கும் பிரகாசிக்கிறது
போல, மனுஷகுமாரனுடைய வரு
கையும் இருக்கும். பிணம் எங்கேயோ 28
அங்கே கழுகுகள் வந்து கூடும்.
அந்நாட்களின் உபத்திரவம் முடிந்த 29
வுடனே, சூரியன் அந்தகாரப்படும், சந்
திரன் ஒளியைக் கொடாதிருக்கும், நட்
சத்திரங்கள் வானத்திலிருந்து விழும்,
வானத்தின் சத்துவங்கள் அசைக்கப்ப
டும். அப்பொழுது, மனுஷகுமாரனு 30
டைய அடையாளம் வானத்தில் காணப்
படும். அப்பொழுது, மனுஷகுமாரன்
வல்லமையோடும் மிகுந்த மகிமையோ

டும் வானத்தின் மேகங்கள்மேல் வருகி
றதை பூமியிலுள்ள சகல கோத்திரத்
31 தாரும் கண்டு புலம்புவார்கள். வலு
வாய்த் தொனிக்கும் எக்காள சத்தத்
தோடே அவர் தமது தூதர்களை அனுப்
புவார்; அவர்கள் அவரால் தெரிந்து
கொள்ளப்பட்டவர்களை வானத்தின் ஒரு
முனை முதற்கொண்டு மறுமுனைமட்
டும் நாலு திசைகளிலுமிருந்து கூட்டிச்
சேர்ப்பார்கள்.
32 அத்திமரத்தினால் ஒரு உவமையைக்
கற்றுக்கொள்ளுங்கள்; அதிலே இளங்
கிளை தோன்றி, துளிர்விடும்போது, வசந்
தகாலம் சமீபமாயிற்று என்று அறிவீர்
33 கள். அப்படியே இவைகளையெல்லாம்
நீங்கள் காணும்போது, அவர் சமீப
மாய் வாசலருகே வந்திருக்கிறார் என்று
34 அறியுங்கள். இவைகளெல்லாம் சம்
பவிக்குமுன்னே இந்தச் சந்ததி ஒழிந்து
போகாதென்று, மெய்யாகவே உங்க
35 ளுக்குச் சொல்லுகிறேன். வானமும்
பூமியும் ஒழிந்துபோம், என் வார்த்தை
களோ ஒழிந்துபோவதில்லை.
36 அந்த நாளையும் அந்த நாழிகையை
யும் என் பிதா ஒருவர் தவிர மற்றொரு
வனும் அறியான்; பரலோகத்திலுள்ள
37 தூதர்களும் அறியார்கள். நோவாவின்
காலத்தில் எப்படி நடந்ததோ, அப்ப
டியே மனுஷகுமாரன் வரும் காலத்தி
38 லும் நடக்கும். எப்படியெனில், ஜலப்
பிரளயத்துக்கு முன்னான காலத்திலே
நோவா பேழைக்குள் பிரவேசிக்கும்
நாள்வரைக்கும், ஜனங்கள் புசித்தும்
குடித்தும், பெண் கொண்டும் பெண்
39 கொடுத்தும், ஜலப்பிரளயம் வந்து அனை
வரையும் வாரிக்கொண்டு போகுமட்
டும் உணராதிருந்தார்கள்; அப்படியே
மனுஷகுமாரன் வரும் காலத்திலும்
40 நடக்கும். அப்பொழுது, இரண்டுபேர்
வயலில் இருப்பார்கள்; ஒருவன் ஏற்
றுக்கொள்ளப்படுவான், ஒருவன் கைவி
41 டப்படுவான். இரண்டு ஸ்திரீகள் ஏந்
திரம் அரைத்துக்கொண்டிருப்பார்கள்;
ஒருத்தி ஏற்றுக்கொள்ளப்படுவாள், ஒரு
த்தி கைவிடப்படுவாள்.
42 உங்கள் ஆண்டவர் இன்ன நாழிகை
யிலே வருவாரென்று நீங்கள் அறியா
திருக்கிறபடியினால் விழித்திருங்கள். திரு 43
டன் இன்ன ஜாமத்தில் வருவானென்று
வீட்டெஜமான் அறிந்திருந்தால், அவன்
விழித்திருந்து, தன் வீட்டைக் கன்ன
மிடவொட்டானென்று அறிவீர்கள்.
நீங்கள் நினையாத நாழிகையிலே மனு 44
ஷகுமாரன் வருவார்; ஆதலால், நீங்க
ளும் ஆயத்தமாயிருங்கள்.
ஏற்றவேளையிலே தன் வேலைக்கார 45
ருக்குப் போஜனங்கொடுத்து அவர்களை
விசாரிக்கும்படி எஜமான் வைத்த உண்
மையும் விவேகமுமுள்ள ஊழியக்கா
ரன் யாவன்? எஜமான் வரும்போது 46
அப்படிச் செய்கிறவனாகக் காணப்படு
கிற ஊழியக்காரனே பாக்கியவான்.
தன் ஆஸ்திகள் எல்லாவற்றின்மேலும் 47
அவனை விசாரணைக்காரனாக வைப்பா
னென்று மெய்யாகவே உங்களுக்குச்
சொல்லுகிறேன். அந்த ஊழியக்காரனோ 48
பொல்லாதவனாயிருந்து: என் ஆண்ட
வன் வர நாள் செல்லும் என்று தன்
உள்ளத்திலே சொல்லிக்கொண்டு, தன் 49
உடன் வேலைக்காரரை அடிக்கத்தொ
டங்கி, வெறியரோடே புசிக்கவும் குடிக்
கவும் தலைப்பட்டால், அந்த ஊழியக் 50
காரன் நினையாத நாளிலும், அறியாத
நாழிகையிலும், அவனுடைய எஜமான்
வந்து, அவனைக் கடினமாய்த் தண் 51
டித்து, மாயக்காரரோடே அவனுக்குப்
பங்கை நியமிப்பான்; அங்கே அழுகை
யும் பற்கடிப்பும் உண்டாயிருக்கும்.
அப்பொழுது, பரலோகராஜ்யம் தங் 25
கள் தீவட்டிகளைப் பிடித்துக்கொண்டு,
மணவாளனுக்கு எதிர்கொண்டுபோகப்
புறப்பட்ட பத்துக் கன்னிகைகளுக்கு
ஒப்பாயிருக்கும். அவர்களில் ஐந்து 2
பேர் புத்தியுள்ளவர்களும், ஐந்துபேர்
புத்தியில்லாதவர்களுமா யிருந்தார்கள்.
புத்தியில்லாதவர்கள் தங்கள் தீவட்டி 3
களை எடுத்துக்கொண்டு போனார்கள்,
எண்ணெயையோ கூடக் கொண்டுபோ
கவில்லை. புத்தியுள்ளவர்கள் தங்கள் 4
தீவட்டிகளோடுங்கூடத் தங்கள் பாத்
திரங்களில் எண்ணெயையும் கொண்டு
போனார்கள். மணவாளன் வரத் தாமதித் 5

தபோது, அவர்கள் எல்லாரும் நித்திரை
மயக்கமடைந்து தூங்கிவிட்டார்கள்.
6 நடுராத்திரியிலே: இதோ, மணவா
ளன் வருகிறார், அவருக்கு எதிர்கொண்
டுபோகப் புறப்படுங்கள் என்கிற சத்
7 தம் உண்டாயிற்று. அப்பொழுது, அந்
தக் கன்னிகைகள் எல்லாரும் எழுந்தி
ருந்து, தங்கள் தீவட்டிகளை ஆயத்தப்
8 படுத்தினார்கள். புத்தியில்லாதவர்கள்
புத்தியுள்ளவர்களை நோக்கி: உங்கள்
எண்ணெயில் எங்களுக்குக் கொஞ்சங்
கொடுங்கள், எங்கள் தீவட்டிகள் அணை
9 ந்துபோகிறதே என்றார்கள். புத்தியுள்
ளவர்கள் பிரதியுத்தரமாக: அப்படி
யல்ல, எங்களுக்கும் உங்களுக்கும்
போதாமலிராதபடி, நீங்கள் விற்கிறவர்
களிடத்திற் போய், உங்களுக்காக வாங்
10 கிக்கொள்ளுங்கள் என்றார்கள். அப்
படியே அவர்கள் வாங்கப் போன
போது மணவாளன் வந்துவிட்டார்;
ஆயத்தமாயிருந்தவர்கள் அவரோடே
கூடக் கலியாண வீட்டுக்குள் பிரவே
சித்தார்கள்; கதவும் அடைக்கப்பட்
11 டது. பின்பு, மற்றக் கன்னிகைகளும்
வந்து: ஆண்டவரே, ஆண்டவரே, எங்
களுக்குத் திறக்கவேண்டும் என்றார்கள்.
12 அதற்கு அவர்: உங்களை அறியேன்
என்று, மெய்யாகவே உங்களுக்குச்
சொல்லுகிறேன் என்றார்.
13 மனுஷகுமாரன் வரும் நாளையாவது
நாழிகையையாவது நீங்கள் அறியாதி
ருக்கிறபடியால் விழித்திருங்கள்.
14 அன்றியும், பரலோகராஜ்யம் புறத்
தேசத்துக்குப் பிரயாணமாய்ப் போகிற
ஒரு மனுஷன், தன் ஊழியக்காரரை
அழைத்து, தன் ஆஸ்திகளை அவர்கள்
வசமாய் ஒப்புக்கொடுத்ததுபோல் இரு
15 க்கிறது. அவனவனுடைய திறமைக்
குத் தக்கதாக ஒருவனிடத்தில் ஐந்து
தாலந்தும், ஒருவனிடத்தில் இரண்டு
தாலந்தும், ஒருவனிடத்தில் ஒரு தாலந்
துமாகக் கொடுத்து, உடனே பிரயா
16 ணப்பட்டுப் போனான். ஐந்து தாலந்தை
வாங்கினவன் போய், அவைகளைக்
கொண்டு வியாபாரம்பண்ணி, வேறு
17 ஐந்து தாலந்தைச் சம்பாதித்தான். அப்
படியே இரண்டு தாலந்தை வாங்கினவ
னும், வேறு இரண்டு தாலந்தைச் சம்
பாதித்தான். ஒரு தாலந்தை வாங்கின 18
வனோ, போய், நிலத்தைத் தோண்டி,
தன் எஜமானுடைய பணத்தைப் புதை
த்துவைத்தான்.
வெகுகாலமானபின்பு அந்த ஊழியக் 19
காரருடைய எஜமான் திரும்பி வந்து,
அவர்களிடத்தில் கணக்குக் கேட்டான்.
அப்பொழுது, ஐந்து தாலந்தை வாங்கின 20
வன், வேறு ஐந்து தாலந்தைக் கொண்டு
வந்து: ஆண்டவனே, ஐந்து தாலந்தை
என்னிடத்தில் ஒப்புவித்தீரே; அவைக
ளைக்கொண்டு, இதோ, வேறு ஐந்து
தாலந்தைச் சம்பாதித்தேன் என்றான்.
அவனுடைய எஜமான் அவனை நோக்கி: 21
நல்லது, உத்தமமும் உண்மையுமுள்ள
ஊழியக்காரனே, கொஞ்சத்திலே உண்
மையாயிருந்தாய், அநேகத்தின்மேல்
உன்னை அதிகாரியாக வைப்பேன், உன்
எஜமானுடைய சந்தோஷத்திற்குள் பிர
வேசி என்றான். இரண்டு தாலந்தை 22
வாங்கினவனும் வந்து: ஆண்டவனே,
இரண்டு தாலந்தை என்னிடத்தில் ஒப்
புவித்தீரே: அவைகளைக்கொண்டு,
இதோ, வேறு இரண்டு தாலந்தைச் சம்
பாதித்தேன் என்றான். அவனுடைய 23
எஜமான் அவனை நோக்கி. நல்லது, உத்
தமமும் உண்மையுமுள்ள ஊழியக்கா
ரனே, கொஞ்சத்திலே உண்மையாயி
ருந்தாய், அநேகத்தின்மேல் உன்னை அதி
காரியாக வைப்பேன்; உன் எஜமானு
டைய சந்தோஷத்திற்குள் பிரவேசி என்
றான்.
ஒரு தாலந்தை வாங்கினவன் வந்து: 24
ஆண்டவனே, நீர் விதைக்காத இடத்
தில் அறுக்கிறவரும், தெளிக்காத இடத்
தில் சேர்க்கிறவருமான கடினமுள்ள
மனுஷன் என்று அறிவேன். ஆகை 25
யால், நான் பயந்து, போய், உமது
தாலந்தை நிலத்தில் புதைத்துவைத்
தேன்; இதோ, உம்முடையதை வாங்
கிக்கொள்ளும் என்றான். அவனுடைய 26
எஜமான் பிரதியுத்தரமாக: பொல்லாத
வனும் சோம்பனுமான ஊழியக்கா
ரனே, நான் விதைக்காத இடத்தில்

அறுக்கிறவனென்றும், தெளிக்காத இட
த்தில் சேர்க்கிறவனென்றும் அறிந்திருந்
27 தாயே. அப்படியானால், நீ என் பணத்
தைக் காசுக்காரர் வசத்தில் போட்டு
வைக்கவேண்டியதாயிருந்தது; அப்பொ
ழுது, நான் வந்து என்னுடையதை
வட்டியோடே வாங்கிக்கொள்வேனே,
28 என்று சொல்லி, அவனிடத்திலிருக்கிற
தாலந்தை எடுத்து, பத்துத் தாலந்துள்
29 ளவனுக்குக் கொடுங்கள். உள்ளவனெ
வனோ அவனுக்குக் கொடுக்கப்படும்,
பரிபூரணமும் அடைவான்; இல்லாத
வனிடத்திலிருந்து உள்ளதும் எடுத்துக்
30 கொள்ளப்படும். பிரயோஜனமற்ற ஊழி
யக்காரனாகிய இவனைப் புறம்பான இரு
ளிலே தள்ளிப்போடுங்கள்; அங்கே அழு
கையும் பற்கடிப்பும் உண்டாயிருக்
கும் என்றான்.
31 அன்றியும் மனுஷகுமாரன் தமது
மகிமை பொருந்தினவராய்ச் சகல பரி
சுத்த தூதரோடுங்கூட வரும்போது,
தமது மகிமையுள்ள சிங்காசனத்தின்
32 மேல் வீற்றிருப்பார். அப்பொழுது,
சகல ஜனங்களும் அவருக்கு முன்பா
கச் சேர்க்கப்படுவார்கள். மேய்ப்பனா
னவன் செம்மறியாடுகளையும் வெள்ளா
டுகளையும் வெவ்வேறாகப் பிரிக்கிறது
33 போல அவர்களை அவர் பிரித்து, செம்
மறியாடுகளைத் தமது வலதுபக்கத்தி
லும், வெள்ளாடுகளைத் தமது இடது
பக்கத்திலும் நிறுத்துவார்.
34 அப்பொழுது, ராஜா தமது வலதுபக்
கத்தில் நிற்பவர்களைப் பார்த்து: வாருங்
கள் என் பிதாவினால் ஆசீர்வதிக்கப்பட்
டவர்களே, உலகம் உண்டானதுமுதல்
உங்களுக்காக ஆயத்தம் பண்ணப்பட்
டிருக்கிற ராஜ்யத்தைச் சுதந்தரித்துக்
35 கொள்ளுங்கள். பசியாயிருந்தேன், என
க்குப் போஜனங்கொடுத்தீர்கள்; தாக
மாயிருந்தேன், என் தாகத்தைத் தீர்த்
தீர்கள்; அந்நியனாயிருந்தேன், என்னைச்
36 சேர்த்துக்கொண்டீர்கள்; வஸ்திரமில்லா
திருந்தேன், எனக்கு வஸ்திரங்கொடுத்
தீர்கள்; வியாதியாயிருந்தேன், என்னை
விசாரிக்க வந்தீர்கள்; காவலிலிருந்
தேன், என்னைப் பார்க்க வந்தீர்கள் என்

பார். அப்பொழுது, நீதிமான்கள் அவ 37
ருக்குப் பிரதியுத்தரமாக: ஆண்டவரே,
நாங்கள் எப்பொழுது உம்மைப் பசி
யுள்ளவராகக் கண்டு உமக்குப் போஜ
னங்கொடுத்தோம்? எப்பொழுது உம்
மைத் தாகமுள்ளவராகக் கண்டு உம்
முடைய தாகத்தைத் தீர்த்தோம்? எப் 38
பொழுது உம்மை அந்நியராகக் கண்டு
உம்மைச் சேர்த்துக்கொண்டோம்? எப்
பொழுது உம்மை வஸ்திரமில்லாதவரா
கக் கண்டு உமக்கு வஸ்திரங்கொடுத்
தோம்? எப்பொழுது உம்மை வியாதி 39
யுள்ளவராகவும் காவலிலிருக்கிறவராக
வும் கண்டு, உம்மிடத்தில் வந்தோம்
என்பார்கள். அதற்கு ராஜா பிரதியுத்தர 40
மாக. மிகவும் சிறியவராகிய என் சகோ
தரரான இவர்களில் ஒருவனுக்கு நீங்
கள் எதைச் செய்தீர்களோ, அதை என
க்கே செய்தீர்கள் என்று மெய்யாகவே
உங்களுக்குச் சொல்லுகிறேன் என்பார்.
அப்பொழுது, இடதுபக்கத்தில் நிற் 41
பவர்களைப் பார்த்து அவர்: சபிக்கப்பட்
டவர்களே, என்னைவிட்டு, பிசாசுக்காக
வும் அவன் தூதர்களுக்காகவும் ஆயத்
தம்பண்ணப்பட்டிருக்கிற நித்திய அக்
கினியிலேபோங்கள். பசியாயிருந்தேன், 42
நீங்கள் எனக்குப் போஜனங்கொடுக்க
வில்லை; தாகமாயிருந்தேன், நீங்கள் என்
தாகத்தைத் தீர்க்கவில்லை; அந்நியனாயி 43
ருந்தேன், நீங்கள் என்னைச் சேர்த்துக்
கொள்ளவில்லை; வஸ்திரமில்லாதிருந்
தேன், நீங்கள் எனக்கு வஸ்திரங்கொடுக்
கவில்லை; வியாதியுள்ளவனாயும் காவலி
லடைக்கப்பட்டவனாயும் இருந்தேன்,
நீங்கள் என்னை விசாரிக்க வரவில்லை
யென்பார். அப்பொழுது, அவர்களும் 44
அவருக்குப் பிரதியுத்தரமாக: ஆண்ட
வரே, உம்மைப் பசியுள்ளவராகவும்,
தாகமுள்ளவராகவும், அந்நியராகவும்,
வஸ்திரமில்லாதவராகவும், வியாதிப்பட்
டவராகவும், காவலிலடைக்கப்பட்டவ
ராகவும், நாங்கள் எப்பொழுது கண்டு,
உமக்கு உதவிசெய்யாதிருந்தோம் என்
பார்கள். அப்பொழுது அவர் அவர்க 45
ளுக்குப் பிரதியுத்தரமாக: மிகவும் சிறிய
வர்களாகிய இவர்களில் ஒருவனுக்கு

நீங்கள் எதைச் செய்யாதிருந்தீர்களோ,
அதை எனக்கே செய்யாதிருந்தீர்கள்
என்று மெய்யாகவே உங்களுக்குச் சொ
ல்லுகிறேன் என்பார்.
46 அந்தப்படி, இவர்கள் நித்திய ஆக்
கினையை அடையவும், நீதிமான்களோ
நித்தியஜீவனை அடையவும் போவார்கள்
என்றார்.
26 இயேசு இந்த வசனங்களையெல்
லாம் சொல்லி முடித்தபின்பு, அவர்
2 தம்முடைய சீஷரை நோக்கி: இரண்டு
நாளைக்குப் பின்பு பஸ்கா பண்டிகை
வருமென்று அறிவீர்கள்; அப்பொழுது,
மனுஷகுமாரன் சிலுவையில் அறையப்
படுவதற்கு ஒப்புக்கொடுக்கப்படுவார்
என்றார்.
3 அப்பொழுது, பிரதான ஆசாரியரும்
வேதபாரகரும் ஜனத்தின் மூப்பரும்,
காய்பா என்னப்பட்ட பிரதான ஆசா
ரியனுடைய அரமனையிலே கூடிவந்து,
4 இயேசுவைத் தந்திரமாய்ப் பிடித்துக்
கொலைசெய்யும்படி ஆலோசனை பண்
5 ணினார்கள். ஆகிலும் ஜனங்களுக்கு
ள்ளே கலகமுண்டாகாதபடிக்குப் பண்
டிகையிலே அப்படிச் செய்யலாகாது
என்றார்கள்.
6 இயேசு பெத்தானியாவில் குஷ்ட
ரோகியாயிருந்த சீமோன் வீட்டில்
7 இருக்கையில், ஒரு ஸ்திரீ விலையேறப்
பெற்ற பரிமள தைலமுள்ள வெள்ளைக்
கல் பரணியைக் கொண்டுவந்து அவர்
போஜனபந்தியிலிருக்கும்போது, அந்
தத் தைலத்தை அவர் சிரசின்மேல்
8 ஊற்றினாள். அவருடைய சீஷர்கள்
அதைக் கண்டு விசனமடைந்து: இந்த
9 வீண்செலவு என்னத்திற்கு? இந்தத் தை
லத்தை உயர்ந்த விலைக்கு விற்று, தரித்
திரருக்குக் கொடுக்கலாமே என்றார்கள்.
10 இயேசு அதை அறிந்து, அவர்களை
நோக்கி: நீங்கள் இந்த ஸ்திரீயை ஏன்
தொந்தரவுபடுத்துகிறீர்கள்? என்னிடத்
தில் நற்கிரியையைச் செய்திருக்கிறாள்.
11 தரித்திரர் எப்போதும் உங்களிடத்தில்
இருக்கிறார்கள்; நானோ எப்போதும்
12 உங்களிடத்தில் இரேன். இவள் இந்
தத் தைலத்தை என் சரீரத்தின்மேல்
ஊற்றினது என்னை அடக்கம்பண்ணுவ
தற்கு எத்தனமான செய்கையாயிருக்
கிறது. இந்தச் சுவிசேஷம் உலகத்தில் 13
எங்கெங்கே பிரசங்கிக்கப்படுமோ அங்
கங்கே இவளை நினைப்பதற்காக இவள்
செய்ததும் சொல்லப்படும் என்று மெய்
யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்
என்றார்.
அப்பொழுது, பன்னிருவரில் ஒரு 14
வனாகிய யூதாஸ்காரியோத்து என்ப
வன் பிரதான ஆசாரியரிடத்திற்குப்
போய்: நான் அவரை உங்களுக்குக் 15
காட்டிக்கொடுக்கிறேன், நீங்கள் என
க்கு என்ன கொடுக்கிறீர்கள் என்றான்.
அவர்கள் அவனுக்கு முப்பது வெள்
ளிக்காசைக் கொடுக்க உடன்பட்டார்
கள். அதுமுதல் அவன் அவரைக் 16
காட்டிக்கொடுப்பதற்குச் சமயம் பார்த்
துக்கொண்டிருந்தான்.
புளிப்பில்லாத அப்பப்பண்டிகை 17
யின் முதல்நாளிலே, சீஷர்கள் இயேசு
வினிடத்தில் வந்து: பஸ்காவைப் புசிப்
பதற்கு நாங்கள் எங்கே உமக்கு ஆயத்
தம்பண்ணச் சித்தமாயிருக்கிறீர் என்று
கேட்டார்கள். அதற்கு அவர்: நீங்கள் 18
நகரத்திலே இன்னானிடத்திற்குப்போய்:
என் வேளை சமீபமாயிருக்கிறது, உன்
வீட்டிலே என் சீஷரோடேகூடப் பஸ்
காவை ஆசரிப்பேன் என்று போதகர்
சொல்லுகிறார் என்று அவனுக்குச்
சொல்லுங்கள் என்றார்.
இயேசு கற்பித்தபடி சீஷர்கள் 19
போய், பஸ்காவை ஆயத்தம்பண்ணி
னார்கள்.
சாயங்காலமானபோது, பன்னிருவ 20
ரோடுங்கூட அவர் பந்தியிருந்தார்.
அவர்கள் போஜனம்பண்ணுகையில், 21
அவர்: உங்களி லொருவன் என்னைக்
காட்டிக்கொடுப்பான் என்று மெய்யா
கவே உங்களுக்குச் சொல்லுகிறேன்
என்றார். அப்பொழுது, அவர்கள் மிக 22
வும் துக்கமடைந்து, அவரை நோக்கி:
ஆண்டவரே, நானோ, நானோ? என்று
ஒவ்வொருவராய்க் கேட்கத் தொடங்கி
னார்கள். அவர் பிரதியுத்தரமாக: என் 23
னோடேகூடத் தாலத்தில் கையிடுகிற

வனே என்னைக் காட்டிக்கொடுப்பான்.
24 மனுஷகுமாரன் தம்மைக்குறித்து எழு
தியிருக்கிறபடியே போகிறார்; ஆகிலும்,
எந்த மனுஷனால் மனுஷகுமாரன் காட்
டிக்கொடுக்கப்படுகிறாரோ, அந்த மனு
ஷனுக்கு ஐயோ; அந்த மனுஷன் பிற
வாதிருந்தானானால் அவனுக்கு நலமா
யிருக்கும் என்றார்.
25 அவரைக்காட்டிக்கொடுத்த யூதாசும்
அவரை நோக்கி: ரபீ, நானோ? என்
றான். அதற்கு அவர்: நீ சொன்னபடி
தான் என்றார்.
26 அவர்கள் போஜனம்பண்ணுகையில்,
இயேசு அப்பத்தை எடுத்து, ஆசீர்வதி
த்து, அதைப் பிட்டு, சீஷர்களுக்குக்
கொடுத்து: நீங்கள் வாங்கிப் புசியுங்கள்,
இது என்னுடைய சரீரமாயிருக்கிறது
27 என்றார். பின்பு, பாத்திரத்தையும் எடு
த்து, ஸ்தோத்திரம்பண்ணி, அவர்களுக்
குக் கொடுத்து: நீங்கள் எல்லாரும்
28 இதிலே பானம்பண்ணுங்கள்; இது
பாவமன்னிப்புண்டாகும்படி அநேக
ருக்காகச் சிந்தப்படுகிற புது உடன்ப
டிக்கைக்குரிய என்னுடைய இரத்தமா
29 யிருக்கிறது. இதுமுதல் இந்தத் திராட்
சப்பழ ரசத்தை நவமானதாய் உங்க
ளோடேகூட என் பிதாவின் ராஜ்யத்
திலே நான் பானம்பண்ணும் நாள்
வரைக்கும் இதைப் பானம்பண்ணுவ
தில்லையென்று உங்களுக்குச் சொல்லு
கிறேன் என்றார்.
30 அவர்கள் ஸ்தோத்திரப் பாட்டைப்
பாடினபின்பு, ஒலிவமலைக்குப் புறப்
31 பட்டுப் போனார்கள். அப்பொழுது,
இயேசு அவர்களை நோக்கி: மேய்ப்பனை
வெட்டுவேன், மந்தையின் ஆடுகள் சித
றடிக்கப்படும் என்று எழுதியிருக்கிற
படி, இந்த இராத்திரியிலே நீங்கள் எல்
லாரும் என்னிமித்தம் இடறலடைவீர்
32 கள். ஆகிலும் நான் உயிர்த்தெழுந்த
பின்பு, உங்களுக்கு முன்னே கலிலே
யாவுக்குப் போவேன் என்றார்.
33 பேதுரு அவருக்குப் பிரதியுத்தரமா
க: உமது நிமித்தம் எல்லாரும் இட
றலடைந்தாலும், நான் ஒருக்காலும்
34 இடறலடையேன் என்றான். இயேசு

அவனை நோக்கி: இந்த இராத்திரியிலே
சேவல் கூவுகிறதற்குமுன்னே, நீ என்னை
மூன்றுதரம் மறுதலிப்பாய் என்று,
மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன்
என்றார். அதற்குப் பேதுரு: நான் 35
உம்மோடே மரிக்கவேண்டியதாயிருந்
தாலும் உம்மை மறுதலிக்கமாட்டேன்
என்றான்; சீஷர்கள் எல்லாரும் அப்
படியே சொன்னார்கள்.
அப்பொழுது, இயேசு அவர்களோ 36
டே கெத்செமனே என்னப்பட்ட இட
த்திற்கு வந்து, சீஷர்களை நோக்கி: நான்
அங்கே போய் ஜெபம்பண்ணுமளவும்
நீங்கள் இங்கே உட்கார்ந்திருங்கள்
என்று சொல்லி;
பேதுருவையும் செபெதேயுவின் கு 37
மாரர் இருவரையும் கூட்டிக்கொண்டு
போய், துக்கமடையவும் வியாகுலப்
படவும் தொடங்கினார். அப்பொழுது, 38
அவர்: என் ஆத்துமா மரணத்துக்கேது
வான துக்கங்கொண்டிருக்கிறது; நீங்
கள் இங்கே தங்கி, என்னோடேகூட
விழித்திருங்கள் என்று சொல்லி, சற்று 39
அப்புறம் போய், முகங்குப்புற விழு
ந்து: என் பிதாவே, இந்தப் பாத்திரம்
என்னைவிட்டு நீங்கக்கூடுமானால் நீங்கும்
படி செய்யும்; ஆகிலும் என் சித்தத்
தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்
படியே ஆகக்கடவது என்று ஜெபம்
பண்ணினார்.
பின்பு, அவர் சீஷர்களிடத்தில் 40
வந்து, அவர்கள் நித்திரை பண்ணுகிற
தைக் கண்டு, பேதுருவை நோக்கி:
நீங்கள் ஒருமணி நேரமாவது என்னோ
டேகூட விழித்திருக்கக்கூடாதா? நீங் 41
கள் சோதனைக்குட்படாதபடிக்கு விழி
த்திருந்து ஜெபம்பண்ணுங்கள்; ஆவி
உற்சாகமுள்ளதுதான், மாம்சமோ பல
வீனமுள்ளது என்றார்.
அவர் மறுபடியும் இரண்டாந்தரம் 42
போய்: என் பிதாவே, இந்தப் பாத்திரத்
தில் நான் பானம்பண்ணினாலொழிய
இது என்னைவிட்டு நீங்கக்கூடாதாகில்,
உம்முடைய சித்தத்தின்படி ஆகக்கட
வது என்று ஜெபம்பண்ணினார். அவர் 43
திரும்ப வந்தபோது, அவர்கள் மறுபடி

யும் நித்திரை பண்ணுகிறதைக் கண்
டார்; அவர்களுடைய கண்கள் மிகுந்த
நித்திரை மயக்கம் அடைந்திருந்தது.
44 அவர் மறுபடியும் அவர்களை விட்டுப்
போய், மூன்றாந்தரமும் அந்த வார்த்
தைகளையே சொல்லி ஜெபம்பண்ணி
45 னார். பின்பு அவர் தம்முடைய சீஷர்
களிடத்தில் வந்து: இனி நித்திரைபண்
ணி இளைப்பாறுங்கள்; இதோ, மனுஷ
குமாரன் பாவிகளுடைய கைகளில்
ஒப்புக்கொடுக்கப்படுகிற வேளைவந்தது.
46 என்னைக் காட்டிக்கொடுக்கிறவன்,
இதோ, வந்துவிட்டான், எழுந்திருங்கள்
போவோம் என்றார்.
47 அவர் இப்படிப் பேசுகையில், பன்
னிருவரில் ஒருவனாகிய யூதாஸ் வந்
தான்; அவனோடேகூடப் பிரதான ஆசா
ரியரும் ஜனத்தின் மூப்பரும் அனுப்
பின திரளான ஜனங்கள் பட்டயங்களை
யும் தடிகளையும் பிடித்துக்கொண்டு வந்
48 தார்கள். அவரைக் காட்டிக்கொடுக்
கிறவன்: நான் எவனை முத்தஞ்செய்
வேனோ அவன்தான், அவனைப் பிடித்
துக்கொள்ளுங்கள் என்று அவர்களு
க்கு அடையாளம் சொல்லியிருந்தான்
49 உடனே, அவன் இயேசுவினிடத்தில்
வந்து: ரபீ, வாழ்க என்று சொல்லி,
50 அவரை முத்தஞ்செய்தான். இயேசு
அவனை நோக்கி: சிநேகிதனே, என்னத்
திற்காக வந்திருக்கிறாய் என்றார். அப்
பொழுது, அவர்கள் கிட்ட வந்து,
இயேசுவின்மேல் கைபோட்டு, அவ
ரைப் பிடித்தார்கள்.
51 அப்பொழுது இயேசுவோடிருந்தவர்
களில் ஒருவன் கைநீட்டித் தன் பட்ட
யத்தை உருவி, பிரதான ஆசாரியனு
டைய வேலைக்காரனைக் காதற வெட்டி
னான்.
52 அப்பொழுது, இயேசு அவனை
நோக்கி: உன் பட்டயத்தைத் திரும்ப
அதின் உறையிலே போடு; பட்டயத்
தை எடுக்கிற யாவரும் பட்டயத்தால்
53 மடிந்துபோவார்கள். நான் இப்பொ
ழுது என் பிதாவை வேண்டிக்கொண்
டால், அவர் பன்னிரண்டு லேகியோ
னுக்கு அதிகமான தூதரை என்னிடத்
தில் அனுப்பமாட்டாரென்று நினைக்கி
றாயா? அப்படிச் செய்வேனானால், இவ் 54
விதமாய்ச் சம்பவிக்கவேண்டும் என்
கிற வேதவாக்கியங்கள் எப்படி நிறை
வேறும் என்றார்.
அந்த வேளையிலே இயேசு ஜனங்களை 55
நோக்கி: கள்ளனைப் பிடிக்கப் புறப்படு
கிறதுபோல, நீங்கள் பட்டயங்களையும்
தடிகளையும் எடுத்துக்கொண்டு என்
னைப் பிடிக்க வந்தீர்கள்; நான் தினந்
தோறும் உங்கள் நடுவிலே உட்கார்ந்து
தேவாலயத்தில் உபதேசம் பண்ணிக்
கொண்டிருந்தேன்; அப்பொழுது, நீங்
கள் என்னைப் பிடிக்கவில்லையே. ஆகி 56
லும் தீர்க்கதரிசிகள் எழுதியிருக்கிற
வசனங்கள் நிறைவேறும்படி இவைக
ளெல்லாம் சம்பவிக்கிறது என்றார்
அப்பொழுது சீஷர்களெல்லாரும்
அவரை விட்டு ஓடிப்போனார்கள்.
இயேசுவைப் பிடித்தவர்கள் அவ 57
ரைப் பிரதான ஆசாரியனாகிய காய்பா
வினிடத்திற்குக் கொண்டுபோனார்கள்;
அங்கே வேதபாரகரும் மூப்பரும் கூடி
வந்திருந்தார்கள்.
பேதுரு, தூரத்திலே அவருக்குப் 58
பின் சென்று, பிரதான ஆசாரியனு
டைய அரமனைவரைக்கும் வந்து, உள்
ளே பிரவேசித்து, முடிவைப் பார்க்கும்
படி சேவகரோடே உட்கார்ந்தான்.
பிரதான ஆசாரியரும் மூப்பரும் 59
சங்கத்தார் யாவரும் இயேசுவைக்
கொலைசெய்யும்படி அவருக்கு விரோத
மாய்ப் பொய்ச்சாட்சி தேடினார்கள்;
ஒருவரும் அகப்படவில்லை; அநேகர் 60
வந்து பொய்ச்சாட்சி சொல்லியும்
அவர்கள் சாட்சி ஒவ்வவில்லை; கடைசி
யிலே இரண்டு பொய்ச்சாட்சிகள்
வந்து: தேவனுடைய ஆலயத்தை இடி 61
த்துப்போடவும், மூன்றுநாளைக்குள்ளே
அதைக் கட்டவும் என்னாலே ஆகும்
என்று இவன் சொன்னான் என்றார்கள்.
அப்பொழுது, பிரதான ஆசாரியன் 62
எழுந்திருந்து, அவரை நோக்கி: இவர்
கள் உனக்கு விரோதமாய்ச் சாட்சி
சொல்லுகிறதைக்குறித்து நீ ஒன்றும்
சொல்லுகிறதில்லையா என்றான். இயே 63

சுவோ பேசாமலிருந்தார். அப்பொழுது,
பிரதான ஆசாரியன் அவரை நோக்கி:
நீ தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து
தானா? அதை எங்களுக்குச் சொல்லும்
படி ஜீவனுள்ள தேவன்பேரில் உன்னை
ஆணையிட்டுக் கேட்கிறேன் என்றான்.
64 அதற்கு இயேசு: நீர் சொன்னபடிதான்;
அன்றியும், மனுஷகுமாரன் சர்வவல்ல
வருடைய வலதுபாரிசத்தில் வீற்றிருப்
பதையும் வானத்தின் மேகங்கள்மேல்
வருவதையும் இதுமுதல் காண்பீர்க
ளென்று, உங்களுக்குச் சொல்லுகிறேன்
65 என்றார். அப்பொழுது பிரதான ஆசா
ரியன் தன் வஸ்திரங்களைக் கிழித்துக்
கொண்டு: இவன் தேவதூஷணம் சொ
ன்னான்; இனிச் சாட்சிகள் நமக்கு
வேண்டியதென்ன? இதோ, இவன் தூ
ஷணத்தை இப்போது கேட்டீர்களே.
66 உங்களுக்கு என்னமாய்த் தோன்றுகி
றது என்று கேட்டான். அதற்கு அவர்
கள்: மரணத்துக்குப் பாத்திரனாயிருக்
கிறான் என்றார்கள்.
67 அப்பொழுது, அவருடைய முகத்
தில் துப்பி, அவரைக் குட்டினார்கள்;
சிலர் அவரைக் கன்னத்தில் அறைந்து:
68 கிறிஸ்துவே, உம்மை அடித்தவன் யார்?
அதை ஞானதிருஷ்டியினால் எங்களுக்
குச் சொல்லும் என்றார்கள்.
69 அத்தருணத்தில் பேதுரு வெளியே
வந்து அரமனை முற்றத்தில் உட்கார்ந்தி
ருந்தான். அப்பொழுது, வேலைக்காரி
ஒருத்தி அவனிடத்தில் வந்து: நீயும்
கலிலேயனாகிய இயேசுவோடேகூட
70 இருந்தாய் என்றாள். அதற்கு அவன்:
நீ சொல்லுகிறது எனக்குத் தெரியாது
என்று, எல்லாருக்கும் முன்பாக மறுத
71 லித்தான். அவன், வாசல் மண்டபத்
திற்குப் போனபொழுது வேறொருத்தி
அவனைக் கண்டு: இவனும் நசரேயனா
கிய இயேசுவோடேகூட இருந்தான்
என்று அங்கே இருந்தவர்களுக்குச்
72 சொன்னாள். அவனோ: அந்த மனுஷனை
நான் அறியேன் என்று ஆணையிட்டு,
73 மறுபடியும் மறுதலித்தான். சற்றுநே
ரத்துக்குப் பின்பு அங்கே நின்றவர்கள்
பேதுருவினிடத்தில் வந்து, மெய்யா
கவே நீயும் அவர்களில் ஒருவன்; உன்
பேச்சு உன்னை வெளிப்படுத்துகிறது
என்றார்கள். அப்பொழுது அவன்: அந்த 74
மனுஷனை அறியேன் என்று சொல்லி,
சபிக்கவும் சத்தியம் பண்ணவும் தொ
டங்கினான். உடனே சேவல் கூவிற்று.
அப்பொழுது பேதுரு: சேவல் கூவுகிற 75
தற்குமுன்னே நீ என்னை மூன்றுதரம்
மறுதலிப்பாய் என்று இயேசு தன்னி
டத்தில் சொன்ன வசனத்தை நினைத்துக்
கொண்டு, வெளியே போய், மனங்கச
ந்து அழுதான்.

விடியற்காலமானபோது, சகல பிர 27
தான ஆசாரியரும், ஜனத்தின் மூப்ப
ரும், இயேசுவைக் கொலைசெய்யும்படி,
அவருக்கு விரோதமாக ஆலோசனை
பண்ணி, அவரைக் கட்டி, கொண்டு 2
போய், தேசாதிபதியாகிய பொந்தியு
பிலாத்துவினிடத்தில் ஒப்புக்கொடுத்தா
ர்கள்.

அப்பொழுது, அவரைக் காட்டிக் 3
கொடுத்த யூதாஸ், அவர் மரணாக்கினைக்
குள்ளாகத் தீர்க்கப்பட்டதைக் கண்டு,
மனஸ்தாபப்பட்டு, அந்த முப்பது வெ
ள்ளிக்காசைப் பிரதான ஆசாரியரிடத்
திற்கும் மூப்பரிடத்திற்கும் திரும்பக்
கொண்டுவந்து: குற்றமில்லாத இரத்த 4
த்தை நான் காட்டிக்கொடுத்ததினால்
பாவஞ்செய்தேன் என்றான். அதற்கு
அவர்கள்: எங்களுக்கென்ன, அது உன்
பாடு என்றார்கள். அப்பொழுது, அ 5
வன் அந்த வெள்ளிக்காசை தேவாலய
த்திலே எறிந்துவிட்டு, புறப்பட்டுப்
போய், நான்றுகொண்டு செத்தான்.

பிரதான ஆசாரியர் அந்த வெள்ளிக் 6
காசை எடுத்து: இது இரத்தக்கிரயமா
னதால், காணிக்கைப்பெட்டியிலே இ
தைப் போடலாகாதென்று சொல்லி,
ஆலோசனை பண்ணினபின்பு, அந்நிய 7
ரை அடக்கம்பண்ணுவதற்குக் குயவ
னுடைய நிலத்தை அதினாலே கொண்
டார்கள். இதினிமித்தம் அந்த நிலம் 8
இந்நாள்வரைக்கும் இரத்தநிலம் என்
னப்படுகிறது.

இஸ்ரவேல் புத்திரரால் மதிக்கப்பட் 9
டவருக்குக் கிரயமாகிய முப்பது வெள்

10 ளிக்காசை அவர்கள் எடுத்து, கர்த்தர்
எனக்குக் கற்பித்தபடி குயவனுடைய
நிலத்திற்காக அதைக் கொடுத்தார்கள்
என்று எரேமியா தீர்க்கதரிசியால்
உரைக்கப்பட்டது அப்பொழுது நிறை
வேறிற்று.
11 இயேசு தேசாதிபதிக்கு முன்பாக
நின்றார்; தேசாதிபதி அவரை நோக்கி:
நீ யூதருடைய ராஜாவா என்று கேட்
டான். அதற்கு இயேசு: நீர் சொல்லு
12 கிறபடிதான் என்றார். பிரதான ஆசா
ரியரும் மூப்பரும் அவர்மேல் குற்றஞ்
சாட்டுகையில், அவர் மாறுத்தரம் ஒன்
றும் சொல்லவில்லை.
13 அப்பொழுது, பிலாத்து அவரை
நோக்கி: இவர்கள் உன்மேல் எத்தனை
யோ குற்றங்களைச் சாட்டுகிறார்களே, நீ
அவைகளைக் கேட்கவில்லையா என்றான்.
14 அவரோ ஒரு வார்த்தையும் மாறுத்தர
மாகச் சொல்லவில்லை; அதினால் தேசா
திபதி மிகவும் ஆச்சரியப்பட்டான்.
15 காவல் பண்ணப்பட்டவர்களில் எவ
னை விடுதலையாக்கவேண்டுமென்று ஜன
ங்கள் கேட்டுக்கொள்வார்களோ, அ
வனை அவர்களுக்காக விடுதலையாக்கு
வது பண்டிகைதோறும் தேசாதிபதிக்கு
16 வழக்கமாயிருந்தது. அப்பொழுது கா
வல் பண்ணப்பட்டவர்களில் பரபாஸ்
என்னப்பட்ட பேர்போன ஒருவன் இரு
17 ந்தான். பொறாமையினாலே அவரை
ஒப்புக்கொடுத்தார்கள் என்று பிலாத்து
18 அறிந்து, அவர்கள் கூடியிருக்கையில்,
அவர்களை நோக்கி: எவனை நான் உங்
களுக்கு விடுதலையாக்க வேண்டுமென்றி
ருக்கிறீர்கள்? பரபாசையோ? கிறிஸ்து
என்னப்படுகிற இயேசுவையோ? என்று
கேட்டான்.
19 அவன் நியாயாசனத்தில் உட்கார்
ந்திருக்கையில், அவனுடைய மனைவி
அவனிடத்தில் ஆளனுப்பி: நீர் அந்த
நீதிமானை ஒன்றும் செய்யவேண்டாம்;
அவர்நிமித்தம் இன்றைக்குச் சொப்ப
னத்தில் வெகு பாடுபட்டேன் என்று
சொல்லச்சொன்னாள்.
20 பரபாசை விட்டுவிடக் கேட்டுக்கொ
ள்ளவும், இயேசுவைக் கொலைசெய்விக்
கவும் பிரதான ஆசாரியரும் மூப்பரும்
ஜனங்களை ஏவிவிட்டார்கள்.
தேசாதிபதி ஜனங்களை நோக்கி: இவ் 21
விருவரில் எவனை நான் உங்களுக்கு
விடுதலையாக்கவேண்டும் என்று கேட்
டான் அதற்கு அவர்கள்: பரபாசை
என்றார்கள். பிலாத்து அவர்களை நோ 22
க்கி: அப்படியானால், கிறிஸ்து என்னப்
பட்ட இயேசுவை நான் என்ன செய்
யவேண்டும் என்று கேட்டான். அவ
னைச் சிலுவையில் அறையவேண்டும்
என்று எல்லாரும் சொன்னார்கள். தே 23
சாதிபதியோ: ஏன், என்ன பொல்லாப்
புச் செய்தான் என்றான். அதற்கு அவர்
கள்: அவனைச் சிலுவையில் அறையவே
ண்டும் என்று அதிகமதிகமாய்க் கூக்கு
ரலிட்டுச் சொன்னார்கள்.
கலகம் அதிகமாகிறதே யல்லாமல் 24
தன் பிரயத்தனத்தினாலே பிரயோஜன
மில்லையென்று பிலாத்து கண்டு, தண்
ணீரை அள்ளி, ஜனங்களுக்கு முன்பா
கக் கைகளைக் கழுவி: இந்த நீதிமானு
டைய இரத்தப்பழிக்கு நான் குற்றமற்ற
வன், நீங்களே பார்த்துக்கொள்ளுங்கள்
என்றான். அதற்கு ஜனங்களெல்லா 25
ரும்: இவனுடைய இரத்தப்பழி எங்
கள்மேலும் எங்கள் பிள்ளைகள்மேலும்
இருப்பதாக என்று சொன்னார்கள்.
அப்பொழுது, அவன் பரபாசை அவ 26
ர்களுக்கு விடுதலையாக்கி, இயேசுவை
யோ வாரினால் அடிப்பித்து, சிலுவை
யில் அறையும்படிக்கு ஒப்புக்கொடுத்
தான்.
அப்பொழுது, தேசாதிபதியின் போர் 27
ச்சேவகர் இயேசுவைத் தேசாதிபதி
யின் அரமனையிலே கொண்டுபோய்,
போர்ச்சேவகரின் கூட்டம் முழுவதை
யும் அவரிடத்தில் கூடிவரச்செய்து,
அவர்வஸ்திரங்களைக் கழற்றி, சிவப்பான 28
மேலங்கியை அவருக்கு உடுத்தி, முள் 29
ளுகளால் ஒரு முடியைப் பின்னி, அவர்
சிரசின்மேல் வைத்து, அவர் வலதுகை
யில் ஒரு கோலைக் கொடுத்து, அவர்
முன்பாக முழங்காற்படியிட்டு: யூதரு
டைய ராஜாவே, வாழ்க என்று அவ
ரைப் பரியாசம்பண்ணி, அவர்மேல் 30

துப்பி, அந்தக் கோலை எடுத்து, அவரைச்
31 சிரசில் அடித்தார்கள். அவரைப் பரி
யாசம்பண்ணினபின்பு, அவருக்கு உடு
த்தின மேலங்கியைக் கழற்றி, அவரு
டைய வஸ்திரங்களை அவருக்கு உடுத்தி,
அவரைச் சிலுவையில் அறையும்படி
கொண்டுபோனார்கள்.
32 போகையில், சிரேனே ஊரானாகிய
சீமோன் என்னப்பட்ட ஒரு மனுஷனை
அவர்கள் கண்டு, அவருடைய சிலுவை
யைச் சுமக்கும்படி அவனைப் பலவந்
33 தம் பண்ணினார்கள். கபாலஸ்தலம்
என்று அர்த்தங்கொள்ளும் கொல்கொ
தா என்னும் இடத்துக்கு அவர்கள்
34 வந்தபோது, கசப்புக்கலந்த காடியை
அவருக்குக் குடிக்கக் கொடுத்தார்கள்;
அவர் அதை ருசிபார்த்து, குடிக்க மன
தில்லாதிருந்தார்.
35 அவரைச் சிலுவையில் அறைந்த
பின்பு, அவர்கள் சீட்டுப்போட்டு அவ
ருடைய வஸ்திரங்களைப் பங்கிட்டுக்
கொண்டார்கள். என் வஸ்திரங்களைத்
தங்களுக்குள்ளே பங்கிட்டு, என் உடை
யின்பேரில் சீட்டுப்போட்டார்கள் என்
று தீர்க்கதரிசியால் உரைக்கப்பட்டது
நிறைவேறும்படி இப்படி நடந்தது.
36 அவர்கள் அங்கே உட்கார்ந்து, அவ
ரைக் காவல் காத்துக்கொண்டிருந்தார்
கள்.
37 அன்றியும் அவர் அடைந்த ஆக்கி
னையின் முகாந்தரத்தைக் காண்பிக்கும்
பொருட்டு, இவன் யூதருடைய ராஜா
வாகிய இயேசு என்று எழுதி, அவர்
சிரசுக்கு மேலாக வைத்தார்கள்.
38 அப்பொழுது, அவருடைய வலது
பக்கத்தில் ஒருவனும் அவருடைய இட
துபக்கத்தில் ஒருவனுமாக இரண்டு
கள்ளர் அவரோடேகூடச் சிலுவைக
ளில் அறையப்பட்டார்கள்.
39 அந்த வழியாய் நடந்துபோகிறவர்
40 கள் தங்கள் தலைகளைத் துலுக்கி: தேவா
லயத்தை இடித்து, மூன்றுநாளைக்குள்
ளே கட்டுகிறவனே, உன்னை நீயே இரட்
சித்துக்கொள்; நீ தேவனுடைய குமா
ரனானால் சிலுவையிலிருந்து இறங்கிவா
41 என்று அவரைத் தூஷித்தார்கள். அப்ப
டியே பிரதான ஆசாரியரும் வேதபார
கரும் மூப்பரும் பரியாசம்பண்ணி:
மற்றவர்களை இரட்சித்தான்; தன்னைத் 42
தான் இரட்சித்துக்கொள்ளத் திராணியி
ல்லை; இவன் இஸ்ரவேலின் ராஜாவா
னால் இப்பொழுது சிலுவையிலிருந்து
இறங்கி வரட்டும், அப்பொழுது இவனை
விசுவாசிப்போம். தன்னை தேவனு 43
டைய குமாரனென்று சொல்லி, தேவன்
மேல் நம்பிக்கையாயிருந்தானே; அவர்
இவன்மேல் பிரியமாயிருந்தால் இப்
பொழுது இவனை இரட்சிக்கட்டும் என்
றார்கள். அவரோடேகூடச் சிலுவைக 44
ளில் அறையப்பட்ட கள்ளரும் அந்தப்
படியே அவரை நிந்தித்தார்கள்.
ஆறும்மணி நேரமுதல் ஒன்பதாம் 45
மணி நேரம்வரைக்கும் பூமியெங்கும்
அந்தகாரம் உண்டாயிற்று.
ஒன்பதாம்மணி நேரத்தில் இயேசு: 46
ஏலி! ஏலி! லாமா சபக்தானி, என்று
மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்டார்; அத
ற்கு என் தேவனே! என் தேவனே!
ஏன் என்னைக் கைவிட்டீர் என்று அர்த்
தமாம். அங்கே நின்றவர்களில் சிலர் 47
அதைக் கேட்டபொழுது: இவன் எலி
யாவைக் கூப்பிடுகிறான் என்றார்கள்.
உடனே அவர்களில் ஒருவன் ஓடி, கட 48
ற்காளானை எடுத்து, காடியில் தோய்த்து,
அதை ஒரு கோலில் மாட்டி, அவருக்
குக் குடிக்கக் கொடுத்தான். மற்றவர் 49
களோ, பொறு, எலியா இவனை இரட்
சிக்க வருவானோ, பார்ப்போம் என்றார்
கள்.
இயேசு, மறுபடியும் மகா சத்தமா 50
ய்க் கூப்பிட்டு, ஆவியை விட்டார்.
அப்பொழுது, தேவாலயத்தின் திரை 51
ச்சீலை மேல்தொடங்கிக் கீழ்வரைக்கும்
இரண்டாகக் கிழிந்தது, பூமியும் அதிர்
ந்தது, கன்மலைகளும் பிளந்தது. கல் 52
லறைகளும் திறந்தது, நித்திரையடைந்
திருந்த அநேக பரிசுத்தவான்களுடைய
சரீரங்களும் எழுந்திருந்தது. அவர் 53
உயிர்த்தெழுந்தபின்பு, இவர்கள் கல்ல
றைகளைவிட்டுப் புறப்பட்டு, பரிசுத்த
நகரத்தில் பிரவேசித்து, அநேகருக்குக்
காணப்பட்டார்கள்.

54 நூற்றுக்கு அதிபதியும், அவனோடே
கூட இயேசுவைக் காவல் காத்திருந்த
வர்களும், பூமி யதிர்ச்சியையும் சம்ப
வித்த காரியங்களையும் கண்டு, மிகவும்
பயந்து: மெய்யாகவே இவர் தேவனு
டைய குமாரன் என்றார்கள்.
55 மேலும், இயேசுவுக்கு ஊழியஞ்செ
ய்யும்படி கலிலேயாவிலிருந்து அவரோ
டே வந்திருந்த அநேக ஸ்திரீகள் அங்கே
தூரத்திலே நின்று பார்த்துக்கொண்டிரு
56 ந்தார்கள். அவர்களுக்குள்ளே மகத
லேனா மரியாளும், யாக்கோபுக்கும்
யோசேக்கும் தாயாகிய மரியாளும், செ
பெதேயுவின் குமாரருடைய தாயும்
இருந்தார்கள்.
57 சாயங்காலமானபோது, இயேசுவுக்
குச் சீஷனும் ஐசுவரியவானுமாயிருந்த
யோசேப்பு என்னும் பேர்கொண்ட
அரிமத்தியா ஊரானாகிய ஒரு மனுஷன்
58 வந்து, பிலாத்துவினிடத்தில் போய்,
இயேசுவின் சரீரத்தைக் கேட்டான்
அப்பொழுது, சரீரத்தைக் கொடுக்கும்
படி பிலாத்து கட்டளையிட்டான்.
59 யோசேப்பு அந்தச் சரீரத்தை எடு
த்து, துய்யதான மெல்லிய துப்பட்டியி
60 லே சுற்றி, தான் கன்மலையில் வெட்டி
யிருந்த தன்னுடைய புதிய கல்லறையி
லே அதை வைத்து, கல்லறையின் வாச
லில் ஒரு பெரிய கல்லைப் புரட்டிவைத்
61 துப் போனான். அங்கே மகதலேனா
மரியாளும் மற்ற மரியாளும் கல்லறை
க்கு எதிராக உட்கார்ந்திருந்தார்கள்.
62 ஆயத்தநாளுக்குப் பின்னான மறு
நாளிலே பிரதான ஆசாரியரும் பரிசே
யரும் பிலாத்துவினிடத்தில் கூடிவந்து:
63 ஆண்டவனே, அந்த எத்தன் உயிரோ
டிருக்கும்போது, மூன்றுநாளைக்குப் பின்
எழுந்திருப்பேன் என்று சொன்னது
64 எங்களுக்கு ஞாபகமிருக்கிறது. ஆகை
யால், அவனுடைய சீஷர்கள் இராத்தி
ரியிலே வந்து, அவனைக் களவாய்க்
கொண்டுபோய், மரித்தோரிலிருந்து
எழுந்தானென்று ஜனங்களுக்குச் சொல்
லாதபடிக்கும், முந்தின எத்தைப்பார்
க்கிலும் பிந்தின எத்து கொடிதாகாதப
டிக்கும், நீர் மூன்றுநாள்வரைக்கும் கல்
லறையைப் பத்திரப்படுத்தும்படி கட்
டளையிடவேண்டும் என்றார்கள்.
அதற்குப் பிலாத்து: உங்களுக்குக் 65
காவல் சேவகர் உண்டே; போய், உங்
களால் கூடியமட்டும் பத்திரப்படுத்திக்
கொள்ளுங்கள் என்றான். அவர்கள் 66
போய்க் கல்லுக்கு முத்திரை போட்டு,
காவல் வைத்து, கல்லறையைப் பத்திர
ப்படுத்தினார்கள்.
ஓய்வுநாள் முடிந்து, வாரத்தின் முத 28
லாம்நாள் விடிந்துவருகையில், மகத
லேனா மரியாளும் மற்ற மரியாளும்
கல்லறையைப் பார்க்கவந்தார்கள். அப் 2
பொழுது, பூமி மிகவும் அதிரும்படி,
கர்த்தருடைய தூதன் வானத்திலிருந்தி
றங்கிவந்து, வாசலிலிருந்த கல்லைப் புர
ட்டித் தள்ளி, அதின்மேல் உட்கார்ந்
தான். அவனுடைய ரூபம் மின்னல்போ 3
லவும், அவனுடைய வஸ்திரம் உறை
ந்த மழையைப்போல வெண்மையாக
வும் இருந்தது. காவலாளர் அவனுக் 4
குப் பயந்ததினால் திடுக்கிட்டுச் செத்தவ
ர்கள்போலானார்கள்.
தூதன் அந்த ஸ்திரீகளை நோக்கி: நீங் 5
கள் பயப்படாதிருங்கள்; சிலுவையில்
அறையப்பட்ட இயேசுவைத் தேடுகிறீர்
கள் என்று அறிவேன். அவர் இங்கே 6
இல்லை; தாம் சொன்னபடியே உயிர்த்
தெழுந்தார்; கர்த்தரை வைத்த இடத்
தை வந்து பாருங்கள்: சீக்கிரமாய்ப் 7
போய், அவர் மரித்தோரிலிருந்து எழுந்
தார் என்று அவருடைய சீஷர்களுக்குச்
சொல்லுங்கள். அவர் உங்களுக்கு முன
னே கலிலேயாவுக்குப் போகிறார்; அங்
கே அவரைக் காண்பீர்கள்; இதோ, உங்
களுக்குச் சொன்னேன் என்றான்.
அவர்கள் பயத்தோடும் மகா சந்தோ 8
ஷத்தோடும் கல்லறையைவிட்டுச் சீக்
கிரமாய்ப் புறப்பட்டு, அவருடைய
சீஷர்களுக்கு அறிவிக்க ஓடினார்கள்.
அவர்கள் அவருடைய சீஷர்களு 9
க்கு அறிவிக்கப் போகிறபோது, இ
யேசு தாமே அவர்களுக்கு எதிர்ப்ப
ட்டு: வாழ்க என்றார். அவர்கள் கிட்ட
வந்து, அவர் பாதங்களைத் தழுவி, அவ
ரைப் பணிந்துகொண்டார்கள். அப் 10

பொழுது இயேசு அவர்களை நோக்கி:
பயப்படாதிருங்கள்; நீங்கள் போய்,
என் சகோதரர் கலிலேயாவுக்குப் போ
கும்படி அவர்களுக்குச் சொல்லுங்கள்;
அங்கே அவர்கள் என்னைக் காண்பார்
கள் என்றார்.
11 அவர்கள் போகையில், காவல் சேவ
கரில் சிலர் நகரத்துக்குள்ளே வந்து,
நடந்த யாவற்றையும் பிரதான ஆசா
12 ரியருக்கு அறிவித்தார்கள். இவர்கள்
மூப்பரோடே கூடிவந்து, ஆலோசனை
பண்ணி, சேவகருக்கு வேண்டிய பண
13 த்தைக் கொடுத்து: நாங்கள் நித்திரை
பண்ணுகையில், அவனுடைய சீஷர்
கள் இராத்திரியிலே வந்து, அவனைக்
களவாய்க் கொண்டுபோய்விட்டார்கள்
14 என்று சொல்லுங்கள். இது தேசாதிப
திக்குக் கேள்வியானால், நாங்கள் அவ
ரைச் சம்மதப்படுத்தி, உங்களைத் தப்
15 புவிப்போம் என்றார்கள். அவர்கள்
பணத்தை வாங்கிக்கொண்டு, தங்களுக்
குப் போதிக்கப்பட்டபடியே செய்தார்
கள். இந்தப் பேச்சு யூதருக்குள்ளே
இந்நாள்வரைக்கும் பிரசித்தமாயிருக்
கிறது.
பதினொரு சீஷர்களும், கலிலேயா 16
விலே இயேசு தங்களுக்குக் குறித்தி
ருந்த மலைக்குப் போனார்கள். அங்கே 17
அவர்கள் அவரைக் கண்டு, பணிந்து
கொண்டார்கள்; சிலரோ சந்தேகப்
பட்டார்கள்.
அப்பொழுது இயேசு சமீபத்தில் 18
வந்து, அவர்களை நோக்கி: வானத்திலும்
பூமியிலும் சகல அதிகாரமும் எனக்
குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகை 19
யால், நீங்கள் புறப்பட்டுப்போய், சகல
ஜாதிகளையும் சீஷராக்கி, பிதா குமாரன்
பரிசுத்தஆவியின் நாமத்திலே அவர்க
ளுக்கு ஞானஸ்நானங்கொடுத்து, நான் 20
உங்களுக்குக் கட்டளையிட்ட யாவை
யும் அவர்கள் கைக்கொள்ளும்படி
அவர்களுக்கு உபதேசம்பண்ணுங்கள்.
இதோ, உலகத்தின் முடிவுபரியந்தம்
சகல நாட்களிலும் நான் உங்களுட
னேகூட இருக்கிறேன் என்றார். ஆ
மென்.

# மாற்கு எழுதின சுவிசேஷம்.

1 தேவனுடைய குமாரனாகிய இயேசு
கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்தின் ஆ
ரம்பம்.
2 இதோ நான் என் தூதனை உமக்கு
முன்பாக அனுப்புகிறேன், அவன் உம
க்கு முன்னே போய், உமக்கு வழியை
3 ஆயத்தம்பண்ணுவான் என்றும்; கர்த்
தருக்கு வழியை ஆயத்தப்படுத்துங்கள்,
அவருக்குப் பாதைகளைச் செவ்வைபண்
ணுங்கள் என்று வனாந்தரத்திலே கூப்
பிடுகிறவனுடைய சத்தம் உண்டாகும்
என்றும், தீர்க்கதரிசன ஆகமங்களில்
4 எழுதியிருக்கிறபிரகாரமாய்; யோவான்
வனாந்தரத்தில் ஞானஸ்நானங் கொடுத்
து, பாவமன்னிப்புக்கென்று மனந்தி
ரும்புதலுக்கேற்ற ஞானஸ்நானத்தைக்
குறித்துப் பிரசங்கம் பண்ணிக்கொண்
டிருந்தான். அப்பொழுது யூதேயா 5
தேசத்தார் அனைவரும் எருசலேம் நக
ரத்தார் யாவரும், அவனிடத்திற்குப்
போய், தங்கள் பாவங்களை அறிக்கை
யிட்டு, யோர்தான் நதியில் அவனால்
ஞானஸ்நானம் பெற்றார்கள்.
யோவான் ஒட்டகமயிர் உடையைத் 6
தரித்து, தன் அரையில் வார்க்கச்சை
யைக் கட்டிக்கொண்டவனாயும், வெட்
டுக்கிளியையும் காட்டுத் தேனையும் புசி
க்கிறவனாயும் இருந்தான். அவன்: என் 7
னிலும் வல்லவர் ஒருவர் எனக்குப்
பின் வருகிறார், அவருடைய பாதரட்

சைகளின் வாரைக் குனிந்து அவிழ்க்
8 கிறதற்கும் நான் பாத்திரன் அல்ல. நான்
ஜலத்தினால் உங்களுக்கு ஞானஸ்நானம்
கொடுத்தேன்; அவரோ பரிசுத்தஆவி
யினால் உங்களுக்கு ஞானஸ்நானம் கொ
டுப்பார் என்று பிரசங்கித்தான்.
9 அந்த நாட்களில், இயேசு கலிலேயா
விலுள்ள நாசரேத்தூரிலிருந்து வந்து,
யோர்தான் நதியில் யோவானால் ஞானஸ்
10 நானம் பெற்றார். அவர் ஜலத்திலிருந்து
கரையேறினவுடனே, வானம் திறக்கப்
பட்டதையும், ஆவியானவர் புறாவைப்
போல் தம்மேல் இறங்குகிறதையும்
11 கண்டார். அன்றியும், நீர் என்னுடைய
நேசகுமாரன், உம்மில் பிரியமாயிருக்
கிறேன் என்று வானத்திலிருந்து ஒரு
சத்தம் உண்டாயிற்று.
12 உடனே ஆவியானவர் அவரை வனா
ந்தரத்திற்குப் போகும்படி ஏவினார்.
13 அவர் வனாந்தரத்திலே நாற்பதுநாள்
இருந்து, சாத்தானால் சோதிக்கப்பட்டு,
அங்கே காட்டுமிருகங்களின் நடுவிலே
சஞ்சரித்துக்கொண்டிருந்தார். தேவ
தூதர்கள் அவருக்கு ஊழியஞ்செய்தார்
கள்.
14 யோவான் காவலில் வைக்கப்பட்ட
பின்பு, இயேசு கலிலேயாவிலே வந்து,
தேவனுடைய ராஜ்யத்தின் சுவிசேஷத்
15 தைப் பிரசங்கித்து: காலம் நிறைவே
றிற்று, தேவனுடைய ராஜ்யம் சமீப
மாயிற்று; மனந்திரும்பி, சுவிசேஷத்தை
விசுவாசியுங்கள் என்றார்.
16 அவர் கலிலேயாக் கடலோரமாய்
நடந்துபோகையில், மீன்பிடிக்கிறவர்
களாயிருந்த சீமோனும், அவன் சகோ
தரன் அந்திரேயாவும் கடலில் வலை
போட்டுக்கொண்டிருக்கிறபோது அவர்
17 களைக் கண்டார். இயேசு அவர்களை
நோக்கி: என் பின்னே வாருங்கள்,
உங்களை மனுஷரைப் பிடிக்கிறவர்க
18 ளாக்குவேன் என்றார். உடனே அவர்
கள் தங்கள் வலைகளை விட்டு, அவருக்
குப் பின்சென்றார்கள்.
19 அவர் அவ்விடம் விட்டுச் சற்று
அப்புறம் போனபோது, செபெதேயு
வின் குமாரன் யாக்கோபும் அவன்
சகோதரன் யோவானும் படவிலே வலை
களைப் பழுதுபார்த்துக்கொண்டிருக்கிற
தைக் கண்டு, உடனே அவர்களையும் 20
அழைத்தார்; அப்பொழுது அவர்கள்
தங்கள் தகப்பனாகிய செபெதேயுவைக
கூலியாட்களோடு படவிலே விட்டு,
அவருக்குப் பின்சென்றார்கள்.
பின்பு கப்பர்நகூமுக்குப் போனார் 21
கள். உடனே அவர் ஓய்வுநாளில் ஜெப
ஆலயத்திலே பிரவேசித்து, போதகம்
பண்ணினார். அவர் வேதபாரகரைப் 22
போலப் போதியாமல், அதிகாரமுடை
யவராய் அவர்களுக்குப் போதித்தபடி
யினால், அவருடைய போதகத்தைக்
குறித்து ஜனங்கள் ஆச்சரியப்பட்டார்
கள்.
அவர்களுடைய ஜெபஆலயத்திலே 23
அசுத்த ஆவியுள்ள ஒரு மனுஷன் இரு
ந்தான். அவன்: ஐயோ! நசரேயனா 24
கிய இயேசுவே, எங்களுக்கும் உமக்
கும் என்ன? எங்களைக் கெடுக்கவா
வந்தீர்? உம்மை இன்னார் என்று அறி
வேன், நீர் தேவனுடைய பரிசுத்தர்
என்று சத்தமிட்டான். அதற்கு இயேசு: 25
நீ பேசாமல் இவனை விட்டுப் புறப்பட்
டுப் போ என்று அதை அதட்டினார்.
உடனே அந்த அசுத்த ஆவி அவனை 26
அலைக்கழித்து, மிகுந்த சத்தமிட்டு,
அவனை விட்டுப் போய்விட்டது.
எல்லாரும் ஆச்சரியப்பட்டு: இது 27
என்ன? இந்தப் புதிய உபதேசம் எப்
படிப்பட்டது? இவர் அதிகாரத்தோடே
அசுத்த ஆவிகளுக்கும் கட்டளையிடுகி
றார், அவைகள் இவருக்குக் கீழ்ப்படி
கிறதே என்று தங்களுக்குள்ளே ஒரு
வரோடொருவர் சொல்லிக்கொண்டார்
கள். அதுமுதல் அவருடைய கீர்த்தி 28
கலிலேயா நாடெங்கும் பிரசித்தமா
யிற்று.
உடனே அவர்கள் ஜெபஆலயத்தை 29
விட்டுப் புறப்பட்டு, யாக்கோபோடும்
யோவானோடுங்கூட, சீமோன் அந்தி
ரேயா என்பவர்களுடைய வீட்டில்
பிரவேசித்தார்கள். அங்கே சீமோனு 30
டைய மாமி ஜுரமாய்க் கிடந்தாள்;
உடனே அவர்கள் அவளைக்குறித்து

31 அவருக்குச் சொன்னார்கள். அவர் கிட்
டப் போய், அவள் கையைப்பிடித்து,
அவளைத் தூக்கிவிட்டார்; உடனே ஜு
ரம் அவளை விட்டு நீங்கிற்று; அப்பொ
ழுது அவள் அவர்களுக்குப் பணிவிடை
செய்தாள்.
32 சாயங்காலமாகிச் சூரியன் அஸ்த
மித்தபோது, சகல பிணியாளிகளையும்,
பிசாசு பிடித்தவர்களையும், அவரிடத்
33 தில் கொண்டுவந்தார்கள். பட்டணத்
தார் எல்லாரும் வீட்டு வாசலுக்கு முன்
34 பாகக் கூடிவந்தார்கள். பலவிதமான
வியாதிகளினால் உபத்திரவப்பட்டிருந்த
அநேகரை அவர் சொஸ்தமாக்கி, அநே
கம் பிசாசுகளையும் துரத்திவிட்டார்;
அந்தப் பிசாசுகள் தம்மை அறிந்திருந்
தபடியால் அவைகள் பேசுகிறதற்கு
அவர் இடங்கொடுக்கவில்லை.
35 அவர் அதிகாலையில், இருட்டோடே
எழுந்து புறப்பட்டு, வனாந்தரமான
ஓரிடத்திற்குப் போய், அங்கே ஜெபம்
பண்ணினார்.
36 சீமோனும் அவனோடே இருந்தவர்க
ளும் அவரைப் பின்தொடர்ந்து போய்,
37 அவரைக் கண்டபோது: உம்மை எல்
லாரும் தேடுகிறார்கள் என்று சொன்னார்
38 கள். அவர்களை அவர் நோக்கி: அடுத்த
ஊர்களிலும் நான் பிரசங்கம் பண்ண
வேண்டுமாதலால், அவ்விடங்களுக்குப்
போவோம் வாருங்கள்; இதற்காகவே
புறப்பட்டு வந்தேன் என்று சொல்லி;
39 கலிலேயா நாடெங்கும் அவர்களு
டைய ஜெபஆலயங்களில் அவர் பிர
சங்கம் பண்ணிக்கொண்டும், பிசாசுக
ளைத் துரத்திக்கொண்டும் இருந்தார்.
40 அப்பொழுது குஷ்டரோகி ஒருவன்
அவரிடத்தில் வந்து, அவர் முன்பாக
முழங்கால்படியிட்டு: உமக்குச் சித்த
மானால் என்னைச் சுத்தமாக்க உம்மால்
ஆகும் என்று வேண்டிக்கொண்டான்.
41 இயேசு மனதுருகி, கையை நீட்டி,
அவனைத் தொட்டு: எனக்குச் சித்த
42 முண்டு, சுத்தமாகு என்றார். இப்படி
அவர் சொன்னவுடனே, குஷ்டரோகம்
அவனை விட்டு நீங்கிற்று, அவன் சுத்த
43 மானான்; அப்பொழுது அவர் அவனை
நோக்கி: நீ இதை ஒருவருக்கும் சொல்
லாதபடிக்கு எச்சரிக்கையாயிரு; ஆயி 44
னும் நீ போய், ஆசாரியனுக்கு உன்
னைக் காண்பித்து, நீ சுத்தமானதினிமித்
தம், மோசே கட்டளையிட்டிருக்கிற
வைகளை அவர்களுக்குச் சாட்சியாகச்
செலுத்து என்று கண்டிப்பாய்ச் சொல்
லி, உடனே அவனை அனுப்பிவிட்டார்.
அவனோ புறப்பட்டுப் போய், இக் 45
தச் சங்கதி எங்கும் விளங்கும்படியா
கப் பிரசித்தம்பண்ணத் தொடங்கின
ன். அதினால் அவர் வெளியரங்கமாய்ப்
பட்டணத்தில் பிரவேசிக்கக்கூடாமல்,
வெளியே வனாந்தரமான இடங்களில்
தங்கியிருந்தார்; எத்திசையிலுமிருந்து
ஜனங்கள் அவரிடத்திற்கு வந்தார்கள்.
சிலநாட்களுக்குப் பின்பு அவர் மறு 2
படியும் கப்பர்நகூமுக்குப் போனார்;
அவர் வீட்டிலிருக்கிறாரென்று ஜனங்
கள் கேள்விப்பட்டு; உடனே வாசலுக் 2
குமுன்னும் நிற்க இடம் போதாதபடி
க்கு அநேகர் கூடிவந்தார்கள்; அவர்
களுக்கு வசனத்தைப் போதித்தார்.
அப்பொழுது நாலுபேர் ஒரு திமிர் 3
வாதக்காரனைச் சுமந்துகொண்டு அவரி
டத்தில் வந்தார்கள்; ஜனக்கூட்டத்தி 4
னிமித்தம் அவருக்குச் சமீபமாய்ச்
சேரக்கூடாமல், அவர் இருந்த வீட்டின்
மேற்கூரையைப் பிரித்துத் திறப்பாக்கி,
திமிர்வாதக்காரன் கிடக்கிற படுக்கை
யை இறக்கினார்கள். இயேசு அவர்கள் 5
விசுவாசத்தைக் கண்டு, திமிர்வாதக்கா
ரனை நோக்கி: மகனே, உன் பாவங்கள்
உனக்கு மன்னிக்கப்பட்டது என்றார்.
அங்கே உட்கார்ந்திருந்த வேதபார 6
கரில் சிலர்: இவன் இப்படி தேவதூ 7
ஷணம் சொல்லுகிறதென்ன? தேவன்
ஒருவரேயன்றி பாவங்களை மன்னிக்கத்
தக்கவர் யார் என்று தங்கள் இருதயங்
களில் சிந்தித்துக்கொண்டிருந்தார்கள்.
அவர்கள் தங்களுக்குள்ளே இப்படிச் 8
சிந்திக்கிறார்களென்று இயேசு உடனே
தம்முடைய ஆவியில் அறிந்து, அவர்
களை நோக்கி: நீங்கள் உங்கள் இருதய
ங்களில் இப்படிச் சிந்திக்கிறதென்ன?
உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப் 9

குடிப்பீர்கள், நான் பெறும் ஸ்நானத்
40 தையும் நீங்கள் பெறுவீர்கள். ஆனா
லும் என் வலதுபாரிசத்திலும் என்
இடதுபாரிசத்திலும் உட்கார்ந்திருக்கு
ம்படி எவர்களுக்கு ஆயத்தம்பண்ணப்
பட்டிருக்கிறதோ அவர்களுக்கேயல்லா
மல், மற்றொருவருக்கும் அதை அரு
ளுவது என் காரியமல்ல என்றார்.
41 மற்றப் பத்துப்பேரும் அதைக்
கேட்டு, யாக்கோபின்மேலும் யோவா
னின்மேலும் எரிச்சலானார்கள்.
42 அப்பொழுது, இயேசு அவர்களைக்
கிட்டவரச் செய்து: புறஜாதியாருக்கு
அதிகாரிகளாக எண்ணப்பட்டவர்கள்
அவர்களை இறுமாப்பாய் ஆளுகிறார்கள்
என்றும், அவர்களில் பெரியவர்கள்
அவர்கள்மேல் கடினமாய் அதிகாரம்
செலுத்துகிறார்கள் என்றும் நீங்கள்
43 அறிந்திருக்கிறீர்கள். உங்களுக்குள்
ளே அப்படி இருக்கலாகாது; உங்க
ளில் எவனாகிலும் பெரியவனாயிருக்க
விரும்பினால், அவன் உங்களுக்குப்
பணிவிடைக்காரனா யிருக்கக்கடவன்
44 உங்களில் எவனாகிலும் முதன்மையா
னவனாயிருக்க விரும்பினால், அவன்
எல்லாருக்கும் ஊழியக்காரனா யிருக்க
45 கடவன். அப்படியே, மனுஷகுமார
னும் ஊழியங்கொள்ளும்படி வராமல்,
ஊழியஞ்செய்யவும், அநேகரை மீட்
கும் பொருளாகத் தம்முடைய ஜீவ
னைக் கொடுக்கவும் வந்தார் என்றார்
46 பின்பு அவர்கள் எரிகோவுக்கு வந்
தார்கள். அவரும் அவருடைய சீஷர்
களும் திரளான ஜனங்களும் எரிகோ
வைவிட்டுப் புறப்படுகிறபோது, திமே
யுவின் மகனாகிய பர்திமேயு என்கிற
ஒரு குருடன், வழியருகே உட்கார்ந்து,
பிச்சை கேட்டுக்கொண்டிருந்தான்.
47 அவன் நசரேயனாகிய இயேசு வருகி
றாரென்று கேள்விப்பட்டு: இயேசுவே,
தாவீதின் குமாரனே, எனக்கு இரங்கும்
48 என்று கூப்பிடத்தொடங்கினான். அவன்
பேசாதிருக்கும்படி அநேகர் அவனை
அதட்டினார்கள். அவனோ: தாவீதின்
குமாரனே, எனக்கு இரங்கும் என்று,
முன்னிலும் அதிகமாய்க் கூப்பிட்டான்.

இயேசு நின்று, அவனை அழைத்து 49
வரச்சொன்னார். அவர்கள் அந்தக் குரு
டனை அழைத்து: திடன்கொள், எழுந்
திரு, உன்னை அழைக்கிறார் என்றார்
கள். உடனே அவன் தன் மேல்வஸ் 50
திரத்தை எறிந்துவிட்டு, எழுந்து, இயே
சுவினிடத்தில் வந்தான். இயேசு 51
அவனை நோக்கி: நான் உனக்கு என்ன
செய்யவேண்டும் என்றிருக்கிறாய் என்
றார். அதற்கு அந்தக் குருடன்: ஆண்
டவரே, நான் பார்வையடையவேண்
டும் என்றான். இயேசு அவனை நோக்கி 52
நீ போகலாம், உன் விசுவாசம் உன்னை
இரட்சித்தது என்றார். உடனே அவன்
பார்வையடைந்து, வழியிலே இயேசு
வுக்குப் பின்சென்றான்.

அவர்கள் எருசலேமுக்குச் சமீப 11
மாய்ச் சேர்ந்து, ஒலிவமலைக்கு அரு
கான பெத்பகே பெத்தானியா என்
னும் ஊர்களுக்கு வந்தபோது, அவர்
தம்முடைய சீஷரில் இரண்டுபேரை
நோக்கி: உங்களுக்கு எதிரேயிருக்கிற 2
கிராமத்துக்குப் போங்கள்; அதில் பிர
வேசித்தவுடனே, மனுஷர் ஒருவரும்
ஒருக்காலும் ஏறியிராத ஒரு கழுதைக்
குட்டி கட்டியிருக்கக் காண்பீர்கள்,
அதை அவிழ்த்துக்கொண்டு வாருங்
கள். ஏன் இப்படிச் செய்கிறீர்கள் 3
என்று ஒருவன் உங்களிடத்தில் கேட்
டால்: இது ஆண்டவருக்கு வேண்டு
மென்று சொல்லுங்கள்; உடனே அதை
இவ்விடத்திற்கு அனுப்பிவிடுவான்
என்று சொல்லி, அவர்களை அனுப்பி
னார்.

அவர்கள் போய், வெளியே இருவ 4
ழிச் சந்தியில் ஒரு வாசலருகே கட்டி
யிருந்த அந்தக் குட்டியைக் கண்டு,
அதை அவிழ்த்தார்கள். அப்பொழுது 5
அங்கே நின்றவர்களில் சிலர்: நீங்கள்
குட்டியை அவிழ்க்கிறது என்னவென்
றார்கள். இயேசு கற்பித்தபடியே அவர் 6
களுக்கு உத்தரவு சொன்னார்கள். அப்
பொழுது, அவர்களைப் போகவிட்டார்
கள். அவர்கள் அந்தக் குட்டியை இயே 7
சுவினிடத்தில் கொண்டுவந்து, அதின்
மேல் தங்கள் வஸ்திரங்களைப் போட்

டார்கள்; அவர் அதின்மேல் ஏறிப்போ
னார்.
8 அநேகர் தங்கள் வஸ்திரங்களை வழி
யிலே விரித்தார்கள்; வேறு சிலர் மரக்
கிளைகளைத் தறித்து வழியிலே பரப்பினார்
9 கள். முன்நடப்பாரும் பின்நடப்பா
ரும்: ஓசன்னா! கர்த்தரின் நாமத்தினா
லே வருகிறவர் ஸ்தோத்திரிக்கப்பட்ட
10 வர், கர்த்தரின் நாமத்தினாலே வருகிற
நம்முடைய பிதாவாகிய தாவீதின் ராஜ்
யம் ஆசீர்வதிக்கப்படுவதாக; உன்ன
தத்திலே ஓசன்னா என்று சொல்லி ஆர்ப்
பரித்தார்கள்.
11 அப்பொழுது, இயேசு எருசலே
முக்கு வந்து, தேவாலயத்தில் பிரவே
சித்து, எல்லாவற்றையும் சுற்றிப்பார்
த்து, சாயங்காலமானபோது, பன்னிரு
வரோடுங்கூடப் பெத்தானியாவுக்குப்
போனார்.
12 மறுநாளிலே அவர்கள் பெத்தானி
யாவிலிருந்து புறப்பட்டு வருகையில்,
13 அவருக்குப் பசியுண்டாயிற்று அப்
பொழுது இலைகளுள்ள ஒரு அத்திமரத்
தைத் தூரத்திலே கண்டு, அதில் ஏதா
கிலும் அகப்படுமோ என்று பார்க்கவந்
தார். அத்திப்பழக்காலமாயிராதபடி
யால், அவர் அதினிடத்தில் வந்தபோது
அதில் இலைகளையல்லாமல், வேறொன்
14 றையும் காணவில்லை. அப்பொழுது
இயேசு அதைப் பார்த்து: இதுமுதல்
ஒருக்காலும் ஒருவனும் உன்னிடத்தில்
கனியைப் புசியாதிருக்கக்கடவன் என்
றார்; அதை அவருடைய சீஷர்கள்
கேட்டார்கள்.
15 அவர்கள் எருசலேமுக்கு வந்தார்
கள்; இயேசு தேவாலயத்தில் பிரவே
சித்து, ஆலயத்தில் விற்கிறவர்களையும்
கொள்ளுகிறவர்களையும் துரத்திவிட்டு,
காசுக்காரருடைய பலகைகளையும், புறா
விற்கிறவர்களுடைய ஆசனங்களையும்
16 கவிழ்த்து, ஒருவனும் தேவாலயத்தின்
வழியாக யாதொரு பண்டத்தையும்
17 கொண்டுபோகவிடாமல்: என்னுடைய
வீடு எல்லா ஜனங்களுக்கும் ஜெபவீடு
என்னப்படும் என்று எழுதியிருக்கவில்
லையா? நீங்களோ அதைக் கள்ளர் குகை
யாக்கினீர்கள் என்று அவர்களுக்குச்
சொல்லி உபதேசித்தார்.
அதை வேதபாரகரும் பிரதான ஆசா 18
ரியரும் கேட்டு, அவரைக் கொலை
செய்ய வகைதேடினார்கள்; ஆகிலும்
ஜனங்களெல்லாரும் அவருடைய உப
தேசத்தைக்குறித்து ஆச்சரியப்பட்ட
படியினாலே அவருக்குப் பயந்திருந்தார்
கள். சாயங்காலமானபோது அவர் 19
நகரத்திலிருந்து புறப்பட்டுப் போனார்.
மறுநாள் காலையிலே அவர்கள் அவ் 20
வழியாய்ப் போகும்போது, அந்த அத்
திமரம் வேரோடே பட்டுப்போயிருக்
கிறதைக் கண்டார்கள். பேதுரு நினை 21
வுகூர்ந்து, அவரை நோக்கி: ரபீ, இதோ,
நீர் சபித்த அத்திமரம் பட்டுப்போயிற்று
என்றான்.
இயேசு அவர்களை நோக்கி: தேவனி 22
டத்தில் விசுவாசமுள்ளவர்களாயிருங்
கள். எவனாகிலும் இந்த மலையைப் 23
பார்த்து: நீ பெயர்ந்து, சமுத்திரத்திலே
தள்ளுண்டுபோ என்று சொல்லி, தான்
சொன்னபடியே நடக்கும் என்று தன்
இருதயத்தில் சந்தேகப்படாமல் விசு
வாசித்தால், அவன் சொன்னபடியே
ஆகும் என்று மெய்யாகவே உங்களுக்
குச் சொல்லுகிறேன். ஆதலால், நீங் 24
கள் ஜெபம்பண்ணும்போது எவைக
ளைக் கேட்டுக்கொள்வீர்களோ, அவை
களைப் பெற்றுக்கொள்வோம் என்று
விசுவாசியுங்கள், அப்பொழுது அவை
கள் உங்களுக்கு உண்டாகும் என்று
சொல்லுகிறேன்.
நீங்கள் நின்று ஜெபம்பண்ணும் 25
போது, ஒருவன்பேரில் உங்களுக்கு யா
தொரு குறை உண்டாயிருக்குமானால்,
பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதா
உங்கள் தப்பிதங்களை உங்களுக்கு மன்
னிக்கும்படி, அந்தக் குறையை அவ
னுக்கு மன்னியுங்கள். நீங்கள் மன் 26
னியாதிருப்பீர்களானால், பரலோகத்தி
லிருக்கிற உங்கள் பிதாவும் உங்கள்
தப்பிதங்களை மன்னியாதிருப்பார் என்
றார்.
அவர்கள் மறுபடியும் எருசலேமு 27
க்கு வந்தார்கள். அவர் தேவாலயத்

திலே உலாவிக்கொண்டிருக்கையில்,
பிரதான ஆசாரியரும் வேதபாரகரும்
28 மூப்பரும் அவரிடத்தில் வந்து: நீர்
எந்த அதிகாரத்தினால் இவைகளைச் செய்
கிறீர்? இவைகளைச் செய்கிறதற்கு அதி
காரத்தை உமக்குக் கொடுத்தவர் யார்
என்று கேட்டார்கள்.
29 இயேசு பிரதியுத்தரமாக நானும்
உங்களிடத்தில் ஒரு காரியத்தைக் கேட்
கிறேன், நீங்கள் எனக்கு உத்தரவு சொல்
லுங்கள், அப்பொழுது நானும் இன்ன
அதிகாரத்தினாலே இவைகளைச் செய்கி
றேனென்று உங்களுக்குச் சொல்லு
30 வேன். யோவான் கொடுத்த ஸ்நானம்
தேவனால் உண்டாயிற்றோ, மனுஷரால்
உண்டாயிற்றோ, எனக்கு உத்தரவு
சொல்லுங்கள் என்றார்.
31 அதற்கு அவர்கள்: தேவனால்
உண்டாயிற்றென்று சொல்வோமா
னால், பின்னை ஏன் அவனை விசுவாசிக்க
32 வில்லை யென்று கேட்பார். மனுஷரால்
உண்டாயிற்றென்று சொல்வோமா
னால், ஜனங்களுக்குப் பயப்படவேண்
டியதாயிருக்கும்; எல்லாரும் யோ
வானை மெய்யாகத் தீர்க்கதரிசியென்று
எண்ணுகிறார்களே என்று தங்களுக்
33 குள்ளே ஆலோசனைபண்ணி; இயேசு
வுக்குப் பிரதியுத்தரமாக: எங்களுக்குத்
தெரியாது என்றார்கள். அப்பொழுது
இயேசு: நானும் இன்ன அதிகாரத்தி
னாலே இவைகளைச் செய்கிறேன் என்று
உங்களுக்குச் சொல்லேன் என்றார்.
12 பின்பு அவர் உவமைகளாய் அவர்
களுக்குச் சொல்லத் தொடங்கினதா
வது: ஒரு மனுஷன் ஒரு திராட்சத்
தோட்டத்தை உண்டாக்கி, அதைச்
சுற்றிலும் வேலியடைத்து, இரசத்
தொட்டியை உண்டுபண்ணி, கோபுரத்
தையும் கட்டி, தோட்டக்காரருக்கு
அதைக் குத்தகையாக விட்டு, புறத்
2 தேசத்துக்குப் போயிருந்தான். தோட்
டக்காரரிடத்தில் திராட்சத்தோட்டத்
துக் கனிகளில் தன் பாகத்தை வாங்கிக்
கொண்டு வரும்படி பருவகாலத்திலே
அவர்களிடத்தில் ஒரு ஊழியக்காரனை
3 அனுப்பினான். அவர்கள் அவனைப்
பிடித்து, அடித்து, வெறுமையாய்
அனுப்பிவிட்டார்கள். பின்பு வேறொரு 4
ஊழியக்காரனை அவர்களிடத்தில் அனுப்
பினான்; அவர்கள் அவன்மேல் கல்லெ
றிந்து, தலையிலே காயப்படுத்தி, அவமா
னப்படுத்தி, அனுப்பிவிட்டார்கள். மறு 5
படியும் வேறொருவனை அனுப்பினான்;
அவனை அவர்கள் கொலைசெய்தார்கள்
வேறு அநேகரையும் அனுப்பினான்;
அவர்களில் சிலரை அடித்து, சிலரைக்
கொன்றுபோட்டார்கள். அவனுக்குப் 6
பிரியமான ஒரே குமாரன் இருந்தான்:
என் குமாரனுக்கு அஞ்சுவார்களென்று
சொல்லி, அவனையும் கடைசியிலே
அவர்களிடத்தில் அனுப்பினான். தோட் 7
டக்காரரோ: இவன் சுதந்தரவாளி,
இவனைக் கொலைசெய்வோம் வாருங்
கள்; அப்பொழுது சுதந்தரம் நம்மு
டையதாகும் என்று ஒருவரோடொரு
வர் சொல்லிக்கொண்டு; அவனைப் பிடித் 8
துக் கொலைசெய்து, திராட்சத்தோட்டத்
துக்குப் புறம்பே போட்டுவிட்டார்கள்.
அப்படியிருக்க, திராட்சத்தோட்டத்து 9
க்கு எஜமான் என்னசெய்வான்? அவன்
வந்து அந்தத் தோட்டக்காரரைச் சங்
கரித்து திராட்சத்தோட்டத்தை மற்ற
வர்களுக்கு ஒப்புக்கொடுப்பான் அல்
லவா? வீடுகட்டுகிறவர்கள் ஆகாதென்று 10
தள்ளின கல்லே மூலைக்குத் தலைக்கல்
லாயிற்று; அது கர்த்தராலே ஆயிற்று, 11
அது நம்முடைய கண்களுக்கு ஆச்சரி
யமாயிருக்கிறது என்று எழுதியிருக்
கிற வாக்கியத்தை நீங்கள் வாசிக்கவில்
லையா என்றார்.
இந்த உவமையைத் தங்களைக்குறித் 12
துச் சொன்னாரென்று அவர்கள் அறி
ந்து, அவரைப் பிடிக்க வகைதேடினார்
கள்; ஆனாலும் ஜனத்துக்குப் பயந்து,
அவரை விட்டுப் போய்விட்டார்கள்.
அவர்கள், பேச்சிலே அவரை அகப் 13
படுத்தும்படிக்கு, பரிசேயரிலும் ஏரோ
தியரிலும் சிலரை அவரிடத்தில் அனுப்
பினார்கள். அவர்கள் வந்து: போத 14
கரே, நீர் சத்தியமுள்ளவரென்றும்,
எவனைக்குறித்தும் உமக்குக் கவலையில்
லையென்றும் அறிந்திருக்கிறோம், நீர்

முகதாட்சிணியம் இல்லாதவராய்தேவ
னுடைய மார்க்கத்தைச் சத்தியமாய்ப்
போதிக்கிறீர், இராயனுக்கு வரிகொடுக்
கிறது நியாயமோ அல்லவோ? நாம்
கொடுக்கலாமோ, கொடுக்கக்கூடா
தோ? என்று கேட்டார்கள்.
15 அவர்களுடைய மாயத்தை அவர்
அறிந்து: நீங்கள் என்னை ஏன் சோதிக்
கிறீர்கள்? நான் பார்க்கும்படிக்கு ஒரு
பணத்தை என்னிடத்தில் கொண்டுவா
16 ருங்கள் என்றார். அவர்கள் அதைக்
கொண்டுவந்தார்கள். அப்பொழுது
அவர்: இந்தச் சுரூபமும் மேலெழுத்
தும் யாருடையது என்று கேட்டார்;
17 இராயனுடையது என்றார்கள். அத
ற்கு இயேசு: இராயனுடையதை இரா
யனுக்கும், தேவனுடையதை தேவ
னுக்கும் செலுத்துங்கள் என்றார். அவர்
கள் அவரைக்குறித்து ஆச்சரியப்பட்
டார்கள்.
18 உயிர்த்தெழுதல் இல்லையென்று
சாதிக்கிற சதுசேயர் அவரிடத்தில்
19 வந்து: போதகரே, ஒருவனுடைய
சகோதரன் சந்தானமில்லாமல் தன்
மனைவியை விட்டு இறந்துபோனால்,
அவனுடைய சகோதரன் அவன் மனை
வியை விவாகம்பண்ணி, தன் சகோதர
னுக்குச் சந்தானம் உண்டாக்கவேண்டு
மென்று மோசே எங்களுக்கு எழுதி
20 வைத்திருக்கிறாரே. இப்படியிருக்க, ஏழு
பேர் சகோதரர் இருந்தார்கள்; மூத்த
வன் ஒரு பெண்ணை விவாகம்பண்ணி,
சந்தானமில்லாமல் இறந்துபோனான்.
21 இரண்டாம் சகோதரன் அவளை
விவாகம்பண்ணி, அவனும் சந்தான
மில்லாமல் இறந்துபோனான். மூன்
றாம் சகோதரனும் அப்படியேயானான்
22 ஏழுபேரும் அவளை விவாகம்பண்ணி,
சந்தானமில்லாமல் இறந்துபோனார்
கள், எல்லாருக்கும் பின்பு அந்த ஸ்திரீ
23 யும் இறந்துபோனாள். ஆகையால்,
உயிர்த்தெழுதலில், அவர்கள் எழுந்தி
ருக்கும்போது, அவர்களில் எவனுக்கு
அவள் மனைவியாயிருப்பாள்? ஏழு
பேரும் அவளை மனைவியாகக்கொண்டி
ருந்தார்களே என்று கேட்டார்கள்.

இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தர 24
மாக: நீங்கள் வேதவாக்கியங்களையும்,
தேவனுடைய வல்லமையையும் அறி
யாததினாலல்லவா தப்பான எண்ணங்
கொள்ளுகிறீர்கள்? மரித்தோர் உயிரோ 25
டெழுந்திருக்கும்போது கொள்வனையும்
கொடுப்பனையும் இல்லை அவர்கள் பர
லோகத்தில் இருக்கிற தேவதூதரைப்
போலிருப்பார்கள். மரித்தோர் எழுந் 26
திருப்பதைப்பற்றி: நான் ஆபிரகாமின்
தேவனும், ஈசாக்கின் தேவனும், யாக்
கோபின் தேவனுமாய் இருக்கிறேன்
என்று, தேவன் முட்செடியைக்குறித்
துச் சொல்லிய இடத்தில், மோசேயின்
ஆகமத்தில் அவனுக்குச் சொன்னதை,
நீங்கள் வாசிக்கவில்லையா? அவர் மரித் 27
தோருக்கு தேவனாயிராமல், ஜீவனுள்
ளோருக்கு தேவனாயிருக்கிறார்; ஆகை
யால் நீங்கள் மிகவும் தப்பான எண்
ணங்கொள்ளுகிறீர்கள் என்றார்
வேதபாரகரில் ஒருவன் அவர்கள் 28
தர்க்கம்பண்ணுகிறதைக் கேட்டு, அவர்
களுக்கு நன்றாய் உத்தரவு சொன்னா
ரென்று அறிந்து, அவரிடத்தில் வந்து:
கற்பனைகளிலெல்லாம் பிரதான கற்பனை
எதுவென்று கேட்டான்.
இயேசு அவனுக்குப் பிரதியுத்தர 29
மாக: கற்பனைகளிலெல்லாம் பிரதான
கற்பனை எதுவென்றால், இஸ்ரவேலே
கேள், நம்முடைய தேவனாகிய கர்த்தர்
ஒருவரே கர்த்தர். உன் தேவனாகிய 30
கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்
தோடும், உன் முழு ஆத்துமாவோடும்,
உன் முழு மனதோடும், உன் முழுப்
பலத்தோடும் அன்புகூருவாயாக என்
பதே பிரதான கற்பனை. இதற்கு ஒப் 31
பாயிருக்கிற இரண்டாம் கற்பனை என்
னவென்றால்: உன்னிடத்தில் நீ அன்பு
கூருவதுபோல் பிறனிடத்திலும் அன்பு
கூருவாயாக என்பதே; இவைகளிலும்
பெரிய கற்பனை வேறொன்றுமில்லை
என்றார்.
அதற்கு வேதபாரகன்: சரிதான், 32
போதகரே, நீர் சொன்னது சத்தியம்;
ஒரே தேவன் உண்டு, அவரைத்தவிர
வேறொரு தேவன் இல்லை. முழு இரு 33

தயத்தோடும், முழு மனதோடும், முழு
ஆத்துமாவோடும், முழுப் பலத்தோ
டும் அவரிடத்தில் அன்புகூருகிறதும்,
தன்னிடத்தில் அன்புகூருகிறதுபோல்
பிறனிடத்தில் அன்புகூருகிறதுமே சர்
வாங்கதகனம் முதலிய பலிகளைப்பார்க்
கிலும் முக்கியமாயிருக்கிறது என்றான்.
34 அவன் விவேகமாய் உத்தரவு சொன்
னதை இயேசு கண்டு: நீ தேவனுடைய
ராஜ்யத்துக்குத் தூரமானவனல்ல என்
றார்..

அதன்பின்பு ஒருவரும் அவரிடத்
தில் யாதொரு கேள்வியுங் கேட்கத்
துணியவில்லை.

35 இயேசு தேவாலயத்திலே உபதேசம்
பண்ணுகையில், அவர். கிறிஸ்து தாவீ
தின் குமாரனென்று வேதபாரகர் எப்ப
36 டிச் சொல்லுகிறார்கள்? நான் உம்மு
டைய சத்துருக்களை உமக்குப் பாதபடி
யாக்கிப் போடும்வரைக்கும் நீர் என்னு
டைய வலதுபாரிசத்தில் உட்காரும்
என்று கர்த்தர் என் ஆண்டவரோடே
சொன்னார் என்று தாவீது பரிசுத்த
ஆவியினாலே சொல்லியிருக்கிறானே
37 தாவீதுதானே அவரை ஆண்டவரென்று
சொல்லியிருக்க, அவனுக்கு அவர்
குமாரனாயிருப்பது எப்படி என்றார்
அநேக ஜனங்கள் அவருடைய உப
தேசத்தை விருப்பத்தோடே கேட்டார்
கள்.

38 பின்னும் அவர் உபதேசம் பண்ணு
கையில் அவர்களை நோக்கி: நீண்ட அங்
கிகளைத் தரித்துக்கொண்டு திரியவும்,
சந்தைவெளிகளில்வந்தனங்களை அடை
39 யவும், ஜெபஆலயங்களில் முதன்மை
யான ஆசனங்களில் உட்காரவும், விரு
ந்துகளில் முதன்மையான இடங்க
40 ளில் இருக்கவும் விரும்பி, விதவைக
ளின் வீடுகளைப் பட்சித்து, பார்வைக்கு
நீண்ட ஜெபம்பண்ணுகிற வேதபாரக
ரைக்குறித்து எச்சரிக்கையாயிருங்
கள்; அவர்கள் அதிக ஆக்கினையை
அடைவார்கள் என்றார்.

41 இயேசு காணிக்கைப்பெட்டிக்கு எதி
ராக உட்கார்ந்து, ஜனங்கள் காணிக்
கைப்பெட்டியில்பணம்போடுகிறதைப்
பார்த்துக்கொண்டிருந்தார்; ஐசுவரிய
வான்கள் அநேகர் அதிகமாய்ப் போட்
டார்கள். ஏழையான ஒரு விதவையும் 42
வந்து, ஒரு துட்டுக்குச் சரியான
இரண்டு காசைப் போட்டாள். அப் 43
பொழுது அவர் தம்முடைய சீஷரை
அழைத்து, காணிக்கைப்பெட்டியில்
பணம்போட்ட மற்றெல்லாரைப்பார்க்
கிலும் இந்த ஏழை விதவை அதிக
மாய்ப் போட்டாள் என்று மெய்யா
கவே உங்களுக்குச் சொல்லுகிறேன்;
அவர்களெல்லாரும் தங்கள் பரிபூர 44
ணத்திலிருந்தெடுத்துப் போட்டார்கள்;
இவளோ தன் வறுமையிலிருந்து தன்
ஜீவனத்துக்கு உண்டாயிருந்ததெல்
லாம் போட்டுவிட்டாள் என்றார்.

அவர் தேவாலயத்தை விட்டுப் புறப் 13
படும்போது, அவருடைய சீஷர்களில்
ஒருவன் அவரை நோக்கி: போதகரே,
இதோ, இந்தக் கல்லுகள் எப்படிப்பட்
டது! இந்தக் கட்டடங்கள் எப்படிப்
பட்டது? பாரும் என்றான். இயேசு 2
அவனுக்குப் பிரதியுத்தரமாக: இந்தப்
பெரிய கட்டடங்களைக் காண்கிறாயே,
ஒரு கல்லின்மேல் ஒரு கல்லிராத
படிக்கு எல்லாம் இடிக்கப்பட்டுப்
போகும் என்றார்.

பின்பு, அவர் தேவாலயத்துக்கு எதி 3
ராக ஒலிவமலையின்மேல் உட்கார்ந்தி
ருக்கையில், பேதுருவும் யாக்கோபும்
யோவானும் அந்திரேயாவும் அவரிடத்
தில் தனித்துவந்து: இவைகள் எப்பொ 4
ழுது சம்பவிக்கும்? இவைகளெல்லாம்
நிறைவேறுங் காலத்துக்கு அடையா
ளம் என்ன? எங்களுக்குச் சொல்ல
வேண்டும் என்றார்கள்.

இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தர 5
மாக: ஒருவனும் உங்களை வஞ்சியாத
படிக்கு எச்சரிக்கையாயிருங்கள்.

ஏனெனில் அநேகர் வந்து, என் 6
நாமத்தைக்கொண்டு: நானே கிறிஸ்து
என்று சொல்லி, அநேகரை வஞ்சிப்
பார்கள். யுத்தங்களையும் யுத்தங்களின் 7
செய்திகளையும் கேள்விப்படும்போது
கலங்காதேயுங்கள்; இவைகள் சம்ப
விக்கவேண்டியதே. ஆனாலும், முடிவு

8 உடனே வராது. ஜனத்துக்கு விரோத
மாய் ஜனமும், ராஜ்யத்துக்கு விரோத
மாய் ராஜ்யமும் எழும்பும்; பூமியதிர்ச்
சிகளும் பல இடங்களில் உண்டாகும்,
பஞ்சங்களும் கலகங்களும் உண்டா
கும்; இவைகள் வேதனைகளுக்கு ஆரம்
பம்.
9 நீங்களோ எச்சரிக்கையாயிருங்கள்,
ஏனெனில் உங்களை ஆலோசனைச் சங்
கங்களுக்கு ஒப்புக்கொடுப்பார்கள், நீங்
கள் ஜெபஆலயங்களில் அடிக்கப்படு
வீர்கள்; என்னிமித்தம் தேசாதிபதிக
ளுக்கும் ராஜாக்களுக்கும் சாட்சியாக
அவர்களுக்கு முன்பாக நிறுத்தப்படு
10 வீர்கள். சகல ஜாதிகளுக்கும் சுவிசே
ஷம் முந்திப் பிரசங்கிக்கப்படவேண்
11 டும். அவர்கள் உங்களைக் கொண்டு
போய் ஒப்புக்கொடுக்கும்போது, நீங்
கள் என்ன பேசுவோமென்று முன்ன
தாகக் கவலைப்படாமலும் சிந்தியாமலு
மிருங்கள்; அந்நாழிகையிலே உங்க
ளுக்கு எது அருள் செய்யப்படுமோ
அதையே பேசுங்கள்; ஏனெனில் பேசு
கிறவர்கள் நீங்களல்ல, பரிசுத்தஆவியே
பேசுகிறவர்.
12 அன்றியும் சகோதரன் சகோதரனை
யும், தகப்பன் பிள்ளையையும் மரணத்
துக்கு ஒப்புக்கொடுப்பார்கள்; பெற்றா
ருக்கு விரோதமாகப் பிள்ளைகள்
எழும்பி, அவர்களைக் கொலைசெய்வார்
13 கள் என் நாமத்தினிமித்தம் எல்லா
ராலும் பகைக்கப்படுவீர்கள். முடிவு
பரியந்தம் நிலைநிற்பவனே இரட்சிக்கப்
படுவான்.
14 மேலும் பாழாக்குகிற அருவருப்
பைக்குறித்துத் தானியேல் தீர்க்கதரிசி
சொல்லியிருக்கிறானே; வாசிக்கிறவன்
சிந்திக்கக்கடவன்; அது நிற்கத்தகாத
இடத்திலே நீங்கள் அதை நிற்கக் கா
ணும்போது, யூதேயாவில் இருக்கிறவர்
கள் மலைகளுக்கு ஓடிப்போகக்கடவர்
15 கள். வீட்டின்மேல் இருக்கிறவன் தன்
வீட்டுக்குள் இறங்காமலும், தன் வீட்
டில் எதையாகிலும் எடுத்துக்கொள்ள
உள்ளே போகாமலும் இருக்கக்கட
16 வன். வயலில் இருக்கிறவன் தன் வஸ்
திரத்தை எடுப்பதற்குப் பின்னிட்டுத்
திரும்பாதிருக்கக்கடவன்.
அந்நாட்களிலே கர்ப்பவதிகளுக்கும் 17
பால் கொடுக்கிறவர்களுக்கும் ஐயோ!
நீங்கள் ஓடிப்போவது மாரிகாலத்திலே 18
சம்பவியாதபடிக்கு வேண்டிக்கொள்
ளுங்கள். ஏனெனில் தேவன் உலகத் 19
தைச் சிருஷ்டித்ததுமுதல் இதுவரைக்
கும் சம்பவித்திராததும், இனிமேலும்
சம்பவியாததுமான உபத்திரவம் அந்
நாட்களில் உண்டாயிருக்கும். கர்த்தர் 20
அந்நாட்களைக் குறைத்திராவிட்டால்,
ஒருவனாகிலும் தப்பிப்போவதில்லை;
தாம் தெரிந்துகொண்டவர்களினிமித்
தமோ, அவர் அந்த நாட்களைக் குறைத்
திருக்கிறார்.
அப்பொழுது: இதோ, கிறிஸ்து இங் 21
கே இருக்கிறார், அதோ, அங்கேயிருக்
கிறார் என்று எவனாகிலும் சொன்னால்,
நம்பாதேயுங்கள். ஏனெனில் கள்ளக் 22
கிறிஸ்துக்களும் கள்ளத் தீர்க்கதரிசி
களும் எழும்பி, கூடுமானால் தெரிந்து
கொள்ளப்பட்டவர்களையும் வஞ்சிக்கத்
தக்கதாக அடையாளங்களையும் அற்
புதங்களையும் செய்வார்கள். நீங்களோ 23
எச்சரிக்கையாயிருங்கள்; இதோ, எல்
லாவற்றையும் முன்னதாக உங்களுக்கு
அறிவித்திருக்கிறேன்.
அந்நாட்களிலே, அந்த உபத்திரவத் 24
திற்குப் பின்பு, சூரியன் அந்தகாரப்
படும், சந்திரன் ஒளியைக் கொடாதிருக்
கும்; வானத்தின் நட்சத்திரங்கள் 25
விழும், வானங்களிலுள்ள சத்துவங்க
ளும் அசைக்கப்படும். அப்பொழுது 26
மனுஷகுமாரன் மிகுந்த வல்லமையோ
டும் மகிமையோடும் மேகங்களின்மேல்
வருகிறதைக் காண்பார்கள். அப்பொ 27
ழுது அவர் தம்முடைய தூதரை
அனுப்பி, தாம் தெரிந்துகொண்டவர்
களை பூமியின் கடைமுனை முதற்கொ
ண்டு, வானத்தின் கடைமுனை மட்டு
முள்ள நாலு திசைகளிலுமிருந்து கூட்
டிச் சேர்ப்பார்.
அத்திமரத்தினால் ஒரு உவமையைக் 28
கற்றுக்கொள்ளுங்கள்; அதிலே இளங்
கிளை தோன்றி, துளிர்விடும்போது,

வசந்தகாலம் சமீபமாயிற்று என்று
29 அறிவீர்கள். அப்படியே இவைகள்
சம்பவிக்கிறதை நீங்கள் காணும்போது,
அவர் சமீபமாய் வாசலருகே வந்திருக
30 கிறார் என்று அறியுங்கள். இவைக
ளெல்லாம் சம்பவிக்குமுன்னே இந்தச்
சந்ததி ஒழிந்துபோகாதென்று, மெய்யா
கவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.
31 வானமும் பூமியும் ஒழிந்துபோம், என்
வார்த்தைகளோ ஒழிந்துபோவதில்லை.
32 அந்த நாளையும் அந்த நாழிகையை
யும் பிதா ஒருவர்தவிர மற்றொருவனும்
அறியான், பரலோகத்திலுள்ள தூதர்க
ளும் அறியார்கள், குமாரனும் அறியார்.
33 அக்காலத்தை நீங்கள் அறியாதபடி
யால் எச்சரிக்கையாயிருங்கள், விழித்
34 திருந்து ஜெபம்பண்ணுங்கள் ஒரு மனு
ஷன் தன் வீட்டைவிட்டு, புறத்தேசத்
துக்குப் பிரயாணம் போக எத்தனிக்
கும்போது, தன் ஊழியக்காரருக்கு அதி
காரம் கொடுத்து, அவனவனுக்குத் தன்
தன் வேலையையும் நியமித்து, விழித்
திருக்கும்படிக்குக் காவல் காக்கிறவ
35 னுக்குக் கற்பிப்பான். அப்படியே நீங்
களும் விழித்திருங்கள்; ஏனெனில்,
வீட்டெஜமான் சாயங்காலத்திலோ, நடு
ராத்திரியிலோ, சேவல் கூவும் நேரத்
திலோ, காலையிலோ, எப்பொழுது வரு
36 வான் என்று நீங்கள் அறியீர்கள். நீங்
கள் நினையாதவேளையில் அவன் வந்து
உங்களைத் தூங்குகிறவர்களாகக் கண்டு
37 பிடியாதபடிக்கு விழித்திருங்கள். நான்
உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லா
ருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்
கள் என்றார்.

14 இரண்டுநாளைக்குப் பின்பு புளிப்பில்
லாத அப்பஞ்சாப்பிடுகிற பஸ்கா பண்
டிகை வந்தது. அப்பொழுது பிரதான
ஆசாரியரும் வேதபாரகரும், அவரைத்
தந்திரமாய்ப் பிடித்துக் கொலைசெய்யும்
2 படி வகை தேடினார்கள். ஆகிலும்
ஜனங்களுக்குள்ளே கலகம் உண்டா
காதபடிக்கு, பண்டிகையிலே அப்படிச்
செய்யலாகாது என்றார்கள்.
3 அவர் பெத்தானியாவில் குஷ்டரோ
கியாயிருந்த சீமோன் வீட்டிலே போ
ஜனபந்தியிருக்கையில், ஒரு ஸ்திரீ விலை
யேறப்பெற்ற நளதம் என்னும் உத்தம
தைலமுள்ள வெள்ளைக்கல் பரணியைக்
கொண்டுவந்து, அதை உடைத்து, அந்
தத் தைலத்தை அவர் சிரசின்மேல் ஊற்
றினாள். அப்பொழுது சிலர் தங்களுக் 4
குள்ளே விசனமடைந்து: இந்தத் தைல
த்தை இப்படி வீணாய்ச் செலவழிப்பா
னேன்? இதை முந்நூறு பணத்துக்கு 5
அதிகமான கிரயத்துக்கு விற்று, தரித்
திரருக்குக் கொடுக்கலாமே என்று
சொல்லி, அவளைக்குறித்து முறுமுறுத்
தார்கள்.
இயேசு அவர்களை நோக்கி: அவளை 6
விட்டுவிடுங்கள்; ஏன் அவளைத் தொந்
தரவு படுத்துகிறீர்கள்? என்னிடத்தில்
நற்கிரியையைச் செய்திருக்கிறாள்.
தரித்திரர் எப்போதும் உங்களிடத்தில் 7
இருக்கிறார்கள், உங்களுக்கு மனதுண்
டாகும்போதெல்லாம் நீங்கள் அவர்க
ளுக்கு நன்மைசெய்யலாம், நானோ எப்
போதும் உங்களிடத்தில் இரேன். இ 8
வள் தன்னால் இயன்றதைச் செய்தாள்;
நான அடக்கம்பண்ணப்படுவதற்கு எத்
தனமாக, என் சரீரத்தில் தைலம் பூச
முந்திக்கொண்டாள். இந்தச் சுவிசே 9
ஷம் உலகத்தில் எங்கெங்கே பிரசங்கிக்
கப்படுமோ அங்கங்கே இவளை நினைப்ப
தற்காக இவள் செய்ததும் சொல்லப்
படும் என்று மெய்யாகவே உங்களுக்
குச் சொல்லுகிறேன் என்றார்.
அப்பொழுது, பன்னிருவரில் ஒருவ 10
னாகிய யூதாஸ்காரியோத்து என்பவன்
அவரைப் பிரதான ஆசாரியருக்குக்
காட்டிக்கொடுக்கும்படி அவர்களிடத்
திற்குப் போனான். அவர்கள் அதைக் 11
கேட்டு, சந்தோஷப்பட்டு, அவனுக்குப்
பணங்கொடுப்போம் என்று வாக்குத்
தத்தம்பண்ணினார்கள்; அவன் அவரைக்
காட்டிக்கொடுப்பதற்குத் தகுந்த சம
யம் பார்த்துக்கொண்டிருந்தான்.
பஸ்காவைப் பலியிடும் நாளாகிய 12
புளிப்பில்லாத அப்பஞ்சாப்பிடுகிற முத
லாம் நாளிலே அவருடைய சீஷர்கள்
அவரிடத்தில் வந்து: நீர் பஸ்காவைப்
புசிப்பதற்கு நாங்கள் எங்கே போய்

ஆயத்தம்பண்ணச் சித்தமாயிருக்கிறீர்
13 என்று கேட்டார்கள். அவர் தம்மு
டைய சீஷரில் இரண்டுபேரை நோக்கி:
நீங்கள் நகரத்திற்குள்ளே போங்கள்,
அங்கே தண்ணீர்க்குடம் சுமந்துவரு
கிற ஒரு மனுஷன் உங்களுக்கு எதிர்ப்
படுவான், அவன் பின்னே போங்கள்;
14 அவன் எந்த வீட்டிற்குள் பிரவேசிக்கி
றானோ அந்த வீட்டு எஜமானை நீங்கள்
நோக்கி: நான் என் சீஷரோடுகூடப்
பஸ்காவைப் புசிக்கிறதற்குத் தகுதியான
இடம் எங்கேயென்று போதகர் கேட்
15 கிறார் என்று சொல்லுங்கள். அவன்
கம்பளம் முதலானவைகள் விரித்து
ஆயத்தம் பண்ணப்பட்டிருக்கிற விஸ்
தாரமான மேல்வீட்டறையை உங்க
ளுக்குக் காண்பிப்பான்; அங்கே நமக்
காக ஆயத்தம்பண்ணுங்கள் என்று
சொல்லி அனுப்பினார்.
16 அப்படியே, அவருடைய சீஷர் புறப்
பட்டு நகரத்தில் போய், தங்களுக்கு
அவர் சொன்னபடியே கண்டு, பஸ்கா
வை ஆயத்தம்பண்ணினார்கள்.
17 சாயங்காலமானபோது, அவர் பன்
னிருவரோடுங்கூட அவ்விடத்திற்கு வந்
18 தார். அவர்கள் பந்தியமர்ந்து போஜ
னம்பண்ணுகையில், இயேசு அவர்களை
நோக்கி: என்னுடனே புசிக்கிற உங்க
ளில் ஒருவன் என்னைக் காட்டிக்கொடுப்
பான் என்று, மெய்யாகவே உங்களுக்
19 குச் சொல்லுகிறேன் என்றார். அப்
பொழுது அவர்கள் துக்கமடைந்து:
நானோ? நானோ? என்று ஒவ்வொருவ
ரும், அவரிடத்தில் கேட்கத்தொடங்கி
20 னார்கள். அவர் பிரதியுத்தரமாக: என்
னுடனேகூடத் தாலத்தில் கையிடுகிறவ
னாகிய பன்னிருவரில் ஒருவனே அவன்
21 என்று சொல்லி; மனுஷகுமாரன் தம்
மைக்குறித்து எழுதியிருக்கிறபடியே
போகிறார்; ஆகிலும், எந்த மனுஷனால்
மனுஷகுமாரன் காட்டிக்கொடுக்கப்படு
கிறாரோ, அந்த மனுஷனுக்கு ஐயோ!
அந்த மனுஷன் பிறவாதிருந்தானானால்
அவனுக்கு நலமாயிருக்கும் என்றார்.
22 அவர்கள் போஜனம்பண்ணுகையில்,
இயேசு அப்பத்தை எடுத்து ஆசீர்
வதித்து, அதைப் பிட்டு, அவர்களுக்குக்
கொடுத்து: நீங்கள் வாங்கிப் புசியுங்
கள், இது என்னுடைய சரீரமாயிருக்
கிறது என்றார். பின்பு, பாத்திரத்தை 23
யும் எடுத்து, ஸ்தோத்திரம்பண்ணி,
அதை அவர்களுக்குக் கொடுத்தார்.
அவர்களெல்லாரும் அதிலே பானம்
பண்ணினார்கள். அப்பொழுது அவர் 24
அவர்களை நோக்கி: இது அநேகருக்கா
கச் சிந்தப்படுகிற புது உடன்படிக்கைக்
குரிய என்னுடைய இரத்தமாயிருக்
கிறது. நான் தேவனுடைய ராஜ்யத் 25
தில் நவமான ரசத்தைப் பானம்பண்
ணும் நாள்வரைக்கும் திராட்சப்பழ
ரசத்தை இனி நான் பானம்பண்ணுவ
தில்லையென்று மெய்யாகவே உங்களுக்
குச் சொல்லுகிறேன் என்றார்.
அவர்கள் ஸ்தோத்திரப்பாட்டைப் 26
பாடினபின்பு, ஒலிவமலைக்குப் புறப்
பட்டுப் போனார்கள். அப்பொழுது, 27
இயேசு அவர்களை நோக்கி: மேய்ப்பனை
வெட்டுவேன், ஆடுகள் சிதறடிக்கப்
படும், என்று எழுதியிருக்கிறபடி, இந்த
இராத்திரியிலே நீங்களெல்லாரும் என்
னிமித்தம் இடறலடைவீர்கள். ஆகி 28
லும் நான் உயிர்த்தெழுந்தபின்பு, உங்
களுக்கு முன்னே கலிலேயாவுக்குப்
போவேன் என்றார்.
அதற்குப் பேதுரு: உமது நிமித்தம் 29
எல்லாரும் இடறலடைந்தாலும், நான்
இடறலடையேன் என்றான். இயேசு 30
அவனை நோக்கி: இன்றைக்கு, இந்த
இராத்திரியிலே, சேவல் இரண்டுதரம்
கூவுகிறதற்கு முன்னே, நீ மூன்றுதரம்
என்னை மறுதலிப்பாய் என்று மெய்யா
கவே உனக்குச் சொல்லுகிறேன் என்
றார். அதற்கு அவன்: நான் உம்மோ 31
டே மரிக்கவேண்டியதாயிருந்தாலும்
உம்மை மறுதலிக்கமாட்டேன் என்று
உறுதியாய்ச் சொன்னான்; எல்லாரும்
அப்படியே சொன்னார்கள்.
பின்பு கெத்செமனே என்னப்பட்ட 32
இடத்திற்கு வந்தார்கள். அப்பொழுது
அவர் தம்முடைய சீஷர்களை நோக்கி:
நான் ஜெபம்பண்ணுமளவும் இங்கே
உட்கார்ந்திருங்கள் என்று சொல்லி;

33 பேதுருவையும் யாக்கோபையும் யோ
வானையும் தம்மோடே கூட்டிக்கொ
ண்டுபோய், திகிலடையவும், மிகவும்
34 வியாகுலப்படவும் தொடங்கினார். அப்
பொழுது அவர் என் ஆத்துமா மரணத்
துக்கேதுவான துக்கங்கொண்டிருக்கி
றது; நீங்கள் இங்கே தங்கி, விழித்திருங்
35 கள் என்று சொல்லி, சற்று அப்புறம்
போய், தரையிலே விழுந்து, அந்த வேளை
தம்மை விட்டு நீங்கிப்போகக் கூடுமா
னால் அது நீங்கவேண்டுமென்று வேண்
36 டிக்கொண்டு: அப்பா பிதாவே, எல்
லாம் உம்மாலே கூடும்; இந்தப் பாத்
திரத்தை என்னிடத்திலிருந்து எடுத்துப்
போடும், ஆகிலும் என் சித்தத்தின்படி
யல்ல, உம்முடைய சித்தத்தின்படியே
37 ஆகக்கடவது என்றார். பின்பு அவர்
வந்து, அவர்கள் நித்திரை பண்ணுகிற
தைக் கண்டு, பேதுருவை நோக்கி:
சீமோனே, நித்திரை பண்ணுகிறாயா?
ஒரு மணிநேரம் நீ விழித்திருக்கக்கூடா
38 தா? நீங்கள் சோதனைக் குட்படாத
படிக்கு விழித்திருந்து ஜெபம்பண்ணுங்
கள், ஆவி உற்சாகமுள்ளதுதான், மாம்
சமோ பலவீனமுள்ளது என்றார்.
39 அவர் மறுபடியும் போய் அந்த
வார்த்தைகளையே சொல்லி ஜெபம்பண்
40 ணினார். அவர் திரும்ப வந்தபோது,
அவர்கள் மறுபடியும் நித்திரை பண்ணு
கிறதைக் கண்டார்; அவர்களுடைய
கண்கள் மிகுந்த நித்திரைமயக்கம்
அடைந்திருந்தபடியால், தாங்கள் மறு
மொழியாக அவருக்குச் சொல்வது
இன்னதென்று அறியாதிருந்தார்கள்.
41 அவர் மூன்றாந்தரம் வந்து: இனி நித்
திரைபண்ணி இளைப்பாறுங்கள்; போ
தும், வேளைவந்தது, இதோ, மனுஷ
குமாரன் பாவிகளுடைய கைகளில் ஒப்
42 புக்கொடுக்கப்படுகிறார். என்னைக் காட்
டிக்கொடுக்கிறவன், இதோ, வந்துவிட்
டான், எழுந்திருங்கள், போவோம்
என்றார்.
43 உடனே, அவர் இப்படிப் பேசுகை
யில், பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ்
வந்தான்; அவனோடேகூடப் பிரதான
ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும்
அனுப்பின திரளான ஜனங்கள், பட்ட
யங்களையும் தடிகளையும் பிடித்துக்கொ
ண்டு வந்தார்கள். அவனைக் காட்டிக் 44
கொடுக்கிறவன்: நான் எவனை முத்தஞ்
செய்வேனோ அவன்தான், அவனைப்
பிடித்துப் பத்திரமாய்க் கொண்டுபோங்
கள் என்று அவர்களுக்குக் குறிப்புச்
சொல்லியிருந்தான். அவன் வந்தவுட 45
னே, அவரண்டையில் சேர்ந்து: ரபீ,
ரபீ, என்று சொல்லி, அவரை முத்தஞ்
செய்தான். அப்பொழுது அவர்கள் 46
அவர்மேல் கைபோட்டு, அவரைப்
பிடித்தார்கள்.
அப்பொழுது கூட நின்றவர்களில் 47
ஒருவன் கத்தியை உருவி, பிரதான
ஆசாரியனுடைய வேலைக்காரனைக் கா
தற வெட்டினான்.
இயேசு அவர்களை நோக்கி: கள்ள 48
னைப் பிடிக்கப் புறப்படுகிறதுபோல,
நீங்கள் பட்டயங்களையும் தடிகளையும்
எடுத்துக்கொண்டு என்னைப் பிடிக்கவந்
தீர்கள்; நான் தினந்தோறும் உங்கள் 49
நடுவிலே தேவாலயத்தில் உபதேசம்
பண்ணிக்கொண்டிருந்தேன்; அப்பொ
ழுது நீங்கள் என்னைப் பிடிக்கவில்லை
யே; ஆனாலும் வேதவாக்கியங்கள் நிறை
வேறவேண்டியதாயிருக்கிறது என்றார்.
அப்பொழுது எல்லாரும் அவரை 50
விட்டு ஓடிப்போனார்கள். ஒரு வாலி 51
பன் ஒரு துப்பட்டியைமாத்திரம் தன்
மேல் போர்த்துக்கொண்டு அவர் பின்
னே போனான்; அவனைப் பிடித்தார்கள்.
அவன் தன் துப்பட்டியைப் போட்டு 52
விட்டு, நிர்வாணமாய் அவர்களை விட்டு
ஓடிப்போனான்.
இயேசுவை அவர்கள் பிரதான ஆசா 53
ரியனிடத்தில் கொண்டுபோனார்கள்;
அங்கே ஆசாரியர் மூப்பர் வேதபாரகர்
எல்லாரும் கூடிவந்திருந்தார்கள். பே 54
துரு தூரத்திலே அவருக்குப் பின்செ
ன்று, பிரதான ஆசாரியனுடைய அர
மனைக்குள் வந்து, சேவகரோடேகூட
உட்கார்ந்து, நெருப்பண்டையிலே
குளிர்காய்ந்துகொண்டிருந்தான்.
அப்பொழுது பிரதான ஆசாரியரும் 55
ஆலோசனைச்சங்கத்தாரனைவரும் இயே

சுவைக கொலைசெயயுமபடி அவருககு
விரோதமாகச சாடசி தேடினாகள,
56 அகபபடவிலலை அநேகா அவருககு
விரோதமாகப பொயசசாடசி சொலலி
யும, அநதச சாடசிகள ஒவவவிலலை
57 அபபொழுது சிலா எழுநது, கைவேலை
யாகிய இநத தேவாலயததை நான
இடிததுபபோடடு, கைவேலையலலாத
வேறொனறை மூனறு நாளைககுளளே
கடடுவேன எனறு இவன சொனனதை
58 நாஙகள கேடடோம எனறு, அவருககு
விரோதமாயப பொயசசாடசி சொன
59 னாகள அபபடிச சொலலியும அவா
கள சாடசி ஒவவாமறபோயிறறு
60 அபபொழுது பிரதான ஆசாரியன
எழுநது நடுவே நினறு, இயேசுவை
நோககி இவாகள உனககு விரோதமா
யச சொலலுகிறதைககுறிதது நீ ஒன
றும சொலலுகிறதிலலையா எனறு கேட
61 டான அவரோ ஒரு உததரவும சொல
லாமல பேசாதிருநதா
மறுபடியும பிரதான ஆசாரியன
அவரை நோககி நீ ஸதோததிரிககப
படட தேவனுடைய குமாரனாகிய கிறி
62 ஸதுதானா? எனறு கேடடான அதறகு
இயேசு நான அவாதான, மனுஷகுமா
ரன சாவவலலவரின வலதுபாரிசததில
வீறறிருபபதையும, வானததின மேகங
களமேல வருவதையும நீஙகள காண
பீாகள எனறா
63 பிரதான ஆசாரியன இதைக கேட
டவுடனே, தன வஸதிரஙகளைக கிழித
துககொணடு இனிச சாடசிகள நம
64 ககு வேணடியதெனன? தேவதூஷணத
ததைக கேடடீாகளே, உஙகளுககு
எனனமாயத தோனறுகிறது எனறான.
அதறகு அவாகளெலலாரும இவன
மரணததுககுப பாததிரனாயிருககிறான
எனறு தீாமானமபணணினாகள
65 அபபொழுது சிலா அவாமேல துப
பவும, அவருடைய முகததை மூட
வும, அவரைக குடடவும, ஞானதிருஷ
டியினாலே பாாததுச சொல எனறு சொ
லலவும தொடஙகினாகள, வேலைககா
ரரும அவரைக கனனததில அறைந
தாாகள

அததருணததிலே பேதுரு கீழே அர 66
மனை முறறததிலிருககையில, பிரதான
ஆசாரியனுடைய வேலைககாரிகளில
ஒருததி வநது, குளிாகாயநதுகொண 67
டிருககிற பேதுருவைக கணடு, அவனை
உறறுப பாாதது நீயும நசரேயனாகிய
இயேசுவோடே இருநதாய எனறாள
அதறகு அவன நான அறியேன, நீ 68
சொலலுகிறது எனககுத தெரியாது
எனறு மறுதலிதது, வெளியே வாசல
மணடபததுககுப போனான, அபபொ
ழுது சேவல கூவிறறு வேலைககாரி 69
அவனை மறுபடியும கணடு இவன
அவாகளில ஒருவன எனறு அருகே
நினறவாகளுககுச சொனனாள அவன 70
மறுபடியும மறுதலிததான சறறுநே
ரததுககுப பினபு மறுபடியும அருகே
நிறகிறவாகள பேதுருவைப பாாதது
மெயயாகவே நீ அவாகளில ஒருவன,
நீ கலிலேயன, உன பேசசு அதறகு ஒத
திருககிறது எனறாாகள அதறகு அவ 71
ன நீஙகள சொலலுகிற மனுஷனை
அறியேன எனறு சொலலி, சபிககவும
சததியமபணணவும தொடஙகினான
உடனே சேவல இரணடாநதரம கூவி 72
றறு சேவல இரணடுதரம கூவுகிற
தறகுமுனனே நீ எனனை மூனறுதரம
மறுதலிபபாய எனறு இயேசு தனககுச
சொனன வாாததையைப பேதுரு நினை
வுகூாநது, மிகவும அழுதான
பொழுது விடிநதவுடனே, பிரதான 15
ஆசாரியரும மூபபரும வேதபாரகரும
ஆலோசனைச சஙகததாரனைவரும கூடி
ஆலோசனைபணணி, இயேசுவைக கட
டிககொணடுபோய, பிலாததுவினிடத
தில ஒபபுககொடுததாாகள
பிலாதது அவரை நோககி நீ யூத 2
ருடைய ராஜாவா எனறு கேடடான
அதறகு அவா நீா சொலலுகிறபடி
தான எனறா
பிரதான ஆசாரியாகள அவாமேல 3
அநேகங குறறஙகளைச சாடடினாகள
அவரோ மாறுததரம ஒனறும சொலல
விலலை அபபொழுது பிலாதது மறு 4
படியும அவரை நோககி இதோ, இவா
கள உனமேல எததனையோ குறறங

களைச் சாட்டுகிறார்களே, அதற்கு நீ
உத்தரவு ஒன்றும் சொல்லுகிறதில்லையா
5 என்று கேட்டான். இயேசுவோ அப்
பொழுதும் உத்தரவு ஒன்றும் சொல்ல
வில்லை; அதினால் பிலாத்து ஆச்சரியப்
பட்டான்.
6 காவல் பண்ணப்பட்டவர்களில்
எவனை விடுதலையாக்கவேண்டுமென்று
ஜனங்கள் கேட்டுக்கொள்வார்களோ,
அவனை அவர்களுக்காக விடுதலையாக்கு
வது பண்டிகைதோறும் பிலாத்துவுக்கு
7 வழக்கமாயிருந்தது. கலகம்பண்ணி
அந்தக் கலகத்தில் கொலைசெய்து, அதற்
காகக் காவல் பண்ணப்பட்டவர்களில்
பரபாஸ் என்னப்பட்ட ஒருவன் இருந்
8 தான். ஜனங்கள், வழக்கத்தின்படியே
தங்களுக்கு ஒருவனை விடுதலையாக்க
வேண்டுமென்று சத்தமிட்டுக் கேட்டுக்
9 கொள்ளத் தொடங்கினார்கள். பொறா
மையினாலே பிரதான ஆசாரியர்கள்
அவரை ஒப்புக்கொடுத்தார்களென்று
10 பிலாத்து அறிந்து, அவர்களை நோக்கி:
நான் யூதருடைய ராஜாவை உங்களு
க்கு விடுதலையாக்க வேண்டுமென்றிருக்
கிறீர்களா என்று கேட்டான்.
11 பரபாசைத் தங்களுக்கு விடுதலையா
க்க வேண்டுமென்று ஜனங்கள் கேட்
டுக்கொள்ளும்படி, பிரதான ஆசாரியா
12 கள் அவர்களை ஏவிவிட்டார்கள். பிலா
த்து மறுபடியும் அவர்களை நோக்கி:
அப்படியானால், யூதருடைய ராஜா
வென்று நீங்கள் சொல்லுகிறவனை நான்
என்ன செய்யவேண்டும் என்று கேட்
13 டான். அவனைச் சிலுவையில் அறை
யும் என்று மறுபடியும் சத்தமிட்டுச்
14 சொன்னார்கள். அதற்குப் பிலாத்து:
ஏன், என்ன பொல்லாப்புச் செய்தான்
என்றான். அவர்களோ: அவனைச் சிலு
வையில் அறையும் என்று பின்னும்
அதிகமாய்க் கூக்குரலிட்டுச் சொன்னார்
15 கள். அப்பொழுது பிலாத்து ஜனங்க
ளைப் பிரியப்படுத்த மனதுள்ளவனாய்,
பரபாசை அவர்களுக்கு விடுதலையாக்கி,
இயேசுவையோ வாரினால் அடிப்பித்து,
சிலுவையில் அறையும்படிக்கு ஒப்புக்
கொடுத்தான்.

அப்பொழுது போர்ச்சேவகர் அவ 16
ரைத் தேசாதிபதியின் அரமனையாகிய
மாளிகையில் கொண்டுபோய், அவ்வி
டத்தில் போர்ச்சேவகருடைய கூட்ட
முழுவதையும் கூடிவரச்செய்து, சிவப் 17
பான மேலங்கியை அவருக்கு உடுத்தி,
முள்முடியைப் பின்னி அவருக்குச்
சூட்டி: யூதருடைய ராஜாவே, வாழ்க 18
என்று அவரை வாழ்த்தி, அவரைச் சிர 19
சில் கோலால் அடித்து, அவர்மேல்
துப்பி, முழங்கால்படியிட்டு அவரை
வணங்கினார்கள். அவரைப் பரியாசம் 20
பண்ணினபின்பு, சிவப்பான அங்கி
யைக் கழற்றி, அவருடைய வஸ்திரங்
களை அவருக்கு உடுத்தி, அவரைச் சிலு
வையில் அறையும்படி வெளியே கொ
ண்டுபோனார்கள்.

சிரேனே ஊரானும், அலெக்சந்தருக் 21
கும் ரூப்புக்கும் தகப்பனுமாகிய
சீமோன் என்னப்பட்ட ஒருவன் நாட்
டிலிருந்து அவ்வழியே வருகையில்,
அவருடைய சிலுவையைச் சுமக்கும்
படி அவனைப் பலவந்தம் பண்ணினார்
கள்.

கபாலஸ்தலம் என்று அர்த்தங்கொள் 22
ளும் கொல்கொதா என்னும் இடத்
திற்கு அவரைக் கொண்டுபோய், வெள் 23
ளைப்போளம் கலந்த திராட்சரசத்தை
அவருக்குக் குடிக்கக் கொடுத்தார்கள்;
அவர் அதை ஏற்றுக்கொள்ளவில்லை.
அப்பொழுது அவரைச் சிலுவையில் 24
அறைந்தார்கள். அதன்பின்பு அவரு
டைய வஸ்திரங்களைப் பங்கிட்டு, ஒவ்
வொருவன் ஒவ்வொரு பங்கை எடுத்
துக்கொள்ளும்படி அவைகளைக்குறித்
துச் சீட்டுப்போட்டார்கள்.
அவரைச் சிலுவையில் அறைந்த 25
போது மூன்றாம்மணி வேளையாயிருந்
தது.
அவர் அடைந்த ஆக்கினையின் முகா 26
ந்தரத்தைக் காண்பிக்கும்பொருட்டு,
யூதருடைய ராஜா என்று எழுதி, சிலு
வையின்மேல் கட்டினார்கள்.
அல்லாமலும், அவருடைய வலது 27
பக்கத்தில் ஒருவனும் அவருடைய இட
துபக்கத்தில் ஒருவனுமாக, இரண்டு

கள்ளரை அவரோடேகூடச் சிலுவை
28 களில் அறைந்தார்கள். அக்கிரமக்கா
ரரில் ஒருவனாக எண்ணப்பட்டார் என்
கிற வேதவாக்கியம் அதனாலே நிறை
வேறிற்று
29 அந்த வழியாய் நடந்துபோகிறவர்
கள் தங்கள் தலைகளைத் துலுக்கி: ஆ!
ஆ! தேவாலயத்தை இடித்து, மூன்று
30 நாளைக்குள்ளே கட்டுகிறவனே, உன்னை
நீயே இரட்சித்துக்கொள்; சிலுவையிலி
ருந்திறங்கிவா என்று அவரைத் தூஷித்
31 தார்கள். அப்படியே பிரதான ஆசாரி
யரும் வேதபாரகரும் தங்களுக்குள்
ளே பரியாசம்பண்ணி: மற்றவர்களை
இரட்சித்தான், தன்னைத்தான் இரட்சித்
32 துக்கொள்ளத் திராணியில்லை. நாம்
கண்டு விசுவாசிக்கத்தக்கதாக இஸ்ர
வேலுக்கு ராஜாவாகிய கிறிஸ்து இப்
பொழுது சிலுவையிலிருந் திறங்கட்டும்
என்று சொல்லிக்கொண்டார்கள். அவ
ரோடேகூடச் சிலுவைகளில் அறையப்
பட்டவர்களும் அவரை நிந்தித்தார்கள்.
33 ஆறாம்மணி நேரமுதல் ஒன்பதாம்
மணி நேரம்வரைக்கும் பூமியெங்கும்
அந்தகாரம் உண்டாயிற்று.
34 ஒன்பதாம்மணி நேரத்திலே, இயேசு:
எலோயீ! எலோயீ! லாமா சபக்தானி,
என்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்
டார்; அதற்கு: என் தேவனே! என்
தேவனே! ஏன் என்னைக் கைவிட்டீர்
என்று அர்த்தமாம்.
35 அங்கே நின்றவர்களில் சிலர் அதைக்
கேட்டபொழுது: இதோ, எலியாவைக்
36 கூப்பிடுகிறான் என்றார்கள். ஒருவன்
ஓடி, கடற்காளானைக் காடியிலே தோ
ய்த்து, அதை ஒரு கோலில் மாட்டி,
அவருக்குக் குடிக்கக் கொடுத்து; பொ
றுங்கள், எலியா இவனை இறக்க வரு
வானோ பார்ப்போம் என்றான்.
37 இயேசு மகா சத்தமாய்க் கூப்பிட்டு
ஜீவனை விட்டார்.
38 அப்பொழுது, தேவாலயத்தின் திரை
ச்சீலை மேல்தொடங்கிக் கீழ்வரைக்கும்
இரண்டாகக் கிழிந்தது.
39 அவருக்கு எதிரே நின்ற நூற்றுக்கு
அதிபதி அவர் இப்படிக் கூப்பிட்டு
ஜீவனை விட்டதைக் கண்டபோது: மெ
ய்யாகவே இந்த மனுஷன் தேவனு
டைய குமாரன் என்றான்
சில ஸ்திரீகளும் தூரத்திலிருந்து பா 40
ர்த்துக்கொண்டிருந்தார்கள். அவர் கலி
லேயாவிலிருந்தபோது அவருக்குப்
பின்சென்று ஊழியஞ்செய்துவந்த மக
தலேனா மரியாளும், சின்ன யாக்கோ
புக்கும் யோசேக்கும் தாயாகிய மரியா
ளும், சலோமே என்பவளும், அவரு 41
டனேகூட எருசலேமுக்கு வந்திருந்த
வேறே அநேக ஸ்திரீகளும் அவர்களோ
டே இருந்தார்கள்.
ஓய்வுநாளுக்கு முந்தினநாள் ஆயத்த 42
நாளாயிருந்தபடியால், சாயங்காலமா
னபோது, கனம்பொருந்திய ஆலோச 43
னைக்காரனும் அரிமத்தியா ஊரானும்
தேவனுடைய ராஜ்யம் வரக் காத்திருந்
தவனுமாகிய யோசேப்பு என்பவன்
வந்து, பிலாத்துவினிடத்தில் துணிந்து
போய், இயேசுவின் சரீரத்தைக் கேட்
டான். அவர் இத்தனை சீக்கிரத்தில் 44
மரித்துப்போனாரா என்று பிலாத்து
ஆச்சரியப்பட்டு, நூற்றுக்கு அதிபதியை
அழைப்பித்து: அவர் இதற்குள்ளே
மரித்தது நிச்சயமா என்று கேட்டான்.
நூற்றுக்கு அதிபதியினாலே அதை அறிந் 45
துகொண்டபின்பு, சரீரத்தை யோசேப்
பினிடத்தில் கொடுத்தான். அவன் 46
போய், மெல்லிய துப்பட்டியை வாங்
கிக்கொண்டு வந்து, அவரை இறக்கி,
அந்தத் துப்பட்டியிலே சுற்றி, கன்மலை
யில் வெட்டியிருந்த கல்லறையிலே
அவரை வைத்து, கல்லறையின் வாச
லில் ஒரு கல்லைப் புரட்டிவைத்தான்.
அவரை வைத்த இடத்தை மகதலேனா 47
மரியாளும் யோசேயின் தாயாகிய மரி
யாளும் பார்த்தார்கள்.
ஓய்வுநாளான பின்பு மகதலேனா 16
மரியாளும், யாக்கோபின் தாயாகிய
மரியாளும், சலோமே என்பவளும்,
அவருக்குச் சுகந்தவர்க்கமிடும்படி
அவைகளை வாங்கிக்கொண்டு, வாரத் 2
தின் முதலாம்நாள் அதிகாலையிலே சூரி
யன் உதயமாகிறபோது கல்லறையினி
டத்தில் வந்து, கல்லறையின் வாசலி 3

விருக்கிற கல்லை நமக்காக எவன் புரட்
டித் தள்ளுவான் என்று ஒருவரோடொ
4 ருவர் சொல்லிக்கொண்டார்கள். அந்
தக் கல் மிகவும் பெரிதாயிருந்தது;
அவர்கள் ஏறிட்டுப் பார்க்கிறபோது,
அது தள்ளப்பட்டிருக்கக் கண்டார்கள்.
5 அவர்கள் கல்லறைக்குள் பிரவேசி
த்து, வெள்ளையங்கி தரித்தவனாய் வலது
பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு வாலி
6 பனைக் கண்டு பயந்தார்கள். அவன்
அவர்களை நோக்கி. பயப்படாதிருங்கள்,
சிலுவையில் அறையப்பட்ட நசரேய
னாகிய இயேசுவைத் தேடுகிறீர்கள்;
அவர் உயிர்த்தெழுந்தார்; அவர் இங்
கே யில்லை; இதோ, அவரை வைத்த
7 இடம். நீங்கள் அவருடைய சீஷரி
டத்திற்கும் பேதுருவினிடத்திற்கும்
போய்: உங்களுக்குமுன்னே கலிலேயா
வுக்குப் போகிறார், அவர் உங்களுக்குச்
சொன்னபடியே அங்கே அவரைக் கா
ண்பீர்கள் என்று, அவர்களுக்குச் சொ
8 ல்லுங்கள் என்றான். நடுக்கமும் திகி
லும் அவர்களைப் பிடித்தபடியால், அவர்
கள் சீக்கிரமாய் வெளியே வந்து, கல்
லறையைவிட்டு ஓடினார்கள்; அவர்கள்
பயந்திருந்தபடியினால் ஒருவருக்கும்
ஒன்றும் சொல்லாமற்போனார்கள்.
9 வாரத்தின் முதலாம்நாள் அதிகாலை
யிலே இயேசு எழுந்திருந்தபின்பு, மக
தலேனா மரியாளுக்கு முதல் முதல் தரி
10 சனமானார். அவளிடத்திலிருந்து அவர்
ஏழு பிசாசுகளைத் துரத்தியிருந்தார்.
அவள் புறப்பட்டு, அவரோடேகூட
இருந்தவர்கள் துக்கப்பட்டு அழுதுகொ
ண்டிருக்கையில், அவர்களிடத்தில்
போய், அந்தச்செய்தியை அறிவித்தாள்.
11 அவர் உயிரோடிருக்கிறாரென்றும், அவ
ளுக்குக் காணப்பட்டார் என்றும் அவர்
கள் கேட்டபொழுது நம்பவில்லை.
12 அதன்பின்பு அவர்களில் இரண்டு
பேர் ஒரு கிராமத்துக்கு நடந்துபோகிற
பொழுது அவர்களுக்கு மறுரூபமாய்த்
தரிசனமானார். அவர்களும் போய், 13
அதை மற்றவர்களுக்கு அறிவித்தார்
கள்; அவர்களையும் அவர்கள் நம்ப
வில்லை.
அதன்பின்பு பதினொருவரும் போ 14
ஜனபந்தியிலிருக்கையில் அவர்களுக்கு
அவர் தரிசனமாகி, உயிர்த்தெழுந்
திருந்த தம்மைக் கண்டவர்களை அவர்
கள் நம்பாமற்போனதினிமித்தம் அவர்
களுடைய அவிசுவாசத்தைக்குறித்தும்
இருதய கடினத்தைக்குறித்தும் அவர்
களைக் கடிந்துகொண்டார்.
பின்பு, அவர் அவர்களை நோக்கி: நீங் 15
கள் உலகமெங்கும் போய், சர்வசிருஷ்
டிக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்
கள். விசுவாசமுள்ளவனாகி ஞானஸ் 16
நானம் பெற்றவன் இரட்சிக்கப்படு
வான்; விசுவாசியாதவனோ ஆக்கினைக்
குள்ளாகத் தீர்க்கப்படுவான். விசுவா 17
சிக்கிறவர்களால் நடக்கும் அடையா
ளங்களாவன: என் நாமத்தினாலே பிசா
சுகளைத் துரத்துவார்கள்; நவமான பா
ஷைகளைப் பேசுவார்கள்; சர்ப்பங் 18
களை எடுப்பார்கள்; சாவுக்கேதுவான
யாதொன்றைக் குடித்தாலும் அது
அவர்களைச் சேதப்படுத்தாது; வியாதிஸ்
தர்மேல் கைகளை வைப்பார்கள், அப்
பொழுது அவர்கள் சொஸ்தமாவார்கள்
என்றார்.
இவ்விதமாய்க் கர்த்தர் அவர்களு 19
டனே பேசினபின்பு, பரலோகத்துக்கு
எடுத்துக்கொள்ளப்பட்டு, தேவனு
டைய வலதுபாரிசத்தில் உட்கார்ந்
தார்
அவர்கள் புறப்பட்டுப் போய், எங் 20
கும் பிரசங்கம் பண்ணினார்கள். கர்த்
தர் அவர்களுடனேகூடக் கிரியையை
நடப்பித்து, அவர்களால் நடந்த அடை
யாளங்களினாலே வசனத்தை உறுதிப்
படுத்தினார். ஆமென்.

# லூக்கா எழுதின சுவிசேஷம்

1 மகா கனம்பொருந்திய தெயோப்பிலு
வே, நாங்கள் முழு நிச்சயமாய் நம்பு
2 கிற சங்கதிகளை, ஆரம்பமுதல் கண்
ணாரக்கண்டு வசனத்தைப் போதித்த
வர்கள் எங்களுக்கு ஒப்புவித்தபடியே
அவைகளைக்குறித்துச் சரித்திரம் எழுத
அநேகம்பேர் ஏற்பட்டபடியினால்,
3 ஆதிமுதல் எல்லாவற்றையும் திட்ட
மாய் விசாரித்தறிந்த நானும் உமக்கு
உபதேசிக்கப்பட்ட விசேஷங்களின்
நிச்சயத்தை நீர் அறியவேண்டுமென்று,
4 அவைகளை ஒழுங்காய் உமக்கு எழுது
வது எனக்கு நலமாய்த் தோன்றிற்று.
5 யூதேயாதேசத்தின் ராஜாவாகிய
ஏரோதின் நாட்களில், அபியா என்னும்
ஆசாரிய வகுப்பில் சகரியா என்னும்
பேர்கொண்ட ஆசாரியன் ஒருவன்
இருந்தான். அவன் மனைவி ஆரோனு
டைய குமாரத்திகளில் ஒருத்தி, அவள்
6 பேர் எலிசபெத்து. அவர்கள் இருவ
ரும் கர்த்தரிட்ட சகல கற்பனைகளின்
படியேயும் நியமங்களின்படியேயும்
குற்றமற்றவர்களாய் நடந்து, தேவ
னுக்கு முன்பாக நீதியுள்ளவர்களாயி
7 ருந்தார்கள். எலிசபெத்து மலடியாயி
ருந்தபடியினால், அவர்களுக்குப் பிள்ளை
யில்லாதிருந்தது; இருவரும் வயது
சென்றவர்களாயும் இருந்தார்கள்.
8 அப்படியிருக்க, அவன் தன் ஆசா
ரிய வகுப்பின் முறைப்படி தேவசந்நி
தியிலே ஆசாரிய ஊழியம் செய்துவரு
9 கிற காலத்தில், ஆசாரிய ஊழிய
முறைமையின்படி அவன் தேவாலயத்
துக்குள் பிரவேசித்து தூபங்காட்டுகிற
10 தற்குச் சீட்டைப் பெற்றான். தூபங்
காட்டுகிற வேளையிலே ஜனங்களெல்லா
ரும் கூட்டமாய் வெளியே ஜெபம்பண்
ணிக்கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது கர்த்தருடைய தூதன் 11
ஒருவன் தூபபீடத்தின் வலதுபக்கத்தி
லே நின்று அவனுக்குத் தரிசனமா
னான். சகரியா அவனைக் கண்டு கல 12
ங்கி, பயமடைந்தான்.
தூதன் அவனை நோக்கி: சகரியா 13
வே, பயப்படாதே, உன் வேண்டுதல்
கேட்கப்பட்டது; உன் மனைவியாகிய
எலிசபெத்து உனக்கு ஒரு குமாரனைப்
பெறுவாள், அவனுக்கு யோவான்
என்று பேரிடுவாயாக. உனக்குச் சந் 14
தோஷமும் மகிழ்ச்சியும் உண்டாகும்,
அவன் பிறப்பினிமித்தம் அநேகர் சந்
தோஷப்படுவார்கள். அவன் கர்த்த 15
ருக்கு முன்பாகப் பெரியவனாயிருப்
பான், திராட்சரசமும் மதுவும் குடி
யான், தன் தாயின் வயிற்றிலிருக்கும்
போதே பரிசுத்தஆவியினால் நிரப்பப்
பட்டிருப்பான. அவன் இஸ்ரவேல் 16
சந்ததியாரில் அநேகரை அவர்கள் தே
வனாகிய கர்த்தரிடத்திற்குத் திருப்பு
வான். பிதாக்களுடைய இருதயங்க 17
ளைப் பிள்ளைகளிடத்திற்கும், கீழ்ப்படி
யாதவர்களை நீதிமான்களுடைய ஞானத்
திற்குத் திருப்பி, உத்தமமான ஜனத்
தைக் கர்த்தருக்கு ஆயத்தப்படுத்தும்
படியாக, அவன் எலியாவின் ஆவியும்
பலமும் உடையவனாய் அவருக்கு
முன்னே நடப்பான் என்றான்.
அப்பொழுது சகரியா தேவதூதனை 18
நோக்கி: இதை நான் எதினால் அறி
வேன்; நான் கிழவனாயிருக்கிறேன், என்
மனைவியும் வயதுசென்றவளாயிருக்கி
றாளே என்றான். தேவதூதன் அவ 19
னுக்குப் பிரதியுத்தரமாக: நான் தேவ
சந்நிதானத்தில் நிற்கிற காபிரியேல் என்
பவன்; உன்னுடனே பேசவும், உனக்கு
இந்த நற்செய்தியை அறிவிக்கவும் அ

20 னுப்பப்பட்டு வந்தேன்; இதோ, தகுந்த
காலத்திலே நிறைவேறப்போகிற என்
வார்த்தைகளை நீ விசுவாசியாதபடியினால்
இவைகள் சம்பவிக்கும் நாள்மட்டும்
நீ பேசக்கூடாமல் ஊமையாயிருப்பாய்
என்றான்.
21 ஜனங்கள் சகரியாவுக்குக் காத்திருந்
து, அவன் தேவாலயத்தில் தாமதித்ததி
22 னால் ஆச்சரியப்பட்டார்கள். அவன்
வெளியே வந்தபோது அவர்களிடத்தில்
பேசக்கூடாமலிருந்தான்; அதினாலே தே
வாலயத்தில் ஒரு தரிசனத்தைக் கண்
டானென்று அறிந்தார்கள் அவனும்
அவர்களுக்குச் சைகைகாட்டி ஊமை
யாயிருந்தான்.
23 அவனுடைய ஊழியத்தின் நாட்கள்
நிறைவேறினவுடனே தன் வீட்டுக்குப்
24 போனான். அந்நாட்களுக்குப் பின்பு,
அவன் மனைவியாகிய எலிசபெத்து கர்ப்
பவதியாகி: ஜனங்களுக்குள்ளே எனக்கு
உண்டாயிருந்த நிந்தையை நீக்கும்படி
யாகக் கர்த்தர் இந்த நாட்களில் என்
25 மேல் கடாட்சம் வைத்து, எனக்கு
இப்படிச் செய்தருளினார் என்று சொ
ல்லி, ஐந்துமாதம் வெளிப்படாதிருந்
தாள்
26 ஆறாம் மாதத்திலே காபிரியேல் என்
னுந் தூதன், கலிலேயாவிலுள்ள நாச
27 ரேத்தென்னும் ஊரில், தாவீதின் வம்
சத்தானாகிய யோசேப்பு என்கிற நாம
முள்ள புருஷனுக்கு நியமிக்கப்பட்டி
ருந்த ஒரு கன்னிகையினிடத்திற்கு தே
வனாலே அனுப்பப்பட்டான்; அந்தக்
28 கன்னிகையின் பேர் மரியாள். அவள்
இருந்த வீட்டில் தேவதூதன் பிரவே
சித்து: கிருபைபெற்றவளே, வாழ்க,
கர்த்தர் உன்னுடனே இருக்கிறார், ஸ்தி
ரீகளுக்குள்ளே நீ ஆசீர்வதிக்கப்பட்ட
29 வள் என்றான். அவளோ அவனைக்
கண்டு, அவன் வார்த்தையினால் கலங்
கி, இந்த வாழ்த்துதல் எப்படிப்பட்
டதோ என்று சிந்தித்துக்கொண்டிருந்
தாள்.
30 தேவதூதன் அவளை நோக்கி: மரி
யாளே, பயப்படாதே; நீ தேவனிடத்
31 தில் கிருபைபெற்றாய். இதோ, நீ கர்ப்
பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாய்,
அவருக்கு இயேசு என்று பேரிடுவா
யாக. அவர் பெரியவராயிருப்பார், 32
உன்னதமானவருடைய குமாரன் என்
னப்படுவார்; கர்த்தராகிய தேவன் அவ
ருடைய பிதாவாகிய தாவீதின் சிங்கா
சனத்தை அவருக்குக் கொடுப்பார். அ 33
வர் யாக்கோபின் குடும்பத்தாரை என்
றென்றைக்கும் அரசாளுவார்; அவரு
டைய ராஜ்யத்துக்கு முடிவிராது என்
றான்
அதற்கு மரியாள் தேவதூதனை நோக் 34
கி: இது எப்படியாகும்? புருஷனை
அறியேனே என்றாள். தேவதூதன் அ 35
வளுக்குப் பிரதியுத்தரமாக: பரிசுத்த
ஆவி உன்மேல் வரும்; உன்னதமான
வருடைய பலம் உன்மேல் நிழலிடும்;
ஆதலால் உன்னிடத்தில் பிறக்கும் பரி
சுத்தமுள்ளது தேவனுடைய குமாரன்
என்னப்படும். இதோ உனக்கு இனத் 36
தாளாயிருக்கிற எலிசபெத்தும் தன்
முதிர்வயதிலே ஒரு புத்திரனைக் கர்ப்பந்
தரித்திருக்கிறாள்; மலடியென்னப்பட்ட
அவளுக்கு இது ஆறாம்மாதம். தேவ 37
னாலே கூடாதகாரியம் ஒன்றுமில்லை
என்றான்
அதற்கு மரியாள்: இதோ, நான் 38
ஆண்டவருக்கு அடிமை, உம்முடைய
வார்த்தையின்படி எனக்கு ஆகக்கட
வது என்றாள். அப்பொழுது தேவதூ
தன் அவளிடத்திலிருந்து போய்விட்
டான்
அந்நாட்களில் மரியாள் எழுந்து, 39
மலைநாட்டிலே யூதாவிலுள்ள ஒரு பட்
டணத்திற்குத் தீவிரமாய்ப் போய், சக 40
ரியாவின் வீட்டுக்குள் பிரவேசித்து,
எலிசபெத்தை வாழ்த்தினாள். எலிச 41
பெத்து மரியாளுடைய வாழ்த்துதலைக்
கேட்டபொழுது, அவளுடைய வயிற்
றிலிருந்த பிள்ளை துள்ளிற்று; எலிச
பெத்து பரிசுத்தஆவியினால் நிரப்பப்
பட்டு, உரத்த சத்தமாய்: ஸ்திரீகளுக் 42
குள்ளே நீ ஆசீர்வதிக்கப்பட்டவள், உன்
கர்ப்பத்தின் கனியும் ஆசீர்வதிக்கப்பட்
டது. என் ஆண்டவருடைய தாயார் 43
என்னிடத்தில் வந்தது எனக்கு எதி

44 ஞல் கிடைத்தது? இதோ, நீ வாழ்த்
தின சத்தம் என் காதில் விழுந்தவுடனே,
என் வயிற்றிலுள்ள பிள்ளை களிப்பாய்த்
45 துள்ளிற்று. விசுவாசித்தவளே பாக்கிய
வதி, கர்த்தராலே அவளுக்குச் சொல்லப்
பட்டவைகள் நிறைவேறும் என்றாள்.
46 அப்பொழுது மரியாள்: என் ஆத்
துமா கர்த்தரை மகிமைப்படுத்துகிறது.
47 என் ஆவி என் இரட்சகராகிய தேவ
48 னில் களிகூருகிறது. அவர் தம்மு
டைய அடிமையின் தாழ்மையை நோக்
கிப் பார்த்தார்; இதோ, இதுமுதல் எல்
லாச் சந்ததிகளும் என்னைப் பாக்கிய
49 வதி என்பார்கள். வல்லமையுடையவர்
மகிமையானவைகளை எனக்குச் செய்
தார்; அவருடைய நாமம் பரிசுத்தமுள்
50 ளது. அவருடைய இரக்கம் அவருக்
குப் பயந்திருக்கிறவர்களுக்குத் தலை
51 முறை தலைமுறைக்குமுள்ளது. தம்மு
டைய புயத்தினாலே பராக்கிரமஞ் செய்
தார்; இருதய சிந்தையில் அகந்தையுள்
52 ளவர்களைச் சிதறடித்தார். பலவான்களை
ஆசனங்களிலிருந்து தள்ளி, தாழ்மை
53 யானவர்களை உயர்த்தினார் பசியுள்ள
வர்களை நன்மைகளினால் நிரப்பி, ஐசுவரி
யமுள்ளவர்களை வெறுமையாய் அனுப்
54 பிவிட்டார். நம்முடைய பிதாக்க
ளுக்கு அவர் சொன்னபடியே, ஆபிரகா
முக்கும் அவன் சந்ததிக்கும் என்றென்
55 றைக்கும் இரக்கஞ்செய்ய நினைத்து, தம்
முடைய தாசனாகிய இஸ்ரவேலை ஆத
ரித்தார் என்றாள்.
56 மரியாள் ஏறக்குறைய மூன்றுமா
தம் அவளுடனே இருந்து, தன் வீட்டுக்
குத் திரும்பிப்போனாள்.
57 எலிசபெத்துக்குப் பிரசவகாலம் நி
றைவேறினபோது அவள் ஒரு புத்திர
58 னைப் பெற்றாள். கர்த்தர் அவளிடத்தில்
தம்முடைய இரக்கத்தை விளங்கப்
பண்ணினாரென்று அவளுடைய அயல
கத்தாரும் பந்துஜனங்களும் கேள்விப்
பட்டு, அவளுடனேகூடச் சந்தோஷப்
பட்டார்கள்.
59 எட்டாம் நாளிலே பிள்ளைக்கு விருத்
தசேதனம் பண்ணும்படிக்கு அவர்கள்
வந்து, அதின் தகப்பனுடைய நாமத்
தின்படி அதற்குச் சகரியா என்று பேரி
டப்போனார்கள். அப்பொழுது அதின் 60
தாய்: அப்படியல்ல, அதற்கு யோவான்
என்று பேரிடவேண்டும் என்றாள். அ 61
தற்கு அவர்கள்: உன் உறவின் முறை
யாரில் இந்தப் பேருள்ளவன் ஒருவ
னும் இல்லையே என்று சொல்லி, அதின் 62
தகப்பனை நோக்கி: இதற்கு என்ன பேரிட
மனதாயிருக்கிறீர் என்று சைகையினால்
கேட்டார்கள். அவன் எழுத்துப்பல 63
கையைக் கேட்டு வாங்கி, இவன் பேர்
யோவான் என்று எழுதினான்; எல்லா
ரும் ஆச்சரியப்பட்டார்கள். உடனே 64
அவனுடைய வாய் திறக்கப்பட்டு, அவ
னுடைய நாவும் கட்டவிழ்க்கப்பட்டு,
தேவனை ஸ்தோத்திரித்துப் பேசினான்.
அதினால் அவர்களைச்சுற்றி வாசமாயி 65
ருந்த யாவருக்கும் பயமுண்டாயிற்று.
மேலும் யூதேயாவின் மலைநாடெங்
கும் இந்த வர்த்தமானங்களெல்லாம்
சொல்லிக்கொள்ளப்பட்டது. அவை 66
களைக் கேள்விப்பட்டவர்களெல்லாரும்
தங்கள் மனதிலே அவைகளை வைத்துக்
கொண்டு இந்தப் பிள்ளை எப்படிப்பட்
டதாயிருக்குமோ என்றார்கள். கர்த்த
ருடைய கரம் அந்தப் பிள்ளையோடே
இருந்தது.
அவனுடைய தகப்பனாகிய சகரியா 67
பரிசுத்தஆவியினாலே நிரப்பப்பட்டு,
தீர்க்கதரிசனமாக: இஸ்ரவேலின் தே 68
வனாகிய கர்த்தருக்கு ஸ்தோத்திரம் உண்
டாவதாக. அவர் நம்முடைய பிதாக் 69
களுக்கு வாக்குத்தத்தம்பண்ணின இரக்
கத்தைச் செய்வதற்கும்; தம்முடைய 70
பரிசுத்த உடன்படிக்கையை நினைத்த
ருளி: உங்கள் சத்துருக்களின் கைகளி 71
னின்று நீங்கள் விடுதலையாக்கப்பட்டு,
உயிரோடிருக்கும் நாளெல்லாம் பய
மில்லாமல் எனக்கு முன்பாகப் பரி
சுத்தத்தோடும் நீதியோடும் எனக்கு
ஊழியஞ்செய்யக் கட்டளையிடுவேன்
என்று, அவர் நம்முடைய பிதாவாகிய 72
ஆபிரகாமுக்கு இட்ட ஆணையை நிறை
வேற்றுவதற்கும்; ஆதிமுதற்கொண்டி 73
ருந்த தம்முடைய பரிசுத்த தீர்க்கதரி
சிகளின் வாக்கினால் தாம் சொன்னபடி

74 யே, தமது ஜனத்தைச் சந்தித்து மீட்
டுக்கொண்டு, நம்முடைய சத்துருக்
களினின்றும், நம்மைப் பகைக்கிற யா
வருடைய கைகளினின்றும், நம்மை
75 இரட்சிக்கும்படிக்கு, தம்முடைய தா
சனாகிய தாவீதின் வம்சத்திலே நமக்கு
இரட்சணிய கொம்பை ஏற்படுத்தினார்.
76 நீயோ பாலகனே, உன்னதமானவரு
டைய தீர்க்கதரிசி என்னப்படுவாய்;
நீ கர்த்தருக்கு வழிகளை ஆயத்தப்பண்
77 ணவும், நமது தேவனுடைய உருக்க
மான இரக்கத்தினாலே அவருடைய
ஜனத்துக்குப் பாவமன்னிப்பாகிய இர
ட்சிப்பைத் தெரியப்படுத்தவும், அவ
78 ருக்கு முன்னாக நடந்துபோவாய். அந்
தகாரத்திலும் மரண இருளிலும் உட்
கார்ந்திருக்கிறவர்களுக்கு வெளிச்சம்
79 தரவும், நம்முடைய கால்களைச் சமா
தானத்தின் வழியிலே நடத்தவும், அவ்
விரக்கத்தினாலே உன்னதத்திலிருந்து
தோன்றிய அருணோதயம் நம்மைச்
சந்தித்திருக்கிறது என்றான்.
80 அந்தப் பிள்ளை வளர்ந்து, ஆவியிலே
பலங்கொண்டு, இஸ்ரவேலுக்குத் தன்
னைக் காண்பிக்கும் நாள்வரைக்கும்
வனாந்தரங்களிலே இருந்தான்.
2 அந்நாட்களில் உலகமெங்கும் குடி
மதிப்பு எழுதப்படவேண்டுமென்று
அகுஸ்துராயனால் கட்டளை பிறந்தது
2 சீரியாநாட்டிலே சிரேனியு என்பவன்
தேசாதிபதியாயிருந்தபோது இந்த
முதலாம் குடிமதிப்பு உண்டாயிற்று
3 அந்தப்படி குடிமதிப்பெழுதப்படும்ப
டிக்கு எல்லாரும் தங்கள் தங்கள் ஊர்
களுக்குப் போனார்கள்.
4 அப்பொழுது யோசேப்பும், தான்
தாவீதின் வம்சத்தானும் குடும்பத்தானு
மாயிருந்தபடியினாலே, தனக்கு மனைவி
யாக நியமிக்கப்பட்டுக் கர்ப்பவதியான
மரியாளுடனே குடிமதிப்பெழுதப்படும்
5 படி, கலிலேயாநாட்டிலுள்ள நாசரேத்
தூரிலிருந்து யூதேயாநாட்டிலுள்ள பெ
த்லகேம் என்னும் தாவீதின் ஊருக்குப்
போனான்.
6 அவ்விடத்திலே அவர்கள் இருக்கை
யில், அவளுக்குப் பிரசவகாலம் நே
ரிட்டது. அவள் தன் முதற்பேறான 7
குமாரனைப் பெற்று, சத்திரத்திலே அவர்
களுக்கு இடமில்லாதிருந்தபடியினால்,
பிள்ளையைத் துணிகளில் சுற்றி, முன்ன
ணையிலே கிடத்தினாள்.
அப்பொழுது அந்த நாட்டிலே மேய் 8
ப்பர்கள் வயல்வெளியில் தங்கி, இராத்
திரியிலே தங்கள் மந்தையைக் காத்துக்
கொண்டிருந்தார்கள். அவ்வேளையில் 9
கர்த்தருடைய தூதன் அவர்களிடத்தில்
வந்து நின்றான், கர்த்தருடைய மகிமை
அவர்களைச் சுற்றிலும் பிரகாசித்தது;
அவர்கள் மிகவும் பயந்தார்கள். தேவ 10
தூதன் அவர்களை நோக்கி. பயப்படா
திருங்கள்; இதோ, எல்லா ஜனத்துக்
கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்
கும் நற்செய்தியை உங்களுக்கு அறி
விக்கிறேன். இன்று கர்த்தராகிய கிறி 11
ஸ்து என்னும் இரட்சகர் உங்களுக்குத்
தாவீதின் ஊரிலே பிறந்திருக்கிறார். பிள் 12
ளையைத் துணிகளில் சுற்றி, முன்னணை
யிலே கிடத்தியிருக்கக் காண்பீர்கள்;
இதுவே உங்களுக்கு அடையாளம்
என்றான்.
அந்தக்ஷணமே பரமசேனையின் திரள் 13
அந்தத் தூதனுடனே தோன்றி: உன்ன 14
தத்திலிருக்கிற தேவனுக்கு மகிமையும்,
பூமியிலே சமாதானமும், மனுஷர்
மேல் பிரியமும் உண்டாவதாக என்று
சொல்லி, தேவனைத் துதித்தார்கள்.
தேவதூதர்கள் அவர்களை விட்டுப் 15
பரலோகத்துக்குப் போனபின்பு, மேய்
ப்பர்கள் ஒருவரையொருவர் நோக்கி:
நாம் பெத்லகேம் ஊருக்குப் போய்,
நடந்ததாகக் கர்த்தரால் நமக்கு அறி
விக்கப்பட்ட இந்தக் காரியத்தைப்
பார்ப்போம் வாருங்கள் என்று சொல்
லி, தீவிரமாய் வந்து, மரியாளையும், 16
யோசேப்பையும், முன்னணையிலே கிட
த்தியிருக்கிற பிள்ளையையும் கண்டார்
கள்.
கண்டு, அந்தப் பிள்ளையைக்குறித் 17
துத் தங்களுக்குச் சொல்லப்பட்ட சங்
கதியைப் பிரசித்தம்பண்ணினார்கள்.—
மேய்ப்பராலே தங்களுக்குச் சொல்லப் 18
பட்டதைக் கேட்ட யாவரும் அவை

லாமல் வேறே அஸ்திபாரத்தைப்போட
12 ஒருவனாலும் கூடாது. ஒருவன் அந்த
அஸ்திபாரத்தின்மேல் பொன், வெள்ளி,
விலையேறப்பெற்ற கல், மரம், புல்,
வைக்கோல் ஆகிய இவைகளைக் கட்டி
13 னால், அவனவனுடைய வேலைப்பாடு
வெளியாகும்; நாளானது அதை விளங்
கப்பண்ணும். ஏனெனில் அது அக்கி
னியினாலே வெளிப்படுத்தப்படும்; அவ
னவனுடைய வேலைப்பாடு எத்தன்மை
யுள்ளதென்று அக்கினியானது பரிசோ
14 திக்கும். அதின்மேல் ஒருவன் கட்டி
னது நிலைத்தால், அவன் கூலியைப்
15 பெறுவான் ஒருவன் கட்டினது வெந்
துபோனால், அவன் நஷ்டமடைவான்;
அவனோ இரட்சிக்கப்படுவான்; அது
வும் அக்கினியிலகப்பட்டுத் தப்பினது
போலிருக்கும்.
16 நீங்கள் தேவனுடைய ஆலயமாயிருக்
கிறீர்களென்றும், தேவனுடைய ஆவி
உங்களில் வாசமாயிருக்கிறாரென்றும்
17 அறியாதிருக்கிறீர்களா? ஒருவன் தேவ
னுடைய ஆலயத்தைக் கெடுத்தால்,
அவனை தேவன் கெடுப்பார்; தேவனு
டைய ஆலயம் பரிசுத்தமாயிருக்கிறது;
நீங்களே அந்த ஆலயம்.
18 ஒருவனும் தன்னைத்தானே வஞ்சியா
திருப்பானாக; இவ்வுலகத்திலே உங்க
ளில் ஒருவன் தன்னை ஞானியென்று
எண்ணினால் அவன் ஞானியாகும்படிக்
19 குப் பைத்தியக்காரனாகக்கடவன். இவ்
வுலகத்தின் ஞானம் தேவனுக்கு முன்
பாகப் பைத்தியமாயிருக்கிறது. அப்ப
டியே, ஞானிகளை அவர்களுடைய தந்
20 திரத்திலே பிடிக்கிறாரென்றும், ஞானி
களுடைய சிந்தனைகள் வீணாயிருக்கிற
தென்று கர்த்தர் அறிந்திருக்கிறாரென்
றும் எழுதியிருக்கிறது.
21 இப்படியிருக்க, ஒருவனும் மனு
ஷரைக்குறித்து மேன்மை பாராட்டா
திருப்பானாக; எல்லாம் உங்களுடை
22 யதே; பவுலாகிலும், அப்பொல்லோ
வாகிலும், கேபாவாகிலும், உலகமாகி
லும், ஜீவனாகிலும், மரணமாகிலும்,
நிகழ்காரியங்களாகிலும், வருங்காரி
யங்களாகிலும், எல்லாம் உங்களுடை
யது; நீங்கள் கிறிஸ்துவினுடையவர் 23
கள்; கிறிஸ்து தேவனுடையவர்.
இப்படியாக, எந்த மனுஷனும் 4
எங்களைக் கிறிஸ்துவின் ஊழியக்கார
ரென்றும், தேவனுடைய இரகசியங்க
ளின் உக்கிராணக்காரரென்றும் எண்
ணிக்கொள்ளக்கடவன். மேலும், 2
உக்கிராணக்காரன் உண்மையுள்ளவ
னென்று காணப்படுவது அவனுக்கு
அவசியமாம். ஆயினும் நான் உங்க 3
ளாலேயாவது மனுஷருடைய நியாய
நாளின் விசாரணையினாலேயாவது தீர்ப்
பைப் பெறுவது எனக்கு மிகவும் அற்ப
காரியமாயிருக்கிறது; நானும் என்னைக்
குறித்துத் தீர்ப்புச்சொல்லுகிறதில்லை.
என்னிடத்தில் நான் யாதொரு குற்றத் 4
தையும் அறியேன்; ஆகிலும் அதினாலே
நான் நீதிமானாகிறதில்லை; என்னை நியா
யம் விசாரிக்கிறவர் கர்த்தரே. ஆன 5
தால், கர்த்தர் வருமளவும் நீங்கள் கால
த்துக்குமுன்னே யாதொன்றைக்குறித்
தும் தீர்ப்புச்சொல்லாதிருங்கள்; இரு
ளில் மறைந்திருக்கிறவைகளை அவர்
வெளியரங்கமாக்கி, இருதயங்களின்
யோசனைகளையும் வெளிப்படுத்துவார்;
அப்பொழுது அவனவனுக்குரிய புகழ்
ச்சி தேவனால் உண்டாகும்.
சகோதரரே, எழுதப்பட்டதற்கு 6
மிஞ்சி எண்ணவேண்டாமென்று நீங்
கள் எங்களாலே கற்றுக்கொள்ளவும்,
ஒருவனும் ஒருவனிமித்தம் மற்றொரு
வனுக்கு விரோதமாய் இறுமாப்படை
யாதிருக்கவும், நான் உங்கள் நிமித்தம்
என்னையும் அப்பொல்லோவையும் திரு
ஷ்டாந்தமாக வைத்து, இவைகளை எழு
தினேன். அன்றியும் உன்னை விசேஷித் 7
தவனாகும்படி செய்கிறவர் யார்? உன
க்கு உண்டாயிருக்கிறவைகளில் நீ பெற்
றுக்கொள்ளாதது யாது? நீ பெற்றுக்கொ
ண்டவனானால் பெற்றுக்கொள்ளாதவன்
போல் ஏன் மேன்மை பாராட்டுகிறாய்.
இப்பொழுது திருப்தியடைந்திருக்கி 8
றீர்களே, இப்பொழுது ஐசுவரியவான்
களாயிருக்கிறீர்களே, எங்களையல்லா
மல் ஆளுகிறீர்களே; நீங்கள் ஆளுகிற
வர்களானால் நலமாயிருக்கும், அப்பொ

முது உங்களுடனேகூட நாங்களும்
9 ஆளுவோமே. எங்களுக்குத் தோன்
றுகிறபடி தேவன் அப்போஸ்தலர்களா
கிய எங்களை மரணத்துக்குக் குறிக்கப்
பட்டவர்கள்போலக் கடைசியானவர்
களாய்க் காணப்படப் பண்ணினார்; நா
ங்கள் உலகத்துக்கும் தூதருக்கும் மனு
10 ஷருக்கும் வேடிக்கையானோம். நாங்
கள் கிறிஸ்துவினிமித்தம் பைத்தியக்கா
ரர், நீங்கள் கிறிஸ்துவில் புத்திசாலிகள்;
நாங்கள் பலவீனர், நீங்கள் பலவான்
கள்; நீங்கள் கனவான்கள், நாங்கள்
11 கனவீனர். இந்நேரம்வரைக்கும் பசி
யுள்ளவர்களும், தாகமுள்ளவர்களும்,
நிர்வாணிகளும், குட்டுண்டவர்களும்,
தங்க இடமில்லாதவர்களுமாயிருக்கி
12 றோம். எங்கள் கைகளினாலே வேலை
செய்து, பாடுபடுகிறோம்; வையப்ப
ட்டு, ஆசீர்வதிக்கிறோம்; துன்பப்பட்டு,
13 சகிக்கிறோம். தூஷிக்கப்பட்டு, வே
ண்டிக்கொள்ளுகிறோம்; இந்நாள்வரை
க்கும் உலகத்தின் குப்பையைப்போல
வும், எல்லாரும் துடைத்துப்போடுகிற
அழுக்கைப்போலவுமானோம்.
14 உங்களை வெட்கப்படுத்தும்படிக்கு
நான் இவைகளை எழுதவில்லை, நீங்கள்
எனக்குப் பிரியமான பிள்ளைகளென்று
உங்களுக்குப் புத்தி சொல்லுகிறேன்.
15 கிறிஸ்துவுக்குள் பதினாயிரம் உபாத்தி
யாயர்கள் உங்களுக்கு இருந்தாலும்,
தகப்பன்மார் அநேகர் உங்களுக்கு
இல்லையே; கிறிஸ்து இயேசுவுக்குள்
சுவிசேஷத்தினால் நான் உங்களைப் பெற்
16 றேன். ஆகையால், என்னைப் பின்பற்
றுகிறவர்களாகுங்களென்று உங்களுக்
குப் புத்தி சொல்லுகிறேன்.
17 இதினிமித்தமாக, எனக்குப் பிரிய
மும், கர்த்தருக்குள் உண்மையுமுள்ள
என் குமாரனாகிய தீமோத்தேயுவை
உங்களிடத்தில் அனுப்பினேன்; நான்
எங்கும் எந்தச் சபையிலும் போதித்து
வருகிற பிரகாரம் கிறிஸ்துவுக்குள்ளான
என் நடக்கைகளை அவன் உங்களுக்கு
ஞாபகப்படுத்துவான்.
18 நான் உங்களிடத்திற்கு வருகிறதி
ல்லை என்கிறதாகச் சிலர் இறுமாப்ப
டைந்திருக்கிறார்கள். ஆகிலும் கர்த்த 19
ருக்குச் சித்தமானால் நான் சீக்கிரமாய்
உங்களிடத்திற்கு வந்து, இறுமாப்ப
டைந்திருக்கிறவர்களுடைய பேச்சை
யல்ல, அவர்களுடைய பெலத்தையே
அறிந்துகொள்வேன். தேவனுடைய 20
ராஜ்யம் பேச்சிலே அல்ல, பெலத்திலே
உண்டாயிருக்கிறது. உங்களுக்கு 21
என்னவேண்டும்? நான் பிரம்போடு
உங்களிடத்தில் வரவேண்டுமோ? அல்
லது அன்போடும் சாந்தமுள்ள ஆவி
யோடும் வரவேண்டுமோ?

உங்களுக்குள்ளே விபசாரம் உண் 5
டென்று பிரசித்தமாய்ச் சொல்லப்படு
கிறதே; ஒருவன் தன் தகப்பனுடைய
மனைவியை வைத்துக்கொண்டிருக்கிறா
னே; அது அஞ்ஞானிகளுக்குள்ளும்
சொல்லப்படாத விபசாரமாயிருக்கிற
தே. இப்படிப்பட்ட காரியஞ்செய்த 2
வனை நீங்கள் உங்களைவிட்டு நீக்காம
லும் துக்கப்படாமலும், இறுமாப்ப
டைந்திருக்கிறீர்கள்.
நான் சரீரத்தினாலே உங்களுக்குத் 3
தூரமாயிருந்தும், ஆவியினாலே உங்க
ளோடேகூட இருக்கிறவனாய், இப்ப
டிச் செய்தவனைக்குறித்து நான் கூட
இருக்கிறதுபோல, நீங்களும், என்னு 4
டைய ஆவியும், நமது கர்த்தராகிய
இயேசுகிறிஸ்துவின் அதிகாரத்தோடே
கூடிவந்திருக்கையில், அப்படிப்பட் 5
டவனுடைய ஆவி கர்த்தராகிய இயே
சுகிறிஸ்துவின் நாளிலே இரட்சிக்கப்
படும்படி, மாம்சத்தின் அழிவுக்காக,
நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறி
ஸ்துவின் நாமத்தினாலே அவனைச் சாத்
தானுக்கு ஒப்புக்கொடுக்கவேண்டுமெ
ன்று தீர்ப்புச்செய்கிறேன்.
நீங்கள் மேன்மைபாராட்டுகிறது நல் 6
லதல்ல; கொஞ்சம் புளித்தமா பிசை
ந்தமா முழுவதையும் புளிப்பாக்குமெ
ன்று அறியீர்களா? ஆகையால், நீங் 7
கள் புளிப்பில்லாதவர்களாயிருக்கிறப
டியே, புதிதாய்ப் பிசைந்தமாவாயிருக்
கும்படிக்கு, பழைய புளித்தமாவைப்
புறம்பே கழித்துப்போடுங்கள். ஏனெ
னில் நம்முடைய பஸ்காவாகிய கிறி

ஸ்து நமக்காக பலியிடப்பட்டிருக்கிறா
8 ரே. ஆதலால் பழைய புளித்தமாவோ
டே அல்ல, துர்க்குணம் பொல்லாப்பு
என்னும் புளித்தமாவோடும் அல்ல,
துப்புரவு உண்மை என்னும் புளிப்பில்
லாத அப்பத்தோடே பண்டிகையை
ஆசரிக்கக்கடவோம்.
9 விபசாரக்காரரோடே கலந்திருக்கக்
கூடாதென்று நிருபத்தில் உங்களுக்கு
10 எழுதினேன். ஆனாலும், இவ்வுலகத்தி
லுள்ள விபசாரக்காரர், பொருளாசைக்
காரர், கொள்ளைக்காரர், விக்கிரகாராத
னைக்காரர் இவர்களோடு எவ்வளவும்
கலந்திருக்கக்கூடாதென்று நான் எழுத
வில்லை; அப்படியானால் நீங்கள் உல
கத்தைவிட்டு நீங்கிப்போகவேண்டிய
11 தாயிருக்குமே. நான் உங்களுக்கு எழு
தினதென்னவென்றால், சகோதரனென்
னப்பட்ட ஒருவன் விபசாரக்காரனாயா
வது, பொருளாசைக்காரனாயாவது, விக்
கிரகாராதனைக்காரனாயாவது, உதாசின
னாயாவது, வெறியனாயாவது, கொள்
ளைக்காரனாயாவது இருந்தால், அவனோ
டே கலந்திருக்கக்கூடாது; அப்படிப்
பட்டவனுடனே கூடப் புசிக்கவுங்
12 கூடாது. புறம்பே இருக்கிறவர்களைக்
குறித்துத் தீர்ப்புச்செய்கிறது என்காரி
யமா? உள்ளே இருக்கிறவர்களைக்குறித்
தல்லவோ நீங்கள் தீர்ப்புச்செய்கிறீர்
13 கள்? புறம்பே இருக்கிறவர்களைக்குறி
த்து தேவனே தீர்ப்புச்செய்வார். ஆகை
யால் அந்தப் பொல்லாதவனை உங்களை
விட்டுத் தள்ளிப்போடுங்கள்.
6 உங்களில் ஒருவனுக்கு வேறொருவ
னோடே வழக்குண்டானால், வழக்கா
டும்படி அவன் பரிசுத்தவான்களிடத்
தில் போகாமல், அநீதக்காரரிடத்தில்
2 போகத் துணிகிறதென்ன? பரிசுத்த
வான்கள் உலகத்தை நியாயந்தீர்ப்பார்
களென்று அறியீர்களா? உலகம் உங்க
ளால் நியாயந்தீர்க்கப்படுவதாயிருக்க,
அற்ப வழக்குகளைத் தீர்க்க நீங்கள்
3 அபாத்திரரா? தேவதூதர்களையும்
நியாயந்தீர்ப்போமென்று அறியீர்களா?
அப்படியிருக்க, இந்த ஜீவனுக்கேற்ற
வைகளை நீங்கள் தீர்த்துக்கொள்ளக்
கூடாதிருக்கிறது எப்படி? இந்த ஜீவ 4
னுக்கேற்ற வழக்குகள் உங்களுக்கு
இருந்தால், தீர்ப்புச் செய்கிறதற்கு,
சபையில் அற்பமாய் எண்ணப்பட்
டவர்களை நியமித்துக்கொள்ளுங்கள்.
உங்களுக்கு வெட்கம் உண்டாகும்படி 5
இதைச் சொல்லுகிறேன். சகோதரனுக்
கும் சகோதரனுக்கும் உண்டான வழக்
கைத் தீர்க்கத்தக்க விவேகி ஒருவ
னாகிலும் உங்களுக்குள் இல்லையா?
சகோதரனோடே சகோதரன் வழக்காடு 6
கிறான், அவிசுவாசிகளுக்கு முன்பாக
வும் அப்படிச் செய்கிறான். நீங்கள் 7
ஒருவரோடொருவர் வழக்காடுகிறது
எவ்விதத்திலும் குற்றமாயிருக்கிறது.
அப்படிச் செய்கிறதைவிட நீங்கள் ஏன்
அநியாயத்தைச் சகித்துக்கொள்ளுகிற
தில்லை, ஏன் நஷ்டத்தைப் பொறுத்துக்
கொள்ளுகிறதில்லை? நீங்களே அநியா 8
யஞ் செய்கிறீர்கள், நஷ்டப்படுத்துகிறீர்
கள்; சகோதரருக்கும் அப்படிச் செய்
கிறீர்களே. Mr. Henry. John
அநியாயக்காரர் தேவனுடைய ராஜ 9
யத்தைச் சுதந்தரிப்பதில்லையென்று
அறியீர்களா? வஞ்சிக்கப்படாதிருங்
கள்; வேசிமார்க்கத்தாரும், விக்கிரகாரா
தனைக்காரரும், விபசாரக்காரரும், சுய
புணர்ச்சிக்காரரும், ஆண்புணர்ச்சிக்
காரரும், திருடரும், பொருளாசைக் 10
காரரும், வெறியரும், உதாசினரும்,
கொள்ளைக்காரரும் தேவனுடைய ராஜ
யத்தைச் சுதந்தரிப்பதில்லை. உங்களில் 11
சிலர் இப்படிப்பட்டவர்களா யிருந்தீர்
கள்; ஆயினும் கர்த்தராகிய இயேசு
வின் நாமத்தினாலும், நமது தேவனு
டைய ஆவியினாலும் கழுவப்பட்டீர்
கள், பரிசுத்தமாக்கப்பட்டீர்கள், நீதி
மான்களாக்கப்பட்டீர்கள்.
எல்லாவற்றையும் அநுபவிக்க என 12
க்கு அதிகாரமுண்டு, ஆகிலும் எல்லாம்
தகுதியாயிராது; எல்லாவற்றையும் அநு
பவிக்க எனக்கு அதிகாரமுண்டு, ஆகி
லும் நான் ஒன்றிற்கும் அடிமைப்பட
மாட்டேன். வயிற்றுக்குப் போஜன 13
மும் போஜனத்துக்கு வயிறும் ஏற்கும்;
ஆனாலும் தேவன் இதையும் அதையும்

அழியப்பண்ணுவார். சரீரமோ வேசித்
தனத்திற்கல்ல, கர்த்தருக்கே உரியது;
14 கர்த்தரும் சரீரத்திற்கு உரியவர். தே
வன் கர்த்தரை எழுப்பினாரே, நம்மை
யும் தமது வல்லமையினாலே எழுப்பு
15 வார். உங்கள் சரீரங்கள் கிறிஸ்து
வின் அவயவங்களென்று அறியீர்களா?
அப்படியிருக்க, நான் கிறிஸ்துவின் அவ
யவங்களை வேசியின் அவயவங்களாக்
கலாமா? அப்படிச் செய்யலாகாதே.
16 வேசியோடு இசைந்திருக்கிறவன் அவ
ளுடனே ஒரே சரீரமாயிருக்கிறானென்று
அறியீர்களா? இருவரும் ஒரே மாம்ச
மாயிருப்பார்கள் என்று சொல்லியிருக்
17 கிறதே. அப்படியே கர்த்தரோடிசைந்
திருக்கிறவனும், அவருடனே ஒரே
18 ஆவியாயிருக்கிறான். வேசித்தனத்திற்கு
விலகியோடுங்கள். மனுஷன் செய்
கிற எந்தப்பாவமும் சரீரத்திற்குப் புறம்
பாயிருக்கும்; வேசித்தனஞ்செய்கிறவ
னோ தன் சுயசரீரத்திற்கு விரோதமாய்ப்
19 பாவஞ்செய்கிறான். உங்கள் சரீரமா
னது நீங்கள் தேவனாலே பெற்றும் உங்
களில் தங்கியும் இருக்கிற பரிசுத்த
ஆவியினுடைய ஆலயமாயிருக்கிறதெ
ன்றும், நீங்கள் உங்களுடையவர்களல்
20 லவென்றும் அறியீர்களா? கிரயத்துக்
குக்கொள்ளப்பட்டீர்களே; ஆகையால்
தேவனுக்கு உடையவைகளாகிய உங்
கள் சரீரத்தினாலும் உங்கள் ஆவியினா
லும் தேவனை மகிமைப்படுத்துங்கள்.

7 நீங்கள் எனக்கு எழுதின காரியங்
களைக்குறித்து நான் எழுதுகிறதென்ன
வென்றால், ஸ்திரீயைத் தொடாமலிருக்
2 கிறது மனுஷனுக்கு நல்லது. ஆகி
லும் வேசித்தனம் இராதபடிக்கு அவ
னவன் தன் சொந்த மனைவியையும்,
அவளவள் தன் சொந்தப் புருஷனை
யும் உடையவர்களாயிருக்கவேண்டும்.
3 புருஷன் தன் மனைவிக்குச் செய்யவே
ண்டிய கடமையைச் செய்யக்கடவன்;
அப்படியே மனைவியும் தன் புருஷனுக்
4 குச் செய்யக்கடவள். மனைவியான
வள் தன் சுயசரீரத்திற்கு அதிகாரியல்ல,
புருஷனே அதற்கு அதிகாரி; அப்படி
யே புருஷனும் தன் சுயசரீரத்திற்கு
அதிகாரியல்ல, மனைவியே அதற்கு அதி
காரி. உபாவசத்திற்கும் ஜெபத்திற் 5
கும் தடையிராதபடிக்கு இருவரும்
சிலகாலம் பிரிந்திருக்கவேண்டுமென்று
சம்மதித்தாலன்றி, ஒருவரைவிட்டு ஒரு
வர் பிரியாதிருங்கள்; உங்களுக்கு விர
தத்துவம் இல்லாமையால் சாத்தான்
உங்களைத் தூண்டிவிடாதபடிக்கு, மறு
படியும் கூடி வாழுங்கள். இதை நான் 6
கட்டளையாகச் சொல்லாமல், யோசனை
யாகச் சொல்லுகிறேன். எல்லா மனு 7
ஷரும் என்னைப்போலவே இருக்க
விரும்புகிறேன். ஆகிலும் அவனவனு
க்கு தேவனால் அருளப்பட்ட அவனவ
னுக்குரிய வரமுண்டு; அது ஒருவனு
க்கு ஒருவிதமாயும், மற்றொருவனுக்கு
வேறுவிதமாயும் இருக்கிறது.

விவாகமில்லாதவர்களையும், கைம் 8
பெண்களையும் குறித்து நான் சொல்லு
கிறது என்னவென்றால், அவர்கள் என்
னைப்போல இருந்துவிட்டால் அவர்க
ளுக்கு நலமாயிருக்கும். ஆகிலும் அவர் 9
கள் விரத்தராயிருக்கக் கூடாதிருந்தால்
விவாகம் பண்ணக்கடவர்கள்; வேகிற
தைப்பார்க்கிலும் விவாகம் பண்ணுகி
றது நலம். விவாகம் பண்ணிக்கொண் 10
டவர்களுக்கு நானல்ல, கர்த்தரே கட்
டளையிடுகிறதாவது: மனைவியானவள்
தன் புருஷனைவிட்டுப் பிரிந்துபோகக்
கூடாது. பிரிந்துபோனால் அவள் 11
விவாகமில்லாதிருக்கக்கடவள், அல்
லது புருஷனோடே ஒப்புரவாகக்கட
வள்; புருஷனும் தன் மனைவியைத்
தள்ளிவிடக்கூடாது.

மற்றவர்களைக்குறித்துக் கர்த்தர் 12
அல்ல, நானே சொல்லுகிறதாவது:
சகோதரனொருவனுடைய மனைவி அவி
சுவாசியாயிருந்தும், அவனுடனே வாச
மாயிருக்க அவளுக்குச் சம்மதமிருந்
தால், அவன் அவளைத் தள்ளிவிடாதி
ருக்கக்கடவன். அப்படியே ஒரு ஸ்திரீ 13
யினுடைய புருஷன் அவிசுவாசியாயி
ருந்தும், அவளுடனே வாசமாயிருக்க
அவனுக்குச் சம்மதமிருந்தால், அவள்
அவனைத் தள்ளிவிடாதிருக்கக்கடவள்.
என்னத்தினாலெனில், அவிசுவாசியான 14

புருஷன் தன் மனைவியால் பரிசுத்
தமாக்கப்படுகிறான். அவிசுவாசியான
மனைவியும் தன் புருஷனால் பரிசுத்த
மாக்கப்படுகிறாள். இல்லாவிட்டால்
உங்கள் பிள்ளைகள் அசுத்தமாயிருக்கு
மே; இப்பொழுதோ அவைகள் பரி
15 சுத்தமாயிருக்கின்றன. ஆகிலும், அவி
சுவாசி பிரிந்துபோனால் பிரிந்துபோ
கட்டும். இப்படிப்பட்ட விஷயத்தில்,
சகோதரனாவது சகோதரியாவது அடி
மைப்பட்டவர்களல்ல. சமாதானமா
யிருக்கும்படிக்கே தேவன் நம்மை
16 அழைத்திருக்கிறார். மனைவியானவளே,
நீ உன் புருஷனை இரட்சிப்பாயோ அல்
லவோ உனக்கு எப்படித் தெரியும்?
புருஷனே, நீ உன் மனைவியை இரட்
சிப்பாயோ அல்லவோ உனக்கு எப்
படித் தெரியும்?
17 தேவன் அவனவனுக்குப் பகிர்ந்த
தெப்படியோ, கர்த்தர் அவனவனை அ
ழைத்தெப்படியோ, அப்படியே அவ
னவன் நடக்கக்கடவன். எல்லாச்சபை
களிலேயும் இப்படியே திட்டம்பண்ணு
18 கிறேன். ஒருவன் விருத்தசேதனம் பெ
ற்றவனாய் அழைக்கப்பட்டிருந்தால்,
விருத்தசேதனமில்லாதவனாயிருக்க
வகைதேடானாக; ஒருவன் விருத்தசே
தனமில்லாதவனாய் அழைக்கப்பட்டி
ருந்தால், விருத்தசேதனம் பெறாதிருப்
19 பானாக. விருத்தசேதனமும் ஒன்று
மில்லை, விருத்தசேதனமில்லாமையும்
ஒன்றுமில்லை; தேவனுடைய கற்பனை
களைக் கைக்கொள்ளுகிறதே காரியம்.
20 அவனவன் தான் அழைக்கப்பட்ட நிலை
21 மையிலே நிலைத்திருக்கக்கடவன். அடி
மையாய் நீ அழைக்கப்பட்டிருந்தால்,
கவலைப்படாதே; நீ சுயாதீனனாகக் கூடு
மானால் அதை நலமென்று அநுசரித்
22 துக்கொள். கர்த்தருக்குள் அழைக்
கப்பட்ட அடிமையானவன் கர்த்தரு
டைய சுயாதீனனாயிருக்கிறான்; அப்
படியே அழைக்கப்பட்ட சுயாதீனன்
கிறிஸ்துவினுடைய அடிமையாயிருக்கி
23 றான். நீங்கள் கிரயத்துக்குக் கொள்
ளப்பட்டீர்கள்; மனுஷருக்கு அடிமை
24 களாகாதிருங்கள். சகோதரரே, அவன
வன் தான் அழைக்கப்பட்ட நிலைமை
யிலே தேவனுக்கு முன்பாக நிலைத்திருக்
கக்கடவன்.

அன்றியும் கன்னிகைகளைக்குறித்து, 25
கர்த்தரால் எனக்குக் கட்டளை இல்லை.
ஆகிலும் நான் உண்மையுள்ளவனாயி
ருக்கிறதற்குக் கர்த்தரால் இரக்கம்பெ
ற்று, என் அபிப்பிராயத்தைத் தெரி
யப்படுத்துகிறேன். அதென்னவெனில், 26
இப்பொழுது உண்டாயிருக்கிற துன்
பத்தினிமித்தம் விவாகமில்லாமலிருக்
கிறது மனுஷனுக்கு நலமாயிருக்கு
மென்று எண்ணுகிறேன். நீ மனைவி 27
யோடே கட்டப்பட்டிருந்தால், அவி
ழ்க்கப்பட வகைதேடாதே; நீ மனைவி
யில்லாதவனாயிருந்தால், மனைவியைத்
தேடாதே. நீ விவாகப்பண்ணினாலும் 28
பாவமல்ல, கன்னிகை விவாகம்பண்
ணினாலும் பாவமல்ல. ஆகிலும் அப்
படிப்பட்டவர்கள் சரீரத்திலே உபத்
திரவப்படுவார்கள்; அதற்கு நீங்கள்
தப்பவேண்டுமென்றிருக்கிறேன்.

மேலும், சகோதரரே, நான் சொல் 29
லுகிறதென்னவெனில், இனிவரும்
காலம் குறுகினதானபடியால், மனைவிக
ளுள்ளவர்கள் மனைவிகளில்லாதவர்
கள்போலவும், அழுகிறவர்கள் அழா 30
தவர்கள்போலவும், சந்தோஷப்படுகிற
வர்கள் சந்தோஷப்படாதவர்கள்போல
வும், கொள்ளுகிறவர்கள் கொள்ளாத
வர்கள்போலவும், இவ்வுலகத்தை அநு 31
பவிக்கிறவர்கள் அதைத் தகாதவிதமாய்
அநுபவியாதவர்கள்போலவும் இருக்க
வேண்டும்; இவ்வுலகத்தின் வேஷம்
கடந்துபோகிறதே.

நீங்கள் கவலையற்றவர்களாயிருக்க 32
விரும்புகிறேன். விவாகமில்லாதவன்
கர்த்தருக்கு எப்படிப் பிரியமாயிருக்க
லாமென்று, கர்த்தருக்குரியவைகளுக்
காகக் கவலைப்படுகிறான். விவாகம்பண் 33
ணினவன் தன் மனைவிக்கு எப்படிப்
பிரியமாயிருக்கலாமென்று, உலகத்திற்
குரியவைகளுக்காகக் கவலைப்படுகி
றான். அதுபோல, மனைவியானவளுக் 34
கும் கன்னிகைக்கும் வித்தியாசமுண்டு.
விவாகமில்லாதவள் சரீரத்திலும் ஆத்

துமாவிலும் பரிசுத்தமாயிருக்கும்படி,
கர்த்தருக்குரியவைகளுக்காகக் கவலைப்
படுகிறாள்; விவாகம்பண்ணினவள் தன்
புருஷனுக்கு எப்படிப் பிரியமாயிருக்
கலாமென்று, உலகத்திற்குரியவை
35 களுக்காகக் கவலைப்படுகிறாள். இதை
நான் உங்களைக் கண்ணியில் அகப்ப
டுத்த வேண்டுமென்று சொல்லாமல்,
உங்களுக்குத் தகுதியாயிருக்குமென்
றும், நீங்கள் கவலையில்லாமல் கர்த்
தரைப் பற்றிக்கொண்டிருக்கவேண்டு
மென்றும், உங்கள் சுயபிரயோஜனத்
துக்காகவே சொல்லுகிறேன்.
36 ஆகிலும் ஒருவன் தன் புத்திரியின்
கன்னிகைப்பருவம்கடந்துபோனதினா
லே, அவள் விவாகம்பண்ணாமலிருப்
பது அவளுக்குத் தகுதியல்லவென்றும்,
அவள் விவாகம்பண்ணுவது அவசிய
மென்றும் நினைத்தால், அவன் தன் மன
தின்படி செய்யக்கடவன்; அது பாவ
37 மல்ல, விவாகம்பண்ணட்டும். ஆயி
னும் அதற்கு அவசியத்தைக் காணாமல்,
தன் இருதயத்திலே உறுதியுள்ளவனா
யும், சுயசித்தத்தின்படி செய்ய அதிகார
முள்ளவனாயுமிருந்து, தன் புத்திரியின்
கன்னிகைப் பருவத்தைக் காக்கவே
ண்டுமென்று தன் இருதயத்தில் தீர்மா
38 னிக்கிறவன் நன்மை செய்கிறான். இப்
படியிருக்க, அவளை விவாகம்பண்ணிக்
கொடுக்கிறவனும் நன்மை செய்கிறான்;
கொடாமலிருக்கிறவனும் அதிக நன்
மை செய்கிறான்.
39 மனைவியானவள் தன் புருஷன் உயி
ரோடிருக்குங் காலமளவும் பிரமாணத்
தினால் கட்டப்பட்டிருக்கிறாள்; தன்
புருஷன் மரித்தபின்பு தனக்கு இஷ்ட
மானவனும் கர்த்தருக்குட்பட்டவனு
மாயிருக்கிற எவனையாகிலும் விவாகம்
பண்ணிக்கொள்ள விடுதலையாயிருக்கி
40 றாள். ஆகிலும் என்னுடைய அபிப்பி
ராயத்தின்படி அவள் அப்படியே இருந்
துவிட்டால் பாக்கியவதியாயிருப்பாள்.
என்னிடத்திலும் தேவனுடைய ஆவி
உண்டென்று எண்ணுகிறேன்.
8 விக்கிரகங்களுக்குப் படைக்கப்
பட்டவைகளைக் குறித்த விஷயத்தில்,
நம்மெல்லாருக்கும் அறிவு உண்டெ
ன்று நமக்குத் தெரியுமே. அறிவு இறு
மாப்பை உண்டாக்கும், அன்போ பக்தி
விருத்தியை உண்டாக்கும். ஒருவன் 2
தான் ஏதேனும் ஒன்றை அறிந்தவ
னென்று எண்ணிக்கொள்வானானால்,
ஒன்றையும் அறியவேண்டியபிரகார
மாக அவன் இன்னும் அறியவில்லை.
தேவனில் அன்புகூருகிறவனெவனோ, 3
அவன் தேவனால் அறியப்பட்டிருக்கி
றான். விக்கிரகங்களுக்குப் படைக்கப் 4
பட்டவைகளைப் புசிக்கிறவிஷயத்தைப்
பற்றி, உலகத்திலே விக்கிரகமானது
ஒன்றுமில்லையென்றும் ஒருவரேயன்றி
வேறொரு தேவன் இல்லை யென்றும்
அறிந்திருக்கிறோம். வானத்திலேயும் 5
பூமியிலேயும் தேவர்கள் என்னப்படு
கிறவர்கள் உண்டு; இப்படி அநேக
தேவர்களும் அநேக கர்த்தாக்களும்
உண்டாயிருந்தாலும், பிதாவாகிய 6
ஒரே தேவன் நமக்குண்டு, அவராலே
சகலமும் உண்டாயிருக்கிறது; அவ
ருக்கென்று நாமும் உண்டாயிருக்கி
றோம். இயேசுகிறிஸ்து என்னும் ஒரே
கர்த்தரும் நமக்குண்டு; அவர் மூல
மாய்ச் சகலமும் உண்டாயிருக்கிறது,
அவர் மூலமாய் நாமும் உண்டாயிருக்
கிறோம். ஆகிலும், இந்த அறிவு எல் 7
லாரிடத்திலும் இல்லை. சிலர் இற்றை
யவரைக்கும் விக்கிரகத்தை ஒரு பொரு
ளென்று எண்ணி, விக்கிரகத்துக்குப்
படைக்கப்பட்டதைப் புசிக்கிறார்கள்;
அவர்களுடைய மனச்சாட்சி பலவீன
மாயிருப்பதால் அசுசிப்படுகிறது.
போஜனமானது நம்மை தேவனுக்கு 8
உகந்தவர்களாக்கமாட்டாது; என்னத்
தினாலெனில், புசிப்பதினால் நமக்கு ஒரு
மேன்மையுமில்லை, புசியாதிருப்பதினால்
நமக்கு ஒரு குறைவுமில்லை. ஆகிலும் 9
இதைக்குறித்து உங்களுக்கு உண்டா
யிருக்கிற அதிகாரம் எவ்விதத்திலும்
பலவீனருக்குத் தடுக்கலாகாதபடிக்குப்
பாருங்கள். எப்படியெனில், அறிவுள் 10
ளவனாகிய உன்னை விக்கிரகக் கோவி
லிலே பந்தியிருக்க ஒருவன் கண்டால்,
பலவீனனாயிருக்கிற அவனுடைய மனச்

சாட்சி விக்கிரகங்களுக்குப் படைக்கப்
பட்டவைகளைப் புசிப்பதற்குத் துணிவு
11 கொள்ளுமல்லவா? பலவீனமுள்ள
சகோதரன் உன் அறிவினிமித்தம் கெட்
டுப்போகலாமா? அவனுக்காகக் கிறி
12 ஸ்து மரித்தாரே. இப்படிச் சகோதர
ருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்து,
பலவீனமுள்ள அவர்களுடைய மனச்
சாட்சியைப் புண்படுத்துகிறதினாலே,
நீங்கள் கிறிஸ்துவுக்கு விரோதமாய்ப்
13 பாவஞ்செய்கிறீர்கள். ஆதலால் போஜ
னம் என் சகோதரனுக்கு இடறலுண்
டாக்கினால், நான் என் சகோதரனுக்கு
இடறலுண்டாக்காதபடிக்கு, என்றைக்
கும் மாம்சம் புசியாதிருப்பேன்.

9 நான் அப்போஸ்தலனல்லவா? நான்
சுவாதீனனல்லவா? நம்முடைய கர்த்
தராகிய இயேசுகிறிஸ்துவை நான் தரி
சிக்கவில்லையா? கர்த்தருக்குள் நீங்கள்
என் கிரியையாயிருக்கிறீர்களல்லவா?
2 நான் மற்றவர்களுக்கு அப்போஸ்தலனு
யிராவிட்டாலும், உங்களுக்கல்லவோ
அப்போஸ்தலனாயிருக்கிறேன்; கர்த்தரு
க்குள் நீங்கள் என் அப்போஸ்தல ஊழி
யத்திற்கு முத்திரையாயிருக்கிறீர்களே.
3 என்னை நியாயம் விசாரிக்கிறவர்க
ளுக்கு நான் சொல்லுகிற மாறுத்தரமா
4 வது: புசிக்கவும் குடிக்கவும் எங்க
5 ளுக்கு அதிகாரமில்லையா? மற்ற அப்
போஸ்தலரும், கர்த்தருடைய சகோதர
ரும் கேபாவும் செய்கிறதுபோல, மனை
வியாகிய ஒரு சகோதரியைக் கூட்டிக்
கொண்டு திரிய எங்களுக்கும் அதிகார
6 மில்லையா? அல்லது, கைத்தொழில்
செய்யாதிருக்கிறதற்கு எனக்கும் பர்ன
பாவுக்கும் மாத்திரந்தானா அதிகார
மில்லை?
7 எவன் தன் சொந்தப்பணத்தைச்
செலவழித்து, தண்டிலே சேவகம்பண்
ணுவான்? எவன் திராட்சத்தோட்டத்
தை உண்டாக்கி, அதின் கனியில் புசி
யாதிருப்பான்? எவன் மந்தையை மேய்
த்து, அதின் பாலைச் சாப்பிடாதிருப்
8 பான்? இவைகளை மனுஷர் வழக்கத்
தின்படி சொல்லுகிறேனா? நியாயப்பிர
மாணமும் இவைகளைச் சொல்லுகிறதில்
லையா? போரடிக்கிற மாட்டை வாய் 9
கட்டாயாக என்று மோசேயின் பிரமா
ணத்திலே எழுதியிருக்கிறதே. தேவன்
மாடுகளுக்காகவே கவலையாயிருக்கிறா
ரோ? நமக்காகத்தான் இதைச் சொல் 10
லுகிறாரோ? உழுகிறவன் நம்பிக்கை
யோடே உழவும், போரடிக்கிறவன்
தான் நம்புகிறதில் பங்கடைவேன் என்
கிற நம்பிக்கையோடே போரடிக்கவும்
வேண்டியதே; ஆகையால், அது நமக்
காகவே எழுதியிருக்கிறது. நாங்கள் 11
உங்களுக்கு ஞானநன்மைகளை விதைத்
திருக்க, உங்கள் சரீரநன்மைகளை அறுத்
தால் அது பெரிய காரியமா? மற்ற 12
வர்கள் உங்களிடத்திலே இந்த அதிகா
ரத்தைச் செலுத்தினால், அவர்களிலும்
நாங்கள் அதிகமாய்ச் செலுத்தலாமல்
லவா? அப்படியிருந்தும், கிறிஸ்துவின்
சுவிசேஷத்திற்கு யாதொரு தடையும்
உண்டாகாதபடிக்கு, நாங்கள் இந்த
அதிகாரத்தைச் செலுத்தாமல் எல்லாப்
பாடும் படுகிறோம்.

ஆசாரிய ஊழியஞ்செய்கிறவர்கள் 13
தேவாலயத்திற்குரியவைகளில் புசிக்கி
றார்களென்றும், பலிபீடத்தை அடுத்
துப் பணிவிடை செய்கிறவர்களுக்குப்
பலிபீடத்திலுள்ளவைகளில் பங்குஉண்
டென்றும் அறியீர்களா? அந்தப்படி 14
யே சுவிசேஷத்தை அறிவிக்கிறவர்க
ளுக்குச் சுவிசேஷத்தினாலே பிழைப்பு
உண்டாகவேண்டுமென்று கர்த்தரும்
கட்டளையிட்டிருக்கிறார். அப்படியிருந் 15
தும், நான் இவைகளில் ஒன்றையும்
அநுபவிக்கவில்லை; இப்படி எனக்கு
நடக்கவேண்டுமென்று இவைகளை நான்
எழுதுகிறதுமில்லை. என் மேன்மை
பாராட்டலை ஒருவன் அவத்தமாக்கு
கிறதைப்பார்க்கிலும் சாகிறது எனக்கு
நலமாயிருக்கும். சுவிசேஷத்தை நான் 16
பிரசங்கித்துவந்தும், மேன்மைபாரா
ட்ட எனக்கு இடமில்லை; அது என்
மேல் விழுந்த கடமையாயிருக்கிறது;
சுவிசேஷத்தை நான் பிரசங்கியாதிருந்
தால், எனக்கு ஐயோ. நான் உற்சாக 17
மாய் அப்படிச் செய்தால் எனக்குப்
பலன் உண்டு; உற்சாகமில்லாதவனாய்ச்

செய்தாலும், உக்கிராண உத்தியோகம்
எனக்கு ஒப்புவிக்கப்பட்டிருக்கிறதே.
18 ஆதலால் எனக்குப் பலன் என்ன?
நான் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கை
யில் அதைப்பற்றி எனக்கு உண்டாயி
ருக்கிற அதிகாரத்தை முற்றிலும் செலு
த்தாமல், கிறிஸ்துவின் சுவிசேஷத்தைச்
செலவில்லாமல் ஸ்தாபிப்பதே எனக்
குப் பலன்.
19 நான் ஒருவருக்கும் அடிமைப்படா
தவனாயிருந்தும், நான் அதிக ஜனங்களை
ஆதாயப்படுத்திக்கொள்ளும்படிக்கு,
என்னைத்தானே எல்லாருக்கும் அடி
20 மையாக்கினேன். யூதரை ஆதாயப்ப
டுத்திக்கொள்ளும்படிக்கு யூதருக்கு யூ
தனைப்போலவும், நியாயப்பிரமாணத்
துக்குக் கீழ்ப்பட்டவர்களை ஆதாயப்ப
டுத்திக்கொள்ளும்படிக்கு நியாயப்பிர
மாணத்துக்குக் கீழ்ப்பட்டவனைப்போ
21 லவுமானேன். நியாயப்பிரமாணமில்
லாதவர்களை ஆதாயப்படுத்திக்கொள்ளு
ம்படிக்கு அவர்களுக்கு நியாயப்பிரமா
ணம் இல்லாதவனைப்போலவுமானேன்
அப்படியிருந்தும், நான் தேவனுக்கு
முன்பாக நியாயப்பிரமாணமில்லாதவ
னாயிராமல், கிறிஸ்துவின் பிரமாணத்
22 துக்குள்ளானவனாயிருக்கிறேன். பலவீ
னரை ஆதாயப்படுத்திக்கொள்ளும்படிக்
குப் பலவீனருக்குப் பலவீனனைப்போ
லானேன்; எப்படியாகிலும் சிலரை
இரட்சிக்கும்படிக்கு நான் எல்லாருக்
23 கும் எல்லாமானேன். சுவிசேஷத்தில்
நான் உடன் பங்காளியாகும்படிக்கு,
அதினிமித்தமே இப்படிச் செய்கிறேன்.
24 பந்தயச்சாலையில் ஓடுகிறவர்களெல்
லாரும் ஓடுவார்கள்; ஆகிலும், ஒருவ
னே பந்தயத்தைப் பெறுவானென்று
அறியீர்களா? நீங்கள் பெற்றுக்கொள்
25 ளத்தக்கதாக ஓடுங்கள். பந்தயத்திற்
குப் போராடுகிற யாவரும் எல்லாவற்றி
லேயும் இச்சையடக்கமாயிருப்பார்
கள். அவர்கள் அழிவுள்ள கிரீடத்தைப்
பெறும்படிக்கு அப்படிச் செய்கிறார்
கள், நாமோ அழிவில்லாத கிரீடத்தைப்
பெறும்படிக்கு அப்படிச் செய்கிறோம்.
26 ஆதலால் நான் நிச்சயமில்லாதவனாக
ஓடேன்; ஆகாயத்தை அடிக்கிறவனா
கச் சிலம்பம்பண்ணேன். மற்றவர்க 27
ளுக்குப் பிரசங்கம்பண்ணுகிற நான்தா
னே ஆகாதவனாய்ப் போகாதபடிக்கு,
என் சரீரத்தை ஒடுக்கிக் கீழ்ப்படுத்துகி
றேன்

இப்படியிருக்க, சகோதரரே, நீங் 10
கள் எவைகளை அறியவேண்டுமென்றி
ருக்கிறேனென்றால்; நம்முடைய பிதாக்
களெல்லாரும் மேகத்துக்குக் கீழாயிரு
ந்தார்கள், எல்லாரும் சமுத்திரத்தின்
வழியாய் நடந்துவந்தார்கள். எல்லா 2
ரும் மோசேக்குள்ளாக மேகத்தினாலும்
சமுத்திரத்தினாலும் ஞானஸ்நானப்பண்
ணப்பட்டார்கள். எல்லாரும் ஒரே 3
ஞானபோஜனத்தைப் புசித்தார்கள்.
எல்லாரும் ஒரே ஞானபானத்தைக் 4
குடித்தார்கள். எப்படியெனில் அவர்க
ளோடே கூடச்சென்ற ஞானக் கன்மலை
யின் தண்ணீரைக் குடித்தார்கள்; அந்
தக் கன்மலை கிறிஸ்துவே அப்படியிரு 5
ந்தும், அவர்களில் அதிகமானபேர்களி
டத்தில் தேவன் பிரியமாயிருந்ததில்லை;
ஆதலால் வனாந்தரத்திலே அவர்கள்
அழிக்கப்பட்டார்கள்.
அவர்கள் இச்சித்ததுபோல நாமும் 6
பொல்லாங்கானவைகளை இச்சியாதபடி
க்கு, இவைகள் நமக்குத் திருஷ்டாந்
தங்களாயிருக்கிறது. ஜனங்கள் புசிக் 7
கவும் குடிக்கவும் உட்கார்ந்து விளை
யாட எழுந்திருந்தார்கள் என்று எழுதி
யிருக்கிறபடி, அவர்களில் சிலர் விக்கிர
காராதனைக்காரரானதுபோல நீங்க
ளும் ஆகாதிருங்கள். அவர்களில் சிலர் 8
வேசித்தனம்பண்ணி, ஒரேநாளில் இரு
பத்துமூவாயிரம்பேர் விழுந்துபோனார்
கள்; அதுபோல நாமும் வேசித்தனம்
பண்ணாதிருப்போமாக. அவர்களில் 9
சிலர் கிறிஸ்துவைப் பரீட்சைபார்த்து,
பாம்புகளால் அழிக்கப்பட்டார்கள்;
அதுபோல நாமும் கிறிஸ்துவைப் பரீட்
சைபாராதிருப்போமாக. அவர்களில் 10
சிலர் முறுமுறுத்து, சங்காரக்காரனாலே
அழிக்கப்பட்டார்கள்; அதுபோல் நீங்க
ளும் முறுமுறுக்காதிருங்கள். இவைக 11
ளெல்லாம் திருஷ்டாந்தங்களாக அவர்

களுக்குச் சம்பவித்தது; உலகத்தின்
முடிவுகாலத்திலுள்ள நமக்கு எச்சரிப்
புண்டாக்கும்படி எழுதப்பட்டும் இருக்
12 கிறது. இப்படியிருக்க, தன்னை நிற்கிற
வனென்று எண்ணுகிறவன் விழாதபடி
க்கு எச்சரிக்கையாயிருக்கக்கடவன்.
13 மனுஷருக்கு நேரிடுகிற சோதனையே
யல்லாமல் வேறே சோதனை உங்களு
க்கு நேரிடவில்லை. தேவன் உண்மை
யுள்ளவராயிருக்கிறார்; உங்கள் திரா
ணிக்கு மேலாக நீங்கள் சோதிக்கப்படு
கிறதற்கு அவர் இடங்கொடாமல், சோ
தனையைத் தாங்கத்தக்கதாக, சோதனை
யோடுகூட அதற்குத் தப்பிக்கொள்ளும்
படியான போக்கையும் உண்டாக்கு
வார்.
14 ஆகையால் எனக்குப் பிரியமானவர்
களே, விக்கிரகாராதனைக்கு விலகி ஓடு
15 ங்கள். உங்களைப் புத்திமான்களென்று
எண்ணிப் பேசுகிறேன்; நான் சொல்லு
கிறதை நீங்களே நிதானித்துப் பாருங்
16 கள். நாம் ஆசீர்வதிக்கிற ஆசீர்வாதத்
தின் பாத்திரம் கிறிஸ்துவினுடைய இர
த்தத்தின் ஐக்கியமாயிருக்கிறதல்லவா?
நாம் பிட்கிற அப்பம் கிறிஸ்துவினு
டைய சரீரத்தின் ஐக்கியமாயிருக்கிற
17 தல்லவா? அந்த ஒரே அப்பத்தில் நா
மெல்லாரும் பங்குபெறுகிறபடியால்,
அநேகரான நாம் ஒரே அப்பமும் ஒரே
18 சரீரமுமாயிருக்கிறோம். மாம்சத்தின்
படியான இஸ்ரவேலரைப் பாருங்கள்;
பலிகளைப் புசிக்கிறவர்கள் பலிபீடத்
தோடே ஐக்கியமாயிருக்கிறார்களல்
லவா?
19 இப்படியிருக்க, விக்கிரகம் ஒரு பொ
ருளென்றும், விக்கிரகத்துக்குப் படைக்
கப்பட்டது ஒரு பொருளென்றும் நான்
20 சொல்லுகிறேனோ? அஞ்ஞானிகள் பலி
யிடுகிறவைகளை தேவனுக்கு அல்ல,
பேய்களுக்கே பலியிடுகிறார்களென்று
சொல்லுகிறேன்; நீங்கள் பேய்களோ
டே ஐக்கியமாயிருக்க எனக்கு மன
21 தில்லை. நீங்கள் கர்த்தருடைய பாத்தி
ரத்திலும் பேய்களுடைய பாத்திரத்தி
லும் பானம்பண்ணக்கூடாதே; நீங்கள்
கர்த்தருடைய போஜனபந்திக்கும் பேய்
களுடைய போஜனபந்திக்கும் பங்குள்
ளவர்களாயிருக்கக்கூடாதே. நாம் கர் 22
த்தருக்கு எரிச்சலை மூட்டலாமா? அவ
ரிலும் நாம் பலவான்களா? Refer P. 26
எல்லாவற்றையும் அநுபவிக்க என 23
க்கு அதிகாரமுண்டு, ஆகிலும் எல்லாம்
தகுதியாயிராது; எல்லாவற்றையும் அநு
பவிக்க எனக்கு அதிகாரமுண்டு, ஆகி
லும் எல்லாம் பக்திவிருத்தியை உண்
டாக்காது. ஒவ்வொருவனும் தன் சுய 24
பிரயோஜனத்தைத் தேடாமல், பிறனு
டைய பிரயோஜனத்தைத் தேடக்கட
வன்.
கடையிலே விற்கப்படுகிற எதையும் 25
வாங்கிப் புசியுங்கள்; மனச்சாட்சியினி
மித்தம் நீங்கள் ஒன்றையும் விசாரிக்க
வேண்டியதில்லை. பூமியும் அதின் 26
நிறைவும் கர்த்தருடையது.
அன்றியும் அவிசுவாசிகளில் ஒருவன் 27
உங்களை விருந்துக்கு அழைக்கும்போது,
போக உங்களுக்கு மனதிருந்தால், மனச்
சாட்சியினிமித்தம் ஒன்றையும் விசாரி
யாமல், உங்கள் முன் வைக்கப்படுகிற
எதையும் புசியுங்கள். ஆயினும் இது 28
விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்ட
தென்று ஒருவன் உங்களுக்குச் சொன்
னால், அப்படி அறிவித்தவனிமித்த
மும் மனச்சாட்சியினிமித்தமும் புசி
யாதிருங்கள்; பூமியும் அதின் நிறைவும்
கர்த்தருடையது. உன்னுடைய மனச் 29
சாட்சியைக்குறித்து நான் இப்படிச்
சொல்லாமல், மற்றொருவனுடைய
மனச்சாட்சியைக்குறித்தே சொல்லுகி
றேன். என் சுயாதீனம் மற்றொருவனு
டைய மனச்சாட்சியினாலே குற்றமாய்
எண்ணப்படவேண்டுவதென்ன? மே 30
லும் நான் அதை ஸ்தோத்திரிப்புடனே
அநுபவித்தால், ஸ்தோத்திரித்து அநுப
விக்கிற பொருளைக்குறித்து நான் தூஷிக்
கப்படுவானேன்?
ஆகையால் நீங்கள் புசித்தாலும், 31
குடித்தாலும், எதைச் செய்தாலும், எல்
லாவற்றையும் தேவனுடைய மகிமைக்
கென்று செய்யுங்கள். நான் என் சுய 32
பிரயோஜனத்தைத் தேடாமல், அநே
கருடைய பிரயோஜனத்தைத் தேடி,

அவர்கள் இரட்சிக்கப்படும்படிக்கு,
எவ்விதத்திலும் எல்லாருக்கும் பிரிய
33 மாய் நடக்கிறதுபோல; நீங்களும் யூத
ருக்கும், கிரேக்கருக்கும், தேவனுடைய
சபைக்கும், இடறலற்றவர்களாயிருங்
கள்.

11 நான் கிறிஸ்துவைப் பின்பற்றுகிறது
போல, நீங்கள் என்னைப் பின்பற்றுகிற
வர்களாயிருங்கள்.
2 சகோதரரே, நீங்கள் எல்லாவற்றி
லும் என்னை நினைத்துக்கொண்டு, நான்
உங்களுக்கு ஒப்புவித்தபடி நீங்கள் கட்
டளைகளைக் கைக்கொண்டு வருகிறதினி
3 மித்தம் உங்களைப் புகழுகிறேன். ஒவ்
வொரு புருஷனுக்கும் கிறிஸ்து தலையா
யிருக்கிறாரென்றும், ஸ்திரீக்குப் புரு
ஷன் தலையாயிருக்கிறானென்றும், கிறி
ஸ்துவுக்கு தேவன் தலையாயிருக்கிறாரெ
ன்றும், நீங்கள் அறியவேண்டுமென்று
4 விரும்புகிறேன். ஜெபம்பண்ணுகிற
போதாவது, தீர்க்கதரிசனஞ் சொல்லு
கிறபோதாவது, தன் தலையை மூடிக்
கொண்டிருக்கிற எந்தப் புருஷனும்
தன் தலையைக் கனவீனப்படுத்துகிறான்
5 ஜெபம்பண்ணுகிறபோதாவது, தீர்க்க
தரிசனஞ் சொல்லுகிறபோதாவது, தன்
தலையை மூடிக்கொள்ளாதிருக்கிற எந்த
ஸ்திரீயும் தன் தலையைக் கனவீனப்படுத்
துகிறாள்; அது அவளுக்குத் தலை சிரைக்
6 கப்பட்டதுபோலிருக்குமே. ஸ்திரீயான
வள் முக்காடிட்டுக்கொள்ளாவிட்டால்
தலைமயிரையும் கத்தரித்துப் போடக்
கடவள்; தலைமயிர் கத்தரிக்கப்படு
கிறதும் சிரைக்கப்படுகிறதும் ஸ்திரீக்கு
வெட்கமானால் முக்காடிட்டுக்கொண்
7 டிருக்கக்கடவள். புருஷனானவன் தே
வனுடைய சாயலும் மகிமையுமாயிருக்
கிறபடியால், தன் தலையை மூடிக்கொ
ள்ள வேண்டுவதில்லை; ஸ்திரீயானவள்
புருஷனுடைய மகிமையாயிருக்கிறாள்.
8 புருஷன் ஸ்திரீயிலிருந்து தோன்றினவ
னல்ல, ஸ்திரீயே புருஷனிலிருந்து தோ
9 ன்றினவள். புருஷன் ஸ்திரீக்காகச்
சிருஷ்டிக்கப்பட்டவனல்ல, ஸ்திரீயே
புருஷனுக்காகச் சிருஷ்டிக்கப்பட்ட
10 வள். ஆகையால் தூதர்களினிமித்தம்
ஸ்திரீயானவள் தலையின்மேல் முக்கா
டிட்டுக்கொள்ளவேண்டும். ஆகிலும் 11
கர்த்தருக்குள் ஸ்திரீயில்லாமல் புரு
ஷனுமில்லை, புருஷனில்லாமல் ஸ்திரீயு
மில்லை. ஸ்திரீயானவள் புருஷனிலி 12
ருந்து தோன்றுகிறதுபோல, புருஷனும்
ஸ்திரீயினால் தோன்றுகிறான்; சகலமும்
தேவனால் உண்டாயிருக்கிறது. ஸ்திரீ 13
யானவள் தேவனை நோக்கி ஜெபம்பண்
ணுகையில், தன் தலையை மூடிக்கொள்
ளாமலிருக்கிறது இலட்சணமாயிருக்கு
மோ என்று உங்களுக்குள்ளே நிதா
னித்துக்கொள்ளுங்கள். புருஷன் மயி 14
ரை நீளமாய் வளர்க்கிறது அவனுக்குக்
கனவீனமாயிருக்கிறதென்றும், ஸ்திரீ 15
தன் மயிரை நீளமாய் வளர்க்கிறது அவ
ளுக்கு மகிமையாயிருக்கிறதென்றும்
சுபாவமே உங்களுக்குப் போதிக்கிற
தில்லையா? தலைமயிர் அவளுக்கு முக்கா
டாகக் கொடுக்கப்பட்டிருக்கிறதே.
ஆகிலும் ஒருவன் வாக்குவாதஞ்செ 16
ய்ய மனதாயிருந்தால், எங்களுக்கும்,
தேவனுடைய சபைகளுக்கும், அப்ப
டிப்பட்ட வழக்கமில்லையென்று அறி
யக்கடவன்.
உங்களைப் புகழாமல் இதைக்குறித்து 17
உங்களுக்கு கட்டளைகொடுக்கிறேன்;
நீங்கள் கூடிவருதல் நன்மைக்கேதுவா
யிராமல், தீமைக்கேதுவாயிருக்கிறதே.
முதலாவது, நீங்கள் சபையிலே கூடி 18
வந்திருக்கும்போது, உங்களில் பிரி
வினைகள் உண்டென்று கேள்விப்படு
கிறேன்; அதில் சிலவற்றை நம்புகி
றேன். உங்களில் உத்தமர்கள் இன் 19
னாரென்று வெளியாகும்படிக்கு பார்க்க
பேதங்களும் உங்களுக்குள்ளே உண்
டாயிருக்கவேண்டியதே.
நீங்கள் ஓரிடத்தில் கூடிவரும்போது, 20
அவனவன் தன்தன் சொந்த போஜனத்
தை முந்திச் சாப்பிடுகிறான்; ஒருவன்
பசியாயிருக்கிறான், ஒருவன் வெறியா
யிருக்கிறான். இப்படிச் செய்கிறது 21
கர்த்தருடைய இராப்போஜனம் பண்
ணுதலல்லவே. புசிக்கிறதற்கும் குடிக் 22
கிறதற்கும் உங்களுக்கு வீடுகள் இல்லை
யா? தேவனுடைய சபையை அசட்

டைபண்ணி, இல்லாதவர்களை வெட்கப்
படுத்துகிறீர்களா? உங்களுக்கு நான்
என்ன சொல்லுவேன்? இதைக்குறித்து
உங்களைப் புகழ்வேனோ? புகழேன்.
23 நான் உங்களுக்கு ஒப்புவித்ததைக்
கர்த்தரிடத்தில் பெற்றுக்கொண்டேன்;
என்னவெனில், கர்த்தராகிய இயேசு
தாம் காட்டிக்கொடுக்கப்பட்ட அன்று
இராத்திரியிலே அப்பத்தை எடுத்து,
24 ஸ்தோத்திரம்பண்ணி, அதைப் பிட்டு:
நீங்கள் வாங்கிப் புசியுங்கள், இது உங்
களுக்காகப் பிட்கப்படுகிற என்னு
டைய சரீரமாயிருக்கிறது; என்னை நினை
வுகூரும்படி இதைச் செய்யுங்கள் என்
25 றார். போஜனம் பண்ணினபின்பு,
அவர் அந்தப்படியே பாத்திரத்தையும்
எடுத்து: இந்தப் பாத்திரம் என் இரத்
தத்தினாலாகிய புதிய உடன்படிக்கை
யாயிருக்கிறது; நீங்கள் இதைப் பானம்
பண்ணும்போதெல்லாம் என்னை நினைவு
கூரும்படி இதைச் செய்யுங்கள் என்
26 றார். ஆகையால் நீங்கள் இந்த அப்
பத்தைப் புசித்து, இந்தப் பாத்திரத்தில்
பானம்பண்ணும்போதெல்லாம் கர்த்தர்
வருமளவும் அவருடைய மரணத்
தைத் தெரிவிக்கிறீர்கள்.
27 இப்படியிருக்க, எவன் அபாத்திர
மாய்க் கர்த்தருடைய அப்பத்தைப் புசி
த்து, அவருடைய பாத்திரத்தில் பானம்
பண்ணுகிறானோ, அவன் கர்த்தருடைய
சரீரத்தையும் இரத்தத்தையும் குறித்
28 துக் குற்றமுள்ளவனாயிருப்பான். எந்த
மனுஷனும் தன்னைத்தானே சோதித்
தறிந்து, இந்த அப்பத்தில் புசித்து, இந்
தப் பாத்திரத்தில் பானம்பண்ணக்கட
29 வன். என்னத்தினாலெனில், அபாத்திர
மாய்ப் போஜனபானம்பண்ணுகிறவன்,
கர்த்தருடைய சரீரம் இன்னதென்று
நிதானித்து அறியாததினால், தனக்கு
ஆக்கினைத்தீர்ப்பு வரும்படி போஜன
30 பானம்பண்ணுகிறான். இதினிமித்தம்,
உங்களில் அநேகர் பலவீனரும் வியாதி
யுள்ளவர்களுமாயிருக்கிறார்கள்; அநே
கர் நித்திரையும் அடைந்திருக்கிறார்கள்.
31 நம்மை நாமே நிதானித்து அறிந்தால்
32 நாம் நியாயந்தீர்க்கப்படோம். நாம்
நியாயந் தீர்க்கப்படும்போது உலகத்
தோடே ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்
படாதபடிக்கு, கர்த்தராலே சிட்சிக்கப்
படுகிறோம். ஆகையால், என் சகோ 33
தரரே, நீங்கள் போஜனம்பண்ணக் கூடி
வரும்போது, ஒருவருக்காக ஒருவர்
காத்திருங்கள். நீங்கள் ஆக்கினைக் 34
கேதுவாகக் கூடிவராதபடிக்கு, ஒருவ
னுக்குப் பசியிருந்தால் வீட்டிலே சாப்
பிடக்கடவன். மற்றக் காரியங்களை
நான் வரும்போது திட்டம் பண்ணு
வேன்.

அன்றியும், சகோதரரே, ஆவிக்கு 12
ரிய வரங்களைக்குறித்து நீங்கள் அறியா
திருக்க எனக்கு மனதில்லை. நீங்கள் 2
அஞ்ஞானிகளாயிருந்தபோது ஏவப்ப
ட்டபடியே, ஊமையான விக்கிரகங்க
ளிடத்தில் மனதைச் செலுத்தினீர்களெ
ன்று உங்களுக்குத் தெரியுமே. ஆத 3
லால், தேவனுடைய ஆவியினாலே பேசு
கிற எவனும் இயேசுவைச் சபிக்கப்
பட்டவனென்றுசொல்லமாட்டானென்
றும், பரிசுத்தஆவியினாலேயன்றி இயே
சுவைக் கர்த்தரென்று, ஒருவனும் சொல்
லக்கூடாதென்றும், உங்களுக்குத் தெரி
விக்கிறேன்.

வரங்களில் வித்தியாசங்கள் உண்டு, 4
ஆவியானவர் ஒருவரே. ஊழியங்களி 5
லேயும் வித்தியாசங்கள் உண்டு, கர்த்
தர் ஒருவரே. கிரியைகளிலேயும் வித் 6
தியாசங்கள் உண்டு, எல்லாருக்குள்
ளும் எல்லாவற்றையும் நடப்பிக்கிற
தேவன் ஒருவரே.

ஆவியினுடைய அநுக்கிரகம் அவ 7
னவனுடைய பிரயோஜனத்திற்கென்று
அளிக்கப்பட்டிருக்கிறது. எப்படியெ 8
னில், ஒருவனுக்கு ஆவியினாலே ஞானத்
தைப் போதிக்கும் வசனமும், வேறொ
ருவனுக்கு அந்த ஆவியினாலேயே அறி
வை உணர்த்தும் வசனமும், வேறொ 9
ருவனுக்கு அந்த ஆவியினாலேயே விசு
வாசமும், வேறொருவனுக்கு அந்த ஆவி
யினாலேயே குணமாக்கும் வரங்களும்,
வேறொருவனுக்கு அற்புதங்களைச் செய் 10
யும் சக்தியும், வேறொருவனுக்குத் தீர்க்
கதரிசனம் உரைத்தலும், வேறொருவ

னுக்கு ஆவிகளைப் பகுத்தறிதலும், வே
றொருவனுக்குப் பற்பல பாஷைகளைப்
பேசுதலும், வேறொருவனுக்குப் பாஷை
களை வியாக்கியானம்பண்ணுதலும்
11 அளிக்கப்படுகிறது. இவைகளையெல்
லாம் அந்த ஒரே ஆவியானவர் நடப்
பித்து, தமது சித்தத்தின்படியே அவனவ
னுக்குப் பகிர்ந்துகொடுக்கிறார்.
12 எப்படியெனில், சரீரம் ஒன்று, அத
ற்கு அவயவங்கள் அநேகம்; ஒரே
சரீரத்தின் அவயவங்களெல்லாம் அநே
கமாயிருந்தும், சரீரம் ஒன்றாகவேயிரு
க்கிறது; அந்தப்பிரகாரமாகக் கிறிஸ்து
13 வும் இருக்கிறார். நாம் யூதராயினும்,
கிரேக்கராயினும், அடிமைகளாயினும்,
சுயாதீனராயினும், எல்லாரும் ஒரே
ஆவியினாலே ஒரே சரீரத்திற்குள்ளாக
ஞானஸ்நானம் பண்ணப்பட்டு, எல்லா
ரும் ஒரே ஆவிக்குள்ளாகவே தாகந்
தீர்க்கப்பட்டோம்.
14 சரீரமும் ஒரே அவயவமாயிராமல்
15 அநேக அவயவங்களாயிருக்கிறது. கா
லானது நான் கையாயிராதபடியினாலே,
நான் சரீரத்தின் அவயவமல்லவென்
றால், அதினாலே அது சரீரத்தின் அவய
16 வமாயிராதோ? காதானது நான் கண்
ணாயிராதபடியினாலே, நான் சரீரத்தின்
அவயவமல்லவென்றால், அதினாலே
அது சரீரத்தின் அவயவமாயிராதோ?
17 சரீரம் முழுவதும் கண்ணானால், செவி
எங்கே? அது முழுவதும் செவியானால்,
18 மோப்பம் எங்கே? தேவன் தமது சித்
தத்தின்படி அவயவங்கள் ஒவ்வொன்
19 றையும் சரீரத்திலே வைத்தார். அவை
யெல்லாம் ஒரே அவயவமாயிருந்தால்,
20 சரீரம் எங்கே? அவயவங்கள் அநேக
21 மாயிருந்தும், சரீரம் ஒன்றே. கண்ணா
னது கையைப் பார்த்து: நீ எனக்கு
வேண்டுவதில்லை யென்றும்; தலையானது
கால்களை நோக்கி: நீங்கள் எனக்கு
வேண்டுவதில்லையென்றும் சொல்லக்கூ
22 டாது. சரீர அவயவங்களில் பலவீன
முள்ளவைகளாய்க் காணப்படுகிறவை
களே மிகவும் வேண்டியவைகளாயிருக்
23 கிறது. மேலும், சரீர அவயவங்களில்
கனவீனமாய்க் காணப்படுகிறவைகளு
க்கே அதிக கனத்தைக் கொடுக்கிறோம்;
நம்மில் இலட்சணமில்லாதவைகளே
அதிக அலங்காரம் பெறும்; நம்மில் 24
இலட்சணமுள்ளவைகளுக்கு அலங்க
ரிப்பு வேண்டியதில்லை. சரீரத்திலே பிரி 25
வினையுண்டாயிராமல், அவயவங்கள்
ஒன்றைக்குறித்து ஒன்று கவலையாயிருக்
கும்படிக்கு, தேவன் கனத்தில் குறை
வுள்ளதற்கு அதிக கனத்தைக் கொடுத்து,
இப்படிச் சரீரத்தை அமைத்திருக்கிறார்.
ஆதலால் ஒரு அவயவம் பாடுபட்டால் 26
எல்லா அவயவங்களும் கூடப் பாடு
படும்; ஒரு அவயவம் மகிமைப்பட்
டால் எல்லா அவயவங்களும் கூடச்
சந்தோஷப்படும்.
நீங்களே கிறிஸ்துவின் சரீரமாயும், 27
தனித்தனியே அவயவங்களாயுமிருக்
கிறீர்கள். தேவனானவர் சபையிலே 28
முதலாவது அப்போஸ்தலரையும், இர
ண்டாவது தீர்க்கதரிசிகளையும், மூன்றா
வது போதகர்களையும், பின்பு அற்புதங்
களையும், பின்பு குணமாக்கும் வரங்க
ளையும், ஊழியங்களையும், ஆளுகைகளை
யும், பலவித பாஷைகளையும் ஏற்படுத்தி
னார். எல்லாரும் அப்போஸ்தலர்களா? 29
எல்லாரும் தீர்க்கதரிசிகளா? எல்லா
ரும் போதகர்களா? எல்லாரும் அற்
புதங்களைச் செய்கிறவர்களா? எல்லா 30
ரும் குணமாக்கும் வரங்களுடையவர்
களா? எல்லாரும் அந்நியபாஷைகளைப்
பேசுகிறார்களா? எல்லாரும் வியாக்கி
யானம் பண்ணுகிறார்களா?
இப்படியிருக்க, முக்கியமான வரங் 31
களை நாடுங்கள்; இன்னும் அதிக மேன்
மையான வழியையும் உங்களுக்குக்
காண்பிக்கிறேன்.
நான் மனுஷர் பாஷைகளையும் தூதர் 13
பாஷைகளையும் பேசினாலும், அன்பு
எனக்கிராவிட்டால், சத்தமிடுகிற வெ
ண்கலம்போலவும், ஓசையிடுகிற கைத்
தாளம்போலவும் இருப்பேன். நான்
தீர்க்கதரிசன வரத்தை உடையவனா
யிருந்து, சகல இரகசியங்களையும், சகல
அறிவையும் அறிந்தாலும்; மலைகளைப்
பேர்க்கத்தக்கதாக சகல விசுவாசமு
முள்ளவனாயிருந்தாலும், அன்பு எனக்

3 கிராவிட்டால் நான் ஒன்றுமில்லை. என
க்கு உண்டான யாவற்றையும் நான்
அன்னதானம் பண்ணினாலும், என் சரீ
ரத்தைச் சுட்டெரிக்கப்படுவதற்குக்
கொடுத்தாலும், அன்பு எனக்கிராவிட்
டால் எனக்குப் பிரயோஜனம் ஒன்று
மில்லை.
4 அன்பு நீடிய சாந்தமும் தயவுமுள்
ளது; அன்புக்குப் பொறாமையில்லை;
அன்பு தன்னைப் புகழாது, இறுமாப்பா
5 யிராது, அயோக்கியமானதைச் செய்
யாது, தற்பொழிவை நாடாது, சினம
6 டையாது, தீங்கு நினையாது, அநியா
யத்தில் சந்தோஷப்படாமல், சத்தியத்
7 தில் சந்தோஷப்படும். சகலத்தையும்
தாங்கும், சகலத்தையும் விசுவாசிக்கும்,
சகலத்தையும் நம்பும், சகலத்தையும்
சகிக்கும்.
8 அன்பு ஒருக்காலும் ஒழியாது. தீர்க்
கதரிசனங்களானாலும் ஒழிந்துபோம்,
அந்நிய பாஷைகளானாலும் ஓய்ந்து
போம், அறிவானாலும் ஒழிந்துபோம்.
9 நம்முடைய அறிவு குறைவுள்ளது, நாம்
தீர்க்கதரிசனஞ் சொல்லுதலும் குறை
10 வுள்ளது. நிறைவானது வரும்போது
11 குறைவானது ஒழிந்துபோம். நான் குழ
ந்தையாயிருந்தபோது குழந்தையைப்
போலப் பேசினேன், குழந்தையைப்
போலச் சிந்தித்தேன், குழந்தையைப்
போல யோசித்தேன்; நான் புருஷனான
போதோ குழந்தைக்கேற்றவைகளை ஒழி
12 த்துவிட்டேன். இப்பொழுது கண்ணாடி
யிலே நிழலாட்டமாய்ப் பார்க்கிறோம்,
அப்பொழுது முகமுகமாய்ப் பார்ப்
போம்; இப்பொழுது நான் குறைந்த
அறிவுள்ளவன், அப்பொழுது நான் அறி
யப்பட்டிருக்கிறபடியே அறிந்துகொள்
ளுவேன்.
13 இப்பொழுது விசுவாசம், நம்பிக்கை,
அன்பு இம்மூன்றும் நிலைத்திருக்கிறது;
இவைகளில் அன்பே பெரியது.

14 அன்பை நாடுங்கள்; ஞானவரங்
களையும் விரும்புங்கள்; விசேஷமாய்த்
தீர்க்கதரிசன வரத்தை விரும்புங்கள்.
2 ஏனெனில், அந்நியபாஷையில் பேசு
கிறவன், ஆவியினாலே இரகசியங்களைப்
பேசினாலும், அவன் பேசுகிறதை ஒரு
வனும் அறியாதிருக்கிறபடியினாலே,
அவன் மனுஷரிடத்தில் பேசாமல்,
தேவனிடத்தில பேசுகிறான். தீர்க்க 3
தரிசனஞ் சொல்லுகிறவனோ மனுஷ
ருக்கு பக்திவிருத்தியும், புத்தியும், ஆறு
தலும் உண்டாகத்தக்கதாகப் பேசுகி
றான். அந்நியபாஷையில் பேசுகிற 4
வன் தனக்கே பக்திவிருத்தி உண்டாகப்
பேசுகிறான்; தீர்க்கதரிசனஞ் சொல்லு
கிறவனோ சபைக்கு பக்திவிருத்தி உண்
டாகப் பேசுகிறான். நீங்களெல்லாரும் 5
அந்நியபாஷைகளைப் பேசும்படி விரும்
புகிறேன்; ஆகிலும், அந்நியபாஷை
களில் பேசுகிறவன் சபைக்கு பக்தி
விருத்தி உண்டாகும்படிக்கு அர்த்தத்
தையும் சொல்லாவிட்டால், தீர்க்கதரி
சனஞ் சொல்லுகிறவன் அவனிலும்
மேன்மையுள்ளவன்; ஆதலால் நீங்கள்
தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறவர்களாக
வேண்டுமென்று அதிகமாய் விரும்பு
கிறேன்.
மேலும், சகோதரரே, நான் உங் 6
களிடத்தில் வந்து உங்களுக்கு இரகசி
யங்களை வெளிப்படுத்துவதற்காவது,
அறிவுண்டாக்குவதற்காவது, தீர்க்கதரி
சனத்தை அறிவிக்கிறதற்காவது, போத
கத்தைப் போதிக்கிறதற்காவது ஏதுவா
னதைச் சொல்லாமல், அந்நியபாஷை
களில் பேசினால் என்னாலே உங்களுக்
குப் பிரயோஜனம் என்ன? அப்படியே 7
புல்லாங்குழல், சுரமண்டலம் முதலா
கிய சத்தமிடுகிற உயிரில்லாத வாத்தி
யங்கள் தொனிகளில் வித்தியாசம்
காட்டாவிட்டால், குழலாலே ஊதப்
படுகிறதும், சுரமண்டலத்தாலே வாசிக்
கப்படுகிறதும் இன்னதென்று எப்படித்
தெரியும்? அந்தப்படி எக்காளமும் 8
விளங்காத சத்தமிட்டால் எவன் யுத்
தத்திற்கு ஆயத்தம்பண்ணுவான்? அது 9
போல, நீங்களும் தெளிவான பேச்சை
நாவினால் வசனியாவிட்டால் பேசப்
பட்டது இன்னதென்று எப்படித் தெரி
யும்? ஆகாயத்தில் பேசுகிறவர்களாயி
ருப்பீர்களே. உலகத்திலே எத்தனையோ 10
விதமான பாஷைகள் உண்டாயிருக்

இறது, அவைகளில் ஒன்றும் அர்த்தமில்
11 லாததல்ல. ஆயினும், பாஷையின்
கருத்தை நான் அறியாமலிருந்தால்,
பேசுகிறவனுக்கு அந்நியனாயிருப்பேன்,
பேசுகிறவனும் எனக்கு அந்நியனாயி
ருப்பான்.
12 நீங்களும் ஆவிக்குரிய வரங்களை
நாடுகிறவர்களானபடியால், சபைக்கு
பக்தி விருத்தி உண்டாகத்தக்கதாக
அவைகளில் தேறும்படி நாடுங்கள்.
13 அந்தப்படி அந்நியபாஷையில் பேசு
கிறவன் அதின் அர்த்தத்தையும் சொல்
லத்தக்கதாக விண்ணப்பம் பண்ணக்
14 கடவன். என்னத்தினாலெனில், நான்
அந்நியபாஷையிலே விண்ணப்பம்பண்
ணினால், என் ஆவி விண்ணப்பம்பண்
ணுமேயன்றி, என் கருத்து பயனற்றதா
15 யிருக்கும். இப்படியிருக்க: செய்ய
வேண்டுவதென்ன? நான் ஆவியோடும்
விண்ணப்பம்பண்ணுவேன், கருத்தோ
டும் விண்ணப்பம்பண்ணுவேன்; நான்
ஆவியோடும் பாடுவேன், கருத்தோடும்
16 பாடுவேன். இல்லாவிட்டால், நீ ஆவி
யோடு ஸ்தோத்திரம் பண்ணும்போது,
கல்லாதவன் உன் ஸ்தோத்திரத்திற்கு
ஆமென்என்றுஎப்படிச்சொல்லுவான்?
நீ பேசுகிறது இன்னதென்று அவன்
17 அறியானே. நீ நன்றாய் ஸ்தோத்திரம்
பண்ணுகிறாய், ஆகிலும் மற்றவன் பக்தி
18 விருத்தி யடையமாட்டானே. உங்க
ளெல்லாரிலும் நான் அதிகமாய்ப் பா
ஷைகளைப் பேசுகிறேன், இதற்காக என்
19 தேவனை ஸ்தோத்திரிக்கிறேன். அப்
படியிருந்தும், நான் சபையிலே அந்நிய
பாஷையில் பதினாயிரம் வார்த்தைகளைப்
பேசுகிறதிலும், மற்றவர்களை உணர்த்
தும்படி என் கருத்தோடே ஐந்து
வார்த்தைகளைப் பேசுகிறதே எனக்கு
20 அதிக விருப்பமாயிருக்கும். சகோத
ரரே, நீங்கள் புத்தியிலே குழந்தை
யிராதேயுங்கள்; துர்க்குணத்திலே குழந்
தைகளாயும், புத்தியிலோ தேறினவர்
களாயுமிருங்கள்.
21 மறுபாஷைக்காரராலும், மறு உதடு
களாலும் இந்த ஜனங்களிடத்தில் பேசு
வேன்; ஆகிலும் அவர்கள் எனக்குச்
செவிகொடுப்பதில்லையென்று கர்த்தர்
சொல்லுகிறார் என்று வேதத்தில் எழுதி
யிருக்கிறதே. அப்படியிருக்க, அந்நிய 22
பாஷைகள் விசுவாசிகளுக்கு அடை
யாளமாயிராமல், அவிசுவாசிகளுக்கு
அடையாளமாயிருக்கிறது; தீர்க்கதரி
சனமோ அவிசுவாசிகளுக்கு அடையா
ளமாயிராமல், விசுவாசிகளுக்கு அடை
யாளமாயிருக்கிறது.
ஆகையால், சபையாரெல்லாரும் 23
ஏகமாய்க் கூடிவந்து, எல்லாரும் அந்
நியபாஷைகளிலே பேசிக்கொள்ளும்
போது, கல்லாதவர்களாவது, அவிசுவா
சிகளாவது உள்ளே பிரவேசித்தால்,
அவர்கள் உங்களைப் பைத்தியம் பிடித்
தவர்களென்பார்களல்லவா? எல்லா 24
ரும் தீர்க்கதரிசனஞ்சொல்லுகையில்,
அவிசுவாசியொருவன், அல்லது கல்லா
தவனொருவன், உள்ளேபிரவேசித்தால்,
அவன் எல்லாராலும் உணர்த்துவிக்கப்
பட்டும், எல்லாராலும் நிதானிக்கப்பட்
டும் இருப்பான். அவனுடைய இருத 25
யத்தின் அந்தரங்கங்களும் வெளியரங்
கமாகும்; அவன் முகங்குப்புறவிழுந்து,
தேவனைப் பணிந்துகொண்டு, தேவன்
மெய்யாய் உங்களுக்குள்ளே இருக்கிறா
ரென்று அறிக்கையிடுவான்.
நீங்கள் கூடிவந்திருக்கிறபோது, 26
உங்களில் ஒருவன் சங்கீதம் பாடுகி
றான், ஒருவன் போதகம்பண்ணுகிறான்,
ஒருவன் அந்நியபாஷையைப் பேசுகி
றான், ஒருவன் இரகசியத்தை வெளிப்
படுத்துகிறான், ஒருவன் வியாக்கியா
னம்பண்ணுகிறான். சகோதரரே,
இது என்ன? சகலமும் பக்திவி
ருத்திக்கேதுவாகச் செய்யப்படக்கட
வது. யாராவது அந்நியபாஷையிலே 27
பேசுகிறதுண்டானால், அது இரண்டு
பேர்மட்டில், அல்லது மிஞ்சினால் மூன்
றுபேர்மட்டில் அடங்கவும், அவர்கள்
ஒவ்வொருவராய்ப் பேசவும், ஒருவன்
அர்த்தத்தைச் சொல்லவும்வேண்டும்.
அர்த்தஞ்சொல்லுகிறவனில்லாவிட் 28
டால், சபையிலே பேசாமல், தனக்கும்
தேவனுக்கும் தெரியப் பேசக்கடவன்.
தீர்க்கதரிசிகள் இரண்டுபேராவது மூன் 29

றுபேராவது பேசலாம், மற்றவர்கள்
30 நிதானிக்கக்கடவர்கள். அங்கே உட்
கார்ந்திருக்கிற மற்றொருவனுக்கு ஏதா
கிலும் வெளிப்படுத்தப்பட்டால், முந்
திப் பேசினவன் பேசாமலிருக்கக்கட
31 வன். எல்லாரும் கற்கிறதற்கும் எல்
லாரும் தேறுகிறதற்கும், நீங்கள் அனை
வரும் ஒவ்வொருவராகத் தீர்க்கதரிச
32 னஞ் சொல்லலாம். தீர்க்கதரிசிகளு
டைய ஆவிகள் தீர்க்கதரிசிகளுக்கு
33 அடங்கியிருக்கிறதே. தேவன் கலகத்
திற்கு தேவனாயிராமல், சமாதானத்
திற்கு தேவனாயிருக்கிறார்; பரிசுத்தவா
ன்களுடைய சபைகளெல்லாவற்றிலே
யும் அப்படியே இருக்கிறது.
34 சபைகளில் உங்கள் ஸ்திரீகள் பேசா
மலிருக்கக்கடவர்கள்; பேசும்படிக்கு
அவர்களுக்கு உத்தரவில்லை, அவர்கள்
அமர்ந்திருக்கவேண்டும்; வேதமும்
35 அப்படியே சொல்லுகிறது. அவர்கள்
ஒரு காரியத்தைக் கற்றுக்கொள்ள விரு
ம்பினால், வீட்டிலே தங்கள் புருஷ
ரிடத்தில் விசாரிக்கக்கடவர்கள்; ஸ்திரீ
கள் சபையிலே பேசுகிறது அயோக்
கியமாயிருக்குமே.
36 தேவவசனம் உங்களிடத்திலிருந்தா
புறப்பட்டது? அது உங்களிடத்துக்கு
37 மாத்திரமா வந்தது? ஒருவன் தன்
னைத் தீர்க்கதரிசியென்றாவது, ஆவி
யைப் பெற்றவனென்றாவது எண்ணி
னால், நான் உங்களுக்கு எழுதுகிறவை
கள் கர்த்தருடைய கற்பனைகளென்று
38 அவன் ஒத்துக்கொள்ளக்கடவன். ஒரு
வன் அறியாதவனாயிருந்தால், அவன்
அறியாதவனாயிருக்கட்டும்.
39 இப்படியிருக்க, சகோதரரே, தீர்க்க
தரிசனஞ்சொல்ல நாடுங்கள், அந்நிய
பாஷைகளைப் பேசுகிறதற்கும் தடை
40 பண்ணாதிருங்கள். சகலமும் நல்லொ
ழுக்கமாயும் கிரமமாயும் செய்யப்ப
டக்கடவது.

15 அன்றியும், சகோதரரே, நான் உங்
களுக்குப் பிரசங்கித்த சுவிசேஷத்தை
மறுபடியும் உங்களுக்குத் தெரியப்ப
டுத்துகிறேன்; நீங்களும் அதை ஏற்றுக்
கொண்டு, அதிலே நிலைத்திருக்கிறீர்கள்.
நான் உங்களுக்குப் பிரசங்கித்த பிர 2
காரமாய், நீங்கள் அதைக் கைக்கொண்
டிருந்தால், அதினாலே நீங்கள் இரட்சிக்
கப்படுவீர்கள்; மற்றப்படி உங்கள்
விசுவாசம் விருதாவாயிருக்குமே.
நான் அடைந்ததும் உங்களுக்குப் 3
பிரதானமாக ஒப்புவித்ததும் என்ன
வென்றால், கிறிஸ்துவானவர் வேதவாக்
கியங்களின்படி நமது பாவங்களுக்காக
மரித்து, அடக்கம்பண்ணப்பட்டு, 4
வேதவாக்கியங்களின்படி மூன்றாம்நா
ளில் உயிர்த்தெழுந்து, கேபாவுக்கும், 5
பின்பு பன்னிருவருக்கும் தரிசனமா
னார். அதன்பின்பு அவர் ஐந்நூறுபே 6
ருக்கு அதிகமான சகோதரருக்கும் ஒரே
வேளையில் தரிசனமானார்; அவர்களில்
அநேகர் இந்நாள்வரைக்கும் இருக்கி
றார்கள், சிலர்மாத்திரம் நித்திரையடை
ந்தார்கள். பின்பு யாக்கோபுக்கும், 7
அதன்பின்பு அப்போஸ்தலரெல்லாருக்
கும் தரிசனமானார். எல்லாருக்கும் 8
பின்பு, அகாலப்பிறவிபோன்ற எனக்
கும் தரிசனமானார். நான் அப் 9
போஸ்தலரெல்லாரிலும் சிறியவனாயி
ருக்கிறேன்; தேவனுடைய சபையைத்
துன்பப்படுத்தினதினாலே, நான் அப்
போஸ்தலனென்று பேர்பெறுவதற்கும்
பாத்திரன் அல்ல. ஆகிலும் நான் இரு 10
க்கிறது தேவகிருபையினாலே இருக்கி
றேன்; அவர் எனக்கு அருளிய கிருபை
விருதாவாயிருக்கவில்லை; அவர்களெல்
லாரிலும் நான் அதிகமாய்ப் பிரயாசப்
பட்டேன்; ஆகிலும் நான் அல்ல, என்
னுடனே இருக்கிற தேவகிருபையே
அப்படிச் செய்தது. ஆகையால் நா 11
னாகிலும் அவர்களாகிலும் இப்படியே
பிரசங்கித்து வருகிறோம், நீங்களும்
இப்படியே விசுவாசித்திருக்கிறீர்கள்.
கிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுந் 12
தாரென்று பிரசங்கிக்கப்பட்டிருக்க,
மரித்தோரின் உயிர்த்தெழுதலில்லை
யென்று உங்களில் சிலர் எப்படிச் சொ
ல்லலாம்? மரித்தோரின் உயிர்த்தெ 13
ழுதலில்லாவிட்டால், கிறிஸ்துவும் எழு
ந்திருக்கவில்லையே. கிறிஸ்து எழுந்தி 14
ருக்கவில்லையென்றால், எங்கள் பிரசங்

கமும் விருதா, உங்கள் விசுவாசமும்
15 விருதா. மரித்தோர் உயிர்த்தெழாவிட்
டால், தேவன் எழுப்பாத கிறிஸ்துவை
அவர் எழுப்பினாரென்று நாங்கள் தேவ
னைக்குறித்துச் சாட்சி சொன்னதினாலே,
தேவனுக்காகப் பொய்ச்சாட்சி சொல்
லுகிறவர்களாகவும்காணப்படுவோமே.
16 மரித்தோர் உயிர்த்தெழாவிட்டால், கி
17 றிஸ்துவும் எழுந்திருக்கவில்லை. கிறி
ஸ்து எழுந்திராவிட்டால், உங்கள் விசு
வாசம் வீணாயிருக்கும்; நீங்கள் இன்
னும் உங்கள் பாவங்களில் இருப்பீர்
18 கள். கிறிஸ்துவுக்குள் நித்திரையடை
ந்தவர்களும் கெட்டிருப்பார்களே.
19 இம்மைக்காகமாத்திரம் நாம் கிறிஸ்து
வின்மேல் நம்பிக்கையுள்ளவர்களாயி
ருந்தால், எல்லா மனுஷரைப்பார்க்கி
லும் பரிதபிக்கப்படத்தக்கவர்களாயி
ருப்போம்.
20 கிறிஸ்துவோ மரித்தோரிலிருந்தெழு
ந்து, நித்திரையடைந்தவர்களில் முதற்
21 பலனானார். மனுஷனால் மரணம் உண்
டானபடியால், மனுஷனால் மரித்
தோரின் உயிர்த்தெழுதலும் உண்டா
22 யிற்று. ஆதாமுக்குள் எல்லாரும் மரிக்
கிறதுபோல, கிறிஸ்துவுக்குள் எல்லா
23 ரும் உயிர்ப்பிக்கப்படுவார்கள். அவன
வன் தன்தன் வரிசையிலே உயிர்ப்பிக்
கப்படுவான், முதற்பலனானவர் கிறி
ஸ்து; பின்பு அவர் வருகையில் அவ
ருடையவர்கள் உயிர்ப்பிக்கப்படுவார்
கள்.
24 அதன்பின்பு முடிவு உண்டாகும்;
அப்பொழுது அவர் சகல துரைத்தனத்
தையும் சகல அதிகாரத்தையும் வல்ல
மையையும் பரிகரித்து, தேவனும்
பிதாவுமாயிருக்கிறவருக்கு ராஜ்யத்தை
25 ஒப்புக்கொடுப்பார். எல்லாச் சத்து
ருக்களையும் தமது பாதத்திற்குக் கீழாக்
கிப்போடும்வரைக்கும், அவர் ஆளுகை
26 செய்யவேண்டியது. பரிகரிக்கப்படும்
27 கடைசிச் சத்துரு மரணம். சகலத்
தையும் அவருடைய பாதத்திற்குக் கீழ்
ப்படுத்தினாரே; ஆகிலும் சகலமும் அவ
ருக்குக் கீழ்ப்படுத்தப்பட்டதென்று
சொல்லியிருக்கும்போது, சகலத்தை
யும் அவருக்குக் கீழ்ப்படுத்தினவர் கீழ்
ப்படுத்தப்படவில்லையென்பது வெளிய
ரங்கமாயிருக்கிறது. சகலமும் அவ 28
ருக்குக் கீழ்ப்பட்டிருக்கும்போது, தே
வனே சகலத்திலும் சகலமுமாயிருப்ப
தற்கு, குமாரன் தாமும் தமக்குச் சக
லத்தையும் கீழ்ப்படுத்தினவருக்குக்
கீழ்ப்பட்டிருப்பார்.
மேலும் மரித்தோர் உயிர்த்தெழா 29
விட்டால், மரித்தவர்களுக்காக ஞானஸ்
நானம் பெறுகிறவர்கள் என்னசெய்
வார்கள்? மரித்தவர்களுக்காக ஏன்
ஞானஸ்நானம் பெறுகிறார்கள்? நாங் 30
களும் ஏன் எந்நேரமும் நாசமோசத்
திற்கு ஏதுவாயிருக்கிறோம்? நான் அநு 31
தினமும் சாகிறேன்; அதை நம்முடைய
கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவினால்
உங்களைக்குறித்து, நான் பாராட்டுகிற
மேன்மையைக்கொண்டு சத்தியமாய்ச்
சொல்லுகிறேன். நான் எபேசுவிலே 32
துஷ்டமிருகங்களுடனே போராடினே
னென்று மனுஷர் வழக்கமாய்ச் சொல்
லுகிறேன்; அப்படிப் போராடினதினா
லே எனக்குப் பிரயோஜனமென்ன?
மரித்தோர் உயிர்த்தெழாவிட்டால்,
புசிப்போம் குடிப்போம், நாளைக்குச்
சாவோம் என்று சொல்லலாமே? மோ 33
சம் போகாதிருங்கள்; ஆகாத சம்பா
ஷணைகள் நல்லொழுக்கங்களைக் கெடு
க்கும். நீங்கள் பாவஞ்செய்யாமல் நீ 34
திக்கேற்க விழித்துக்கொண்டு, தெளிந்த
வர்களாயிருங்கள்; சிலர் தேவனைப்ப
ற்றி அறிவில்லாதிருக்கிறார்களே; உங்க
ளுக்கு வெட்கமுண்டாக இதைச் சொல்
லுகிறேன்.
ஆகிலும், மரித்தோர் எப்படி எழுந் 35
திருப்பார்கள், எப்படிப்பட்ட சரீரத்
தோடே வருவார்களென்று ஒருவன்
சொல்வானாகில், புத்தியீனனே, நீ வி 36
தைக்கிற விதை செத்தாலொழிய உயிர்
க்கமாட்டாதே. நீ விதைக்கிறபோது, 37
இனி உண்டாகும் மேனியை விதை
யாமல், கோதுமை, அல்லது மற்றொரு
தானியத்தினுடைய வெறும் விதை
யையே விதைக்கிறாய். அதற்கு தேவன் 38
தமது சித்தத்தின்படியே மேனியைக்

கொடுக்கிறார்; விதைவகைகள் ஒவ்
வொன்றிற்கும் அததற்கேற்ற மேனி
யையே கொடுக்கிறார்.
39 எல்லா மாம்சமும் ஒரேவிதமான
மாம்சமல்ல; மனுஷருடைய மாம்சம்
வேறே, மிருகங்களுடைய மாம்சம்
வேறே, மச்சங்களுடைய மாம்சம்
வேறே, பறவைகளுடைய மாம்சம்
40 வேறே. வானத்துக்குரிய மேனிகளு
முண்டு, பூமிக்குரிய மேனிகளுமுண்டு,
வானத்துக்குரிய மேனிகளுடைய மகி
மையும் வேறே, பூமிக்குரிய மேனி
41 களுடைய மகிமையும் வேறே; சூரி
யனுடைய மகிமையும் வேறே, சந்திர
னுடைய மகிமையும் வேறே, நட்சத்
திரங்களுடைய மகிமையும் வேறே;
மகிமையிலே நட்சத்திரத்துக்கு நட்சத்
திரம் விசேஷித்திருக்கிறது.
42 மரித்தோரின் உயிர்த்தெழுதலும்
அப்படியே இருக்கும். அழிவுள்ளதாய்
விதைக்கப்படும், அழிவில்லாததாய்
43 எழுந்திருக்கும்; கனவீனமுள்ளதாய்
விதைக்கப்படும், மகிமையுள்ளதாய்
எழுந்திருக்கும்; பலவீனமுள்ளதாய் வி
தைக்கப்படும், பலமுள்ளதாய் எழுந்தி
44 ருக்கும். ஜென்மசரீரம் விதைக்கப்ப
டும், ஆவிக்குரிய சரீரம் எழுந்திருக்
கும்; ஜென்ம சரீரமுமுண்டு, ஆவிக்கு
45 ரிய சரீரமுமுண்டு. அந்தப்படியே
முந்தின மனுஷனாகிய ஆதாம் ஜீவாத்து
மாவானான் என்றெழுதியிருக்கிறது; பிந்
தின ஆதாம் உயிர்ப்பிக்கிற ஆவியானார்.
46 ஆகிலும் ஆவிக்குரிய சரீரம் முந்தின
தல்ல, ஜென்மசரீரமே முந்தினது; ஆவி
47 க்குரிய சரீரம் பிந்தினது. முந்தின
மனுஷன் பூமியிலிருந்துண்டான மண்
ணானவன்; இரண்டாம் மனுஷன் வா
48 னத்திலிருந்துவந்த கர்த்தர். மண்ணா
னவன் எப்படிப்பட்டவனோ மண்ணா
னவர்களும் அப்படிப்பட்டவர்களே;
வானத்துக்குரியவர் எப்படிப்பட்டவ
ரோ, வானத்துக்குரியவர்களும் அப்ப
49 டிப்பட்டவர்களே. மேலும் மண்ணா
னவனுடைய சாயலை நாம் அணிந்திருக்
கிறதுபோல, வானவருடைய சாயலை
யும் அணிந்துகொள்வோம்.

சகோதரரே, நான் சொல்லுகிறதென் 50
னவெனில், மாம்சமும் இரத்தமும்
தேவனுடைய ராஜ்யத்தைச் சுதந்தரிக்க
மாட்டாது; அழிவுள்ளது அழியாமை
யைச் சுதந்தரிப்பதுமில்லை. இதோ, 51
ஒரு இரகசியத்தை உங்களுக்கு அறி
விக்கிறேன்; நாமெல்லாரும் நித்திரைய
டைவதில்லை; ஆகிலும் கடைசி எக்கா
ளம் தொனிக்கும்போது, ஒரு நிமிஷத்
திலே, ஒரு இமைப்பொழுதிலே, நாமெ
ல்லாரும் மறுரூபமாக்கப்படுவோம்.
எக்காளம் தொனிக்கும், அப்பொழுது 52
மரித்தோர் அழிவில்லாதவர்களாய் எ
ழுந்திருப்பார்கள், நாமும் மறுரூபமாக்
கப்படுவோம். அழிவுள்ளதாகிய இது 53
அழியாமையையும், சாவுக்கேதுவாகிய
இது சாவாமையையும் தரித்துக்கொள்
ளவேண்டும்.
அழிவுள்ளதாகிய இது அழியாமை 54
யையும், சாவுக்கேதுவாகிய இது சாவா
மையையுந்தரித்துக்கொள்ளும்போது,
மரணம் ஜெயமாக விழுங்கப்பட்டது
என்று எழுதியிருக்கிற வார்த்தை நிறை
வேறும். மரணமே! உன் கூர் எங்கே? 55
பாதாளமே! உன் ஜெயம் எங்கே? மர 56
ணத்தின் கூர் பாவம், பாவத்தின் பெலன்
நியாயப்பிரமாணம். நம்முடைய கர்த் 57
தராகிய இயேசுகிறிஸ்துவினாலே நமக்கு
ஜெயங்கொடுக்கிற தேவனுக்கு ஸ்தோத்
திரம்.
ஆகையால், எனக்குப் பிரியமான 58
சகோதரரே, கர்த்தருக்குள் நீங்கள் படு
கிற பிரயாசம் விருதாவாயிராதென்று
அறிந்து, நீங்கள் உறுதிப்பட்டவர்களா
யும், அசையாதவர்களாயும், கர்த்தரு
டைய கிரியையிலே எப்பொழுதும்
பெருகுகிறவர்களாயும் இருப்பீர்களாக.
பரிசுத்தவான்களுக்காகச் சேர்க்கப் 16
படும் தர்மப்பணத்தைக்குறித்து நான்
கலாத்தியாநாட்டுச்சபைகளுக்குப் பண்
ணின திட்டத்தின்படியே நீங்களும் செ
ய்யுங்கள். நான் வந்திருக்கும்போது 2
பணஞ் சேர்க்குதல் இராதபடிக்கு, உங்
களில் அவனவன் வாரத்தின் முதல்
நாள்தோறும், தன் தன் வரவுக்குத்தக்க
தாக எதையாகிலும் தன்னிடத்திலே

